# வேண்டும் எனக்கு வளர்ச்சி

வெற்றியை நோக்கிய சுயமுன்னேற்றப் பயணம்

**எஸ். ராமகிருஷ்ணன்**

தமிழில்: சௌரி வரதராஜன்



முன்னேற்றம் என் மூச்சு...
இதை இதயத்தில் பதித்துவிட்டால்,
எல்லோருக்கும் எடுத்த காரியம்
யாவிலும் வெற்றியே கிடைக்கும்.

## பொருளடக்கம்

# அணிந்துரை

அமெரிக்காவில் சமீபத்தில் ஏற்பட்ட பொருளாதார நெருக்கடிகள் மேற்கத்திய தலைமையின் தரம், கல்வி பற்றி பல சந்தேகங்களைக் கிளப்பியுள்ளன. தார்மிக, ஒழுக்கம் சார்ந்த வழிகாட்டுதலுக்கு கீழைத்தேய நாடுகளை, குறிப்பாக இந்தியாவை நோக்கி உலகம் திரும்ப ஆரம்பித்துள்ளது. ஜனநாயகத்தன்மை, அறிவு வளம், தகவல் தொழில்நுட்பம் உள்ளிட்ட தொழில் நுட்ப வளர்ச்சி போன்ற அம்சங்களை இந்தியத் தலைமை பெற்றுள்ளது. அதன் மூலம் வர்த்தக இலக்குகளை மட்டுமல்லாமல் தார்மிகரீதியில் மனித குலத்தின் நன்மையையும் கருத்தில் கொண்டு இயங்கும் ஒன்றாகப் பரிணமித்திருக்கிறது. தார்மிக ஒழுங்கு, முதலீட்டாளர் களுக்குப் பாதுகாப்பு, கார்ப்பரேட் நிர்வாகம், சமூகப் பொறுப் புணர்வு போன்ற பெரிய விஷயங்களுக்கு முக்கியத்துவம் தரப்படும் அதே நேரத்தில் தனி மனித நலனே அதன் மைய அம்சமாக இருக்கிறது. தனி நபர்களுக்கு வளர்ச்சி தேவை. உடல் ரீதியாக மட்டுமல்ல; மனம், ஒழுக்கம், சமூகம், பொருளாதாரம், குடும்பம், ஆன்மிகம் என பல தளங்களில் தனி மனிதர்களுக்கு வளர்ச்சி மிகவும் தேவை. வளர்ந்து வரும் பொருளாதாரமான இந்தியா, வளர்ச்சி அடைந்த நாடுகளுடன் இணைந்து செயல்படும்போது, வளர்ச்சியை முன்னெடுக்கும் நபர் எப்படி அளவிடப்படுகிறார் என்பது முக்கியம்.

ஆக்ஸிஜன் வெளியீடாக ராம கிருஷ்ணனால் எழுதப்பட்ட 'யு கேன் பிகம் அ கம்ப்ளீட் மேனேஜர்' (நீங்கள் ஒரு முழுமையான

நிர்வாகியாக ஆக முடியும்) என்ற நூலுக்கு அடுத்ததாக எழுதப்பட்டிருக்கும் இந்த நூல் தொழில் வாழ்க்கையில் முன்னேற விரும்புபவர்களுக்கு ஆக்ஸிஜன் போல் முக்கியமான ஒன்றாகும். கற்றுக் கொள்ளுதல், வளர்ச்சி அடைதல், பக்குவமடைதல், பங்களித்தல் என்ற இந்த நான்கு அம்சங்களைப் பற்றி பல்வேறு கதாபாத்திரங்கள் மூலம் இதில் தெளிவாக விளக்கியிருக்கிறார். வாசகர்கள் ஒவ்வொருவரும் அதில் ஏதாவது ஒன்றுடன் தங்களை வெகுவாக அடையாளம் கண்டு கொள்ள முடியும்.

ஒரு பேராசிரியர் என்ற வகையில் தொடர்ந்து எதிர்காலம் பற்றிய சிந்தனையைக் கொண்டவராகவும் உலகின் எதிர்காலத் தலைவர் களை உருவாக்கும் வாய்ப்பு உடையவராகவும் இருக்கிறார். அது அவரை மனத்தளவில் என்றும் இளமையுடன் திகழ வைக்கிறது. ஒவ்வொரு நிகழ்வுகளும் புதிது புதிதாகக் கற்றுக் கொள்ளவும் வைக்கின்றன.

திறமையையும் தகுதியையும் வளர்த்துக் கொண்ட பிறகும் பணி வுடன் இருக்க வேண்டும்; ஆர்வத்துடன் செயல்பட வேண்டும்; நேர்மையான வழியில் முன்னேற வேண்டும்; வெளிப்படை யான ஒருங்கிணைப்பு பெற்றிருக்க வேண்டும் என்ற அம்சங்கள் இந்த நூலில் சுவாரசியமான கதைகள், மேற்கோள்கள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

ராம கிருஷ்ணன் கதை சொல்வதில் தேர்ந்தவர். ஒவ்வொரு அத்தியாயத்தின் முடிவிலும் முக்கியமான படிப்பினைகளைத் தொகுத்துத் தந்திருக்கிறார். நடத்தை வழிமுறைகளை பொதுமைப் படுத்தி பி.சி.ஜி அட்டவணை (போஸ்டன் கன்சல்டிங் க்ரூப் அட்டவணை) போல் முதலிடம், இரண்டாமிடம், மூன்றாமிடம், நான்காமிடம் என்று தெளிவாகப் புரியும் வகையில் விளக்கி யிருக்கிறார். அவை இந்தப் புத்தகத்தை விலை மதிப்பு மிகுந்ததாக ஆக்கியிருக்கின்றன.

வர்த்தகத்தில் மக்கள், செயல்பாடு, தொழில் நுட்பம் ஆகிய மூன்றும் பூமி, உயர் நோக்கம், லாபம் ஆகிய மூன்றின் வளர்ச்சிக்குப் பேருதவி புரிய வேண்டும். இந்த விஷயங்களில் ஏதாவது ஒன்றில் அல்லது அனைத்திலும் ஈடுபடுபவர்களுக்கு இந்த நூல் கட்டாயம் படித்து உள்வாங்கிக் கொள்ள வேண்டிய ஒன்றாகும். அறிவுத் திறமை மட்டுமல்ல, உணர்ச்சிபூர்வ

ஆளுமை, சமூக ஆளுமை, ஆன்மிக ஆளுமை என அனைத்து அம்சங்களும் இன்று ஒரு தலைவருக்குத் தேவை.

'இன்னொரு மெழுகுவர்த்தியை ஏற்றுவதன் மூலம் இந்த உலகம் மேலும் பிரகாசமடைகிறது' என்று அப்துல் கலாம் சொன்னது போல், ராம கிருஷ்ணனின் இந்த நூல் உலகை மேலும் உற்சாகமும் உவகையும் கொண்டதாக ஆக்கும் என்பதில் சந்தேகமே இல்லை.

வர்த்தகக் கல்லூரி மாணவர், மேலாளர், தலைவர், கூட்டாளிகள் என அனைவரும் கட்டாயம் படிக்க வேண்டிய நூல். குடும்ப வாழ்க்கையிலும் தொழில் வாழ்க்கையிலும் வளர்ச்சியும் மகிழ்ச்சியும் பெற இந்த நூலைப் பேருவகையுடன் பரிந்துரைக்கிறேன். எளிதில் நடைமுறைப்படுத்த முடிந்த அருமையான கோட்பாடுகள் கொண்ட இந்த நூலை என்னைப் போலவே நீங்களும் ரசிப்பீர்கள் என்று நம்புகிறேன்.

**பேரா. பாலா வி. பாலசந்திரன்**
ஜே.எல்.கெல்லாக் நார்த்வெஸ்டர்ன் யுனிவர்சிட்டி,
இல்லினாய்,
கிரேட் லேக்ஸ் இன்ஸ்டிட்டியூட் ஆஃப் மேனேஜ்மெண்ட்,
சென்னை, நிறுவனர் - முதல்வர் (டீன்)

# முன்னுரை

'திட்டமிட்ட செயல்பாடுகளைவிட எதிர்பாராத சம்பவங்கள் நம் வாழ்க்கையை வெகுவாகப் பாதிக்கின்றன. நான் எழுத ஆரம்பித்தது தற்செயலாகத்தான். ஆனால், இன்று...' - என் எழுத்துப் பணிக்குப் பாராட்டுத் தெரிவிக்கப்பட்ட விழா ஒன்றில் நான் ஆற்றிய நன்றியுரையின் தொடக்க வரிகள் இவை. சுமார் 20 வருடங்களுக்கு மேலாக தொழில் வாழ்க்கையில் வெற்றிகரமாக இருந்து வந்திருக்கிறேன். மிகச் சிறிய நிறுவனத்தில் ஆரம்பித்து பிரமாண்ட பன்னாட்டு நிறுவனங்கள் வரை பணி புரிந்திருக் கிறேன். தொடர்ந்து எழுதி வந்தது என் வெற்றிகளுக்குப் பெரும் உதவியாக இருந்திருக்கிறது. அனுபவங்களை நன்கு உள் வாங்கிக் கொள்ளவும் அதிலிருந்து கற்றுக் கொள்ளவும் பெரிதும் உதவியிருக்கிறது. அனுபவங்கள் நல்லவையாக இருந்தாலும் அல்லாதவையாக இருந்தாலும், அவையே நம் வாழ்க்கைத் தரத்தைத் தீர்மானிக்கின்றன என்று திடமாக நம்புகிறேன். அனுபவங்கள் நமக்குக் கற்றுக் கொடுக்கின்றன. நாம் அவற்றிலிருந்து எடுத்துக்கொள்பவை நம்மை மாற்றி அமைக் கின்றன. இன்று நான் பெற்ற வெற்றிகளுக்கு, அனுபவங்களில் இருந்து கற்றுக் கொண்டவையே காரணம். நான் கற்றுக் கொண்டவற்றைப் பிறருடன் பகிர்ந்து கொள்ள எளிய, சிறந்த வழி, அதை நூலாக எழுதுவதுதான்.

'யு கேன் பிகம் அ கம்ப்ளீட் மேனேஜர்' (நீங்கள் ஒரு முழுமையான நிர்வாகியாக ஆக முடியும்) என்ற நூலை 2003-ல் எழுதினேன்.

வளர்ந்துவரும் நிலையில் இருப்பவர்கள், நான் செய்த தவறு களில் இருந்து வெகு வேகமாகக் கற்றுக்கொண்டு முன்னேற உதவும் நோக்கில் அந்த நூலை எழுதியிருந்தேன். அதாவது, நான் பல வருடங்கள் பட்டுத் தெரிந்து கொண்டதை நீங்கள் சில மணி நேரங்களில் படித்தே தெரிந்துகொண்டுவிடவேண்டும் என்பதே என் நோக்கம். எழுத எழுத எனக்கும் பல புதிய விஷயங்கள் புரிய வந்தன. நான் எழுதும் விஷயங்களுக்கு நான் உண்மையாக நடக்க வேண்டும் என்ற பொறுப்புணர்வும் எனக்கு வந்தது. எழுத்துகள் கடந்த காலத்திலிருந்து என்னை விடுவித்திருக் கின்றன. கற்றல், வளர்ச்சி, பக்குவமடைதல், பங்களித்தல் இந்த நான்கு அம்சங்கள்தான் தொழில் வாழ்க்கையின் வெற்றிக்கு ஆதாரமாக இருக்கின்றன. இவை ஏதோ ஓரிரு காலகட்டத்தில் மட்டுமோ தனித்தனியாகவோ நடக்கும் செயல்கள் அல்ல. வாழ்நாள் முழுவதும் தொடர்ச்சியாக நிகழ்ந்து கொண்டே இருக்க வேண்டும். மாற்றத்தை விரும்பாத ஒன்று வளர்ச்சி அடைவதில்லை. வளர்ச்சி அடையாத ஒன்று மரித்துத்தான் போகும். உண்மையான நிபுணர் என்பவர் கற்பதையும், மேலே மேலே உயர்வதையும் ஒருபோதும் நிறுத்தவேமாட்டார். கற்றல் என்பது உண்மையில் நம் திறமைகளை உணர்ந்து கொள்ளுதலாகும். வளர்தல் என்பது நம் திறமைகளைப் பயன் படுத்துவதாகும். பக்குவமடைதல் என்பது நம் திறமைகளை மட்டுமல்லாது பிறருடைய திறமைகளையும் புரிந்துகொண்டு நடப்பதாகும்.

உங்கள் திறமையை நீங்கள் உணரும் போது வாழ்க்கையில் உயர்வீர்கள். பிறருடைய திறமையையும் புரிந்துகொள்ளும் போது வாழ்க்கையில் பக்குவமடைகிறீர்கள். கற்றுக்கொண்டு வளர்வது தான் பக்குவப்படுதல் என்பதை ஒருவர் புரிந்து கொள்ளும்போது, அவர் பிறருடைய வளர்ச்சிக்கும் உதவ ஆரம்பிக்கிறார். எவ்வளவு வேகமாக வளர்கிறோமோ அது நம் வெற்றியைத் தீர்மானிக்கும். எவ்வளவு நிதானமாக வளர்கிறோமோ அது நம் வாழ்க்கையின் மனநிறைவைத் தீர்மானிக்கும். வளர்ச்சி அடையும்போது உணர்ச்சிபூர்வமான சமநிலையும் அதிகரிக்க வேண்டும். பெற்றோர்கள் மூலம் உடல் சார்ந்த வளர்ச்சி ஒருவருக்குக் கிடைக் கிறது. ஆசிரியர்கள் மூலம் மனரீதியாகவும் அறிவுபூர்வமாகவும் வளர்ச்சி கிடைக்கிறது. வாழ்க்கை அனுபவங்கள் மூலம் மட்டுமே உணர்வுபூர்வமான வளர்ச்சி கிடைக்கிறது. அது இல்லாமல் ஒருவரால் துரிதமான வளர்ச்சியும் நிம்மதியும் அடையவே

முடியாது. என் முந்தைய நூலில் வாசகர்கள், என்னுடைய ஆளுமையையும் நான் வளர்ந்த விதத்தையும் பார்த்திருப்பார்கள். வாழ்க்கையில் நான் வளர்ந்துகொண்டே இருக்கிறேன். இந்தப் புத்தகத்தைப் படிக்கும் வாசகர்கள் மேலும் பல அம்சங்களைக் கற்றுக் கொள்ள முடியும் என்று நம்புகிறேன். வேலையில் சேர்வது, சக ஊழியர்களுடன் எப்படி நடந்து கொள்வது, மேலதிகாரியை எப்படிச் சமாளிப்பது, குடும்பத்தினரை எப்படிக் கையாள்வது என்பது தொடர்பான என் அனுபவம் சார்ந்த அனைத்து விஷயங்களையும் இந்த நூலில் விளக்கி இருக்கிறேன். உங்கள் வாழ்க்கையின் இலக்குகளை எளிதில் அடைய இவை நிச்சயம் உதவும்.

இந்த நூலை சில பிரதான கதாபாத்திரங்களை மையமாக வைத்து ஒரு கதை வடிவில் எழுதியிருக்கிறேன். வாழ்க்கையில் நான் கற்று கொண்ட விஷயங்களை அந்தக் கதாபாத்திரங்களின் அனுபவங்கள், உரையாடல்கள், ஆலோசனைகள் ஆகியவற்றின் மூலமாக விளக்கியிருக்கிறேன். எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் 'செய்ய வேண்டியவை - செய்யக் கூடாதவை' என்று முக்கிய விஷயங்களைப் 'படிப்பினை' பகுதியில் தந்திருக்கிறேன். குடும்ப வாழ்க்கை தொழில் வாழ்க்கை இரண்டுக்கும் இடையே இருக்கும் தொடர்பையும் ஒன்று மற்றதன் மீது ஏற்படுத்தும் பாதிப்பையும் விவரித்திருக்கிறேன். ஒத்திசைவு என்பது வாழ்க்கையின் நிம்மதியான முன்னேற்றத்துக்கு மிகவும் அவசியம் என்பதை இந்த நூலை எழுதும்போது தெளிவாகப் புரிந்துகொண்டேன்.

தன் வாழ்க்கையையும் பிறருடைய வாழ்க்கையையும் மேம்படுத்த வேண்டும் என்ற ஆர்வத்தில் கற்றுக் கொள்ளவும், வளர்ச்சி அடையவும், பக்குவமடையவும், பங்களிக்கவும் தயாராக இருக்கும் அனைவரையும் (இளையவர், முதியவர் என்ற வயது வித்தியாசம் பாராமல்) இந்த நூலின் வாசகர்களாகக் கருதி எழுதி இருக்கிறேன். கடந்தகாலத்தை அப்படியே ஏற்றுக் கொள்ளுதல், நிகழ்காலத்தை மாற்றி அமைத்தல், எதிர்காலத்துடன் ஒத்திசைவுடன் செயல்படுதல் ஆகியவையே ஒருவர் தெரிந்துகொள்ள வேண்டிய மிக முக்கியமான விஷயங்களாகும்.

செயல்பாடுகளில் சீரான தன்மை, சிந்தையில் தெளிவு, கனவுகளில் ஒரு தீர்மானம், உணர்வுகளில் ஒரு தீவிரம், நடத்தையில்

நல்லொழுக்கம் ஆகியவற்றை வளர்ச்சியை விரும்பும் ஒருவர் எந்தக் காலகட்டத்திலும் செழுமைப்படுத்திக் கொள்ள முடியும். வாழ்க்கையில் எந்தக் காலகட்டத்தில் இருக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியாது. ஆனால், இன்று இந்தப் புத்தகம் உங்கள் கையில் இருக்கிறது. அப்படியானால் நீங்கள் முன்னேறத் துடிக்கிறீர்கள் என்பது இதன் மூலம் உறுதியாகிறது. தொடர்ந்து படியுங்கள். தொடர்ந்து முன்னேறுங்கள்.

**எஸ். ராமகிருஷ்ணன்**

# 1

## நிதானமாகச் செயல்படுங்கள்

விஜய், உற்சாகமான புத்திசாலி இளைஞன். மிகப் பெரிய சாதனைகளைச் செய்ய வேண்டும் என்கிற ஆர்வம் கொண்டவன்.

சாதாரண மத்திய வர்க்கக் குடும்பத்தில் பிறந்த விஜய், அதிமேதாவி இல்லை. ஆனால், எதைச் செய்தாலும் அதைத் தனித்துவத்துடன் செய்து வெற்றி காணவேண்டும் என்கிற நம்பிக்கை கொண்டவன்.

இயல்பிலேயே அவனிடம் தலைமைக் குணம் இருந்தது. பள்ளிக் காலத்திலேயே கலை, இலக்கியம் என எல்லா விஷயங்களிலும் ஈடுபாட்டைக் காட்டினான். அவனுடைய எந்த ஆர்வங்களுக்கும் அவன் குடும்பத்தினர் தடை போடவில்லை.

வேலைக்குச் செல்ல ஆரம்பித்தான். ஆரம்ப நாள்களில் கொஞ்சம் சிரமப்பட்டாலும், பிறகு சுதாரித்துக் கொண்டான். ஒரு நிறுவனத்தின் நிர்வாகப் பொறுப்புகளைத் தனி ஒருவனாகக் கையாளும் கனவு அவனுக்கு எப்போதும் இருந்தது. அதற்கு, மேலாண்மைத் துறையில் பட்டம் பெறுவது அவசியம் என்று நினைத்தான். வேலையை உடனே ராஜினாமா செய்தான்.

சிறந்த பயிற்சி மையத்தில் மேலாண்மைக் கல்வி படித்து, பட்டம் பெற்றான். பெரிய நிறுவனத்தில் நிதி மேலாளராகச் சேர்ந்தான். அவன் கனவை அடைவது அவ்வளவு சுலபமில்லை என்று அப்போதுதான் தெரிந்தது.

அந்த நிறுவனத்தின் அளவு, மரியாதை இவற்றை வைத்துப் பார்த்தபோது கணக்கு வழக்குகள் எல்லாம் அருமையாக நிர்வகிக்கப்பட்டிருக்கும் என எண்ணினான். ஆனால், இதில்தான் அவனுக்குப் பெரிய அதிர்ச்சிகள் கிடைத்தன. நிதி மேலாளர் இல்லாமலேயே ஒரு வருடகாலமாக அந்த நிறுவனம் நடந்து வந்திருக்கிறது.

முன்பு பணிபுரிந்தவர் புதிதாக வந்தவரிடம் பொறுப்புகளை ஒப் படைப்பது என்பதுபோல் எந்த வழிமுறையும் அந்நிறுவனத்தில் இல்லை. எல்லாமே தாறுமாறாக இருந்தன. அங்கு வேலை பார்த்தவர்கள் பெரும் நெருக்கடிகளுக்கு ஆளாகி, வேறு நல்ல வேலை தேடிப் போக ஆரம்பித்திருந்தார்கள். மிகவும் நம்பிவந்த நிறுவனம், விஜய்க்கு மிகுந்த ஏமாற்றத்தைக் கொடுத்தது.

ஒருங்கிணைப்பும் எந்தத் திசையில் போக வேண்டும் என்ற தெளிவும் இல்லாத குழுவுடன் பணி புரிய வேண்டிய சவாலை விஜய் எதிர்கொண்டான்; உறைந்துபோன புன்முறுவல்... வேண்டா வெறுப்பாகக் கை குலுக்கல்... இப்படியாக அலுவலக முதல் நாளில் செயற்கையான அறிமுகப் படலம் நடந்துமுடிந்தது.

அடுத்தச் சில நாள்களில், மேலும் இரு மூத்த அதிகாரிகள் ராஜி னாமா செய்தார்கள்.

அலுவலகத்தின் அனைத்துப் பணியாளர்களையும் அழைத்து விஜய் உரையாற்றினான்.

'சக ஊழியர்களே! எல்லா நிறுவனங்களும் எண்ணற்ற இடர்பாடு களைத் தாண்டித்தான் சிறப்பாக இயங்கி வருகின்றன. என் தலைமை மேல் நம்பிக்கை வையுங்கள்! மிகச் சிறந்த குழுவாக நாம் உருவாக எல்லா நடவடிக்கைகளையும் மேற்கொள்வேன். ஊர் கூடித் தேர் இழுப்போம்! முன்னேறுவதே நம் லட்சியம். ஏதோ தேர்தல் கோஷமாக இதை எண்ணாதீர். இவ்வளவு சொல்லியும், 'ராஜினாமா செய்வதே எங்கள் முடிவு' என்பவர்களைக் கட்டாயப் படுத்தமாட்டேன். ஆனால், நீங்கள் அனைவரும் இந்த அலுவலகத் தில் தொடர வேண்டும் என்றே விரும்புகிறேன். உங்கள் முடிவு எதுவானாலும் அதை மிகுந்த மரியாதையோடு ஏற்கிறேன்'.

விஜயின் இந்தப் பேச்சு ஊழியர்களுக்கு நிறுவனத்தின் மீதும் விஜய் மீதும் நம்பிக்கை கொடுத்தது. தெம்போடு பணியாற்றி

னார்கள். நிறுவனம் புதுப் பொலிவும் புத்துணர்வும் பெற்றது. உற்பத்தியில் அட்டகாசமான முன்னேற்றம் ஏற்பட்டது.

விஜயும் நிதானமாக தன் ஒவ்வொரு அடியையும் எடுத்து வைத்தான். ஏற்கெனவே இருந்த பிரச்னைகளைப் பெரிதுபடுத்தி நிர்வாகத்துக்கு நெருக்கடி தர விஜய் விரும்பவில்லை. கடந்த காலத்தை அலசி ஆராய்ந்துகொண்டிருக்கவில்லை; எதிர் காலத்தை வலுப்படுத்தும் முயற்சிகளிலேயே அதிகக் கவனத்தைச் செலுத்தினான்.

நிறுவனத்தின் தற்போதைய உண்மை நிலையை உயர் மட்ட அதிகாரிகளின் பார்வைக்கு விஜய் கொண்டுவந்தான். இலக்கு களைச் சரியாக நிர்ணயித்துக் கொள்ளும் வகையில் தனது அணுகுமுறைகளையும் பார்வையையும் நிர்வாகத்தினருடன் பகிர்ந்துகொண்டான். நிறுவனத்தில் ஓர் ஆரோக்கியமான சூழல் நிலவியது.

ஆரம்பத்தில் சிலர் விஜயிடமிருந்து எச்சரிக்கையோடு விலகி நின்றார்கள். வேறு சிலரோ அதிகப்படியான நட்பு உணர்வுடன் நெருங்கி வந்தார்கள். யாரைப் பற்றியும் எந்த முன் முடிவுக்கும் வருவதை விஜய் வேண்டுமென்றே தவிர்த்தான். ஒரு முடிவுக்கு வருவதற்கு முன்னால், அனைவருடனும் நல்ல பரிச்சயம் ஏற்பட வேண்டும் என்று விரும்பினான். நிறுவனத்தில் இருப்பவர்கள் எப்படிப்பட்டவர்கள்... நிறுவனத்தின் செயல்முறைகள், கொள்கைகள், விதிமுறைகள் என்னென்ன... ஆகியவற்றை யெல்லாம் நன்கு புரிந்துகொள்ள நிறுவனத்தின் முக்கிய நபர்களுடன் நிறைய நேரத்தைச் செலவிட்டான்.

ஜோதி என்கிறவரின் தலைமையில் இயங்கிய குழு முழு ஒத்துழைப்பையும் தந்து பல்வேறு நடைமுறைச் சிக்கல்களுக்கு முற்றுப்புள்ளி வைத்தது. வாராந்தரக் கூட்டங்களில் விஜய் அந்தக் குழுவை வெகுவாகப் பாராட்டிப் பேசினான். ராஜினாமா கொடுத்துவிட்டுப் போய்விட வேண்டும் என்று நினைத்திருந் தவர்கள் விஜயின் தலைமையை உற்சாகமாக ஏற்றுக்கொண் டார்கள். கூடுதல் பொறுப்புகளைத் தாமாகவே எடுத்துச் செய்ய ஆரம்பித்தார்கள். எல்லாவற்றுக்கும் மேலாக மிகுந்த சந்தோஷத் துடன் அனைவரும் பணிபுரிய ஆரம்பித்தார்கள்.

ஒரு மேலதிகாரி, தான் தேர்ந்தெடுத்த பணியாளருடைய திறமை யைச் சந்தேகிக்கக் கூடாது. அதுபோலவே, ஒரு பணியாளரும்

நிர்வாகத்தின் மீது கோபம் கொள்ளக் கூடாது. அதிகாரியும் தொழிலாளியும் ஒருவரை ஒருவர் நன்கு புரிந்துகொள்ள வேண்டும். ஒருவர் மற்றவர் மூலம் கிடைக்கும் பலனை அனுபவிக்கப் போதிய கால அவகாசத்தை எடுத்துக் கொள்ளவேண்டும். இருவர் தரப்பிலும் சில குறைபாடுகள் இருக்கலாம்; இவற்றை இருசாராரும் நன்கு புரிந்துகொண்டால் உறவு மேம்படும். இதை நன்கு அறிந்திருந்தான் விஜய்.

ஆனால், விஜயுக்கு ஒரு சிக்கல் வேறொரு வடிவத்தில் வந்து சேர்ந்தது. அதையும் ஒரு கை பார்க்கத் தயாரானான்.

**படிப்பினைகள்**

- புது நிறுவனத்தின் தேவைகளுக்குத் தக்கபடி ஒருவர் தன்னைத் தயார்படுத்திக்கொண்டுவிட்டால், புதிய வேலையை எளிதில் எந்தப் பிரச்னையும் இல்லாமல் செய்துவிட முடியும்.
- போதுமான அனுபவம் கிடைக்காத வரையில், இதுதான் நிர்வாகத்தினரின் நோக்கங்கள் என்று எதையும் நாமாகத் தீர்மானித்துக் கொண்டுவிடக் கூடாது.
- குழு உறுப்பினர்களிடையே பரஸ்பர மரியாதையும் புரிதலும் இருந்தால், நிர்வாகத்தின் இலக்குகளுடனும் நோக்கங்களுடனும் எளிதில் ஒத்திசைவு ஏற்பட்டுவிடும்.
- நிர்வாகம் புதிதாக வந்து சேருபவர்களை நன்கு வரவேற்று, கொடுக்கப்பட்ட பணியில் அவர்கள் விரைவில் அமர்ந்து சுலபமாகச் செயலாற்ற வேண்டியதைச் செய்து கொடுக்கவேண்டும்.
- நிர்வாகத்துடனான ஊழியர்களின் பரிமாற்றத்தை மேலதிகாரிகள் எளிமைப்படுத்தினால், வேலைகள் சுலபமாகிவிடும். நிதானமும் எளிமையும் குடிகொண்ட இடத்தில் வளர்ச்சியும் மேம்பாடும் நிச்சயம்.

வேலையை விரும்பிச் செய்தால்,
செய்வது வேலை போலவே தோன்றாது.

# 2

## இளம் மேலதிகாரியைச் சமாளிப்பது எப்படி?

விஜய், படித்து முடித்ததும் சிறிய தொழில் முன் அனுபவத்துடன், ஓர் ஆட்டோமொபைல் நிறுவனத்தில் நிதி மேலாளராகச் சேர்ந் தான். மூன்று ஆண்டுகளுக்கும் மேலாக அந்தத் தொழிற்சாலையில் பணிபுரிந்து, நிதித்துறையின் தலைவராகும் அளவுக்கு விஜய் தேர்ச்சிபெற்றான். ஆனால், நடந்தது வேறு.

அந்த நிறுவனத்தின் நிதித்துறையின் தலைவர் ராஜினாமா செய்தார். அடுத்ததாக, அந்தப் பதவி தனக்குத்தான் கிடைக்கும் என்று விஜய் நம்பினான். ஆனால், நிர்வாகம் வேறொரு திட்டம் வைத்திருந்து. அந்நிறுவனத்தின் இன்னொரு இளைஞனான, சூர்யாவை அந்தப் பணிக்கு நியமித்தது. சுமூகமாகப் போய்க் கொண்டிருந்த நிறுவனத்தில் பரபரப்பு ஏற்பட்டது.

விஜயைவிட சூர்யா இளையவன். அனுபவமும் குறைவு. ஆனால், சூர்யாவையே துறைத் தலைவராக அமர்த்தினார்கள். விஜய் வருத்தப்படுவான் என்பது நிர்வாகத்துக்குத் தெரிந்திருந்தது. ஆனால், காலத்தின் கட்டாயம். ஒரே துறையில் இரு தலைவர்கள் இருக்கமுடியாதே!

இதுதான், ஆர்வத்துடன் பணிபுரிந்த விஜய்க்குக் கிடைத்த சன்மானம்! பெருத்த அவமானம். தன்மானத்தை அடமானம் வைத்து அங்கேயே பணிபுரிவதா... நிறுவனத்தை விட்டு வெளி நடப்பு செய்வதா... தவித்தான். துக்கம் விசாரிப்பதைப் போன்று

எல்லோரும் பேச ஆரம்பித்தார்கள். வயதிலும் அனுபவத்திலும் குறைந்த ஒருவனுக்கு அடிபணிவதா?

ஆனால், விஜய் நிதானமாக ஆழ்ந்து யோசித்தான். நிர்வாகத்தின் முடிவை மாற்றுவது முடியாத காரியம். புதுப் பொறுப்பு குறித்த அறிவிப்பு வெளியிடப்பட்டுவிட்டது. தன்னிடம் இல்லாத எந்தச் சிறப்பு அம்சம் சூர்யாவிடம் இருக்கிறது என்று ஆராய ஆரம்பித்தான். ஒரு பிரச்னையின் விளைவை மட்டும் பார்க்காமல் அதன் காரணத்தைக் கண்டு கொள்ள முயன்றால் நல்ல தீர்வு கிடைக்கும் என்பதில் விஜய்க்கு நம்பிக்கை உண்டு.

இருவரும் சமமாகப் படித்தவர்கள்தான். இருப்பினும், குறிப்பிட்ட அந்த நிறுவனத்தில் விஜயைவிட சூர்யா அதிக காலம் பணிபுரிந்திருக்கிறான். அதேசமயம், நெருக்கடி காலங்களில் நிர்வகித்த அனுபவம் சூர்யாவுக்கு அதிகம். தலைமை ஏற்று வழி காட்டும் திறமை தன்னிடம் உள்ளதை, சூர்யா பல முறை நிர்வாகத்திடம் நிரூபித்திருக்கிறான். இதற்கான வாய்ப்பு விஜய்க்கு மிகக் குறைவாகவே கிடைத்திருக்கிறது.

அடுத்த நாள், தெளிவான சிந்தனையோடு அலுவலகத்துக்குச் சென்றான். சூர்யாவின் பேச்சு, நடை உடை பாவனை எதுவுமே விஜய் எதிர்பார்த்தது போல் இல்லை. அப்போதும், அவன் தனக்குள்ளேயே இவ்வாறு சொல்லிக்கொண்டான்: 'புதிய அதிகாரியை எதிர்மறையாகப் பார்க்காமல், சகஜமான கண்ணோட்டத்தில் பார். அவரிடம் உள்ள நல்ல விஷயங்களைக் கற்றுக்கொள். இவர் உன் போட்டியாளர் மட்டுமே. எதிரியல்ல.'

அலுவலகத்தில் இருவரையும் ஒப்பிட்டு பேச ஆரம்பித்தார்கள். இருவருக்கும் அபிமானிகளும் வெறுப்பாளர்களும் இருந்தார்கள். யார் யாரை மிஞ்சப் போகிறார்கள் என்பதில் ஒரு பெரிய போட்டி நிலவுவதாகப் பணியாளர்கள் பேசிக்கொண்டார்கள்.

'விஜய் சார், உங்க வேகமும், முடிவு எடுக்கும் திறமையும் சூர்யாவிடம் தென்படவே இல்லை. அவர் மிகவும் சிரமப்படுகிறார்' என்று விஜயிடம் நல்ல பெயர் வாங்க வேண்டும் என்ற எண்ணத்தில் அவனுக்குக் கீழே பணிபுரியும் ஒருவர் சொன்னார்.

'என்னப்பா சொல்ற! புதிதாக ஒரு பதவியில் நியமிக்கப்படும்போது கொஞ்சம் நிதானமாகச் செயல்படவேண்டியது மிகவும் அவசியம். இந்தச் சூட்சுமம் சூர்யாவுக்குத் தெரிஞ்சிருக்கு. அவர் நல்ல புத்திசாலி' என்று விஜய் பதில் சொன்னான்.

அடுத்தவர் குறையை நம்மிடம் சொல்பவர், நம் குறையை இன்னொருவரிடம் சொல்லாமல் இருப்பார் என்பது என்ன நிச்சயம்? இதை விஜய் நன்கு அறிந்திருந்தான்.

விஜயை விரும்பாதவர்கள் எதிர்மறையாக விமர்சித்தார்கள்: 'சும்மா பந்தா செய்யறவங்களை நிர்வாகம் தூக்கிவிடுமா? விஜய் கிட்டச் சரக்கு இருந்திருந்தா, இன்னொருத்தனை அதுவும் அனுபவம் குறைவா உள்ள சின்னவனைக் கொண்டுவருமா?'

இப்படிச் சேறு பூசும் வார்த்தைகளைக் கேட்டு விஜய் கலங்கவில்லை. ஏனென்றால் அவனுடைய திறமை மீது அவனுக்கு மிகுந்த நம்பிக்கை இருந்தது. தன் வாழ்க்கையில் இது ஒரு நெருக்கடியான நேரம் என்பதை விஜய் உணர்ந்தான். பொறுமையாக அமைதியாக இருக்க முடிவுசெய்தான்.

சூர்யாவை விஜய் மனபூர்வமாக ஏற்றுக்கொண்டான். 'ஒரே துறையை இரண்டு மூத்த அதிகாரிகள் கையாள்வது சரிவராது. உங்களுக்கு இந்தப் பதவி, பணிச் சூழல் எல்லாம் பழகும் வரை உதவியாக இருப்பேன். அதேநேரம், நிறுவனத்துக்கு அதிகப் பலன் தரக்கூடிய மூன்று பெரிய திட்டங்களை நான் பார்த்துக் கொள்கிறேன்' என்று தெளிவாக விஜய் சொன்னான். இதனால், அலுவலகத்தில் விஜய்-சூர்யா இடையேயான உறவு ஆரம்பத்தில் இருந்தே சுமுகமாக இருந்தது.

இடையில், இன்னொரு திருப்பம் ஏற்பட்டது. விஜய் தன்னுடைய பணியில் கூடுதல் கவனத்தைச் செலுத்தினான். மேலதிகாரிகள் மெச்சும் வகையில் ஆறு மாத காலத்தில் விஜய் தன்னுடைய மூன்று திட்டங்களைத் திறம்பட முடித்துக் காட்டினான். சூர்யாவுக்குச் சமமாக நிறுவனத்தின் மார்க்கெட்டிங் துறைக்கு விஜயைத் தலைவராக நியமித்தார்கள்.

படிப்பினைகள்

**மேலதிகாரியின் கோணத்தில்...**

- புதிய நிறுவனத்தில் சேரும்போது, நிறுவனத்தின் செயல்முறைகளைப் பற்றித் தெரிந்துகொள்ள முக்கியப் பங்கு வகிப்பவரிடம் போதுமான நேரத்தைச் செலவிட வேண்டும்.
- அவரது அனுபவத்தையும் சிறந்த அறிவையும் கௌரவியுங்கள். உங்களது எதிர்பார்ப்புகளையும்

பணியாற்றும் பாங்கையும் அவரின் போக்குக்கு ஏற்ப சரிப்படுத்திக் கொள்ளுங்கள்.

- பொருந்தாத அம்சங்கள் தென்பட்டால், நாகரிகத்தோடு கையாளுங்கள். இல்லையேல், உங்களின் முதிர்ச்சியின்மையை அது காட்டிவிடும்.
- நீங்கள் தான் மேலதிகாரி. அதில் எந்தச் சந்தேகமும் கிடையாது. எனினும் முக்கியமான தீர்மானங்களை எடுக்கும்போது அவரையும் கலந்து ஆலோசியுங்கள். அவரது ஆலோசனைகளுக்கும் மதிப்பு இருக்கிறது என்பதை அவர் உணர்ந்து கொள்ள இது உதவும்.
- அவர் சுதந்தரமாகப் பணியாற்ற வழிவகை செய்யுங்கள். மேலும், அவருடன் தனியாக அமர்ந்து பணி ஆய்வுப் பணிகளில் ஈடுபடுங்கள்.
- பதவி உயர்வு தராமல் புறக்கணிக்கப்பட்டவரை உதாசீனம் செய்யாதீர்கள். தன் உழைப்புக்குப் பலனும் அங்கீகாரமும் கிடைக்கவில்லையே என்ற வருத்தம் அவருக்குள் இருந்தாலும், எந்தப் பணியையும் செவ்வனவே செய்யும் திறன் மிக்கவர்களாகவே இருப்பார்கள். அவர்களிடம் முக்கியமான பெரிய திட்டங்களை ஒப்படையுங்கள்.
- ஒருவரிடம் நல்ல குணங்கள் மட்டுமே இருக்காது. அவரது பலவீனத்தின் பக்கம் செல்லாமல், அவரது ஆளுமை-வலிமை ஆகியவற்றை அறிந்து அதன்படி நீங்கள் செயல்பட வேண்டும்.

**பணியாளரின் கோணத்தில்...**

- நிர்வாகம் எடுத்த முடிவை ஏற்றுக்கொள்ளுங்கள். உங்களின் உணர்ச்சிப் போராட்டத்துக்கு இடம் கொடுக்காதீர்கள். இந்த அனுபவத்தில் இருந்து கற்றுக் கொள்ளுங்கள்.
- வாழ்வின் நிதர்சனத்தைப் புரிந்து கொள்ளுங்கள். புதிய அதிகாரியை எதிர்மறையான கண்ணோட்டத்தில் பார்ப்பதை விட்டுவிடுங்கள். அவரிடமிருந்து

கற்றுக்கொள்ள வேண்டிய பாடங்கள் என்னென்ன என்பதைக் கண்டறியுங்கள்.

- உண்மையாகவே புதிய அதிகாரியின் பதவிக்கு நீங்கள் தகுதி மிக்கவராகக் கருதினால், உயர்மட்ட அதிகாரிகளிடம் சென்று தெளிவாகத் தெரிவியுங்கள். அவர்களின் கருத்துகளையும் அறிந்து கொள்ளுங்கள்.

- நிர்வாகம் உங்களுக்குப் பதவி உயர்வு கொடுக்காமல் போனதை அலுவலகத்தில் யாரிடமும் சோகக் கதையாகக் கூறி அனுதாபம் தேடிக்கொள்ள முயற்சிக்காதீர்கள்.

- 'என்னிடம் என்ன குறை' என்று எண்ணுவதை விட்டு 'எதில் நான் என்னை மேம்படுத்திக் கொள்ள வேண்டும்' என்று ஆராய்ச்சி செய்யுங்கள். அந்தப் பதவியை அடைவதற்குத் தேவையான ஆற்றல்களையும் சிறப்பு அம்சங்களையும் பட்டியலிடுங்கள். அவற்றைப் பெறத் துரிதமாகச் செயல்படுங்கள்.

- புதிய அதிகாரி அமலுக்குக் கொண்டு வரும் புதிய திட்டங்களையும் ஆலோசனைகளையும் ஒரேயடியாக விமரிசிக்காதீர்கள். மாறாக, அவற்றின் நன்மை தீமைகளை இதமாக எடுத்துச் சொல்லுங்கள், முடிந்தால், அவர் சொன்ன யோசனைகளுக்கு மாற்று வழிமுறைகளை விளக்கிச் சொல்லுங்கள். புதிய அதிகாரிக்கு உங்கள் மீது தனி மரியாதை ஏற்படும்.

நிறுவனத்துக்கு உங்களால் என்ன பலன் என்பதுதான் முக்கியம். யார் உங்கள் மேலதிகாரி என்பது அல்ல.

# 3

## சக ஊழியர், சுமையா... சுவையா?

விஜய் பணி செய்த ஆட்டோமொபைல் நிறுவனம் அந்நிய நாட்டுக் கூட்டு முயற்சியுடன் உருவாக்கப்பட்டிருந்தது. அதன் இந்திய பிரதிநிதியாக வியாபார- நிதி - மனித நல மேம்பாடு துறைகளின் தலைவராக விஜய் திகழ்ந்தான். அந்த நிறுவனத்தின் உற்பத்தி- தொழில் நுட்ப - தரக் கட்டுப்பாடுத் துறைகளுக்கு வெளிநாட்டுப் பிரதிநிதி கயோஷு தலைமை ஏற்றார்.

இந்தியப் பணியாளர்களிடம் ஆங்கிலத்தில் உரையாடுவதும் அவர்களின் வேறுபட்ட பணிப்பாங்கும் கயோஷுவுக்குச் சிரமமாக இருந்தன. அவரது நாட்டில் கயோஷு ஒரு வார்த்தை சொன்னால் போதும், பணியாளர்கள் அதை மறுவார்த்தை பேசாமல் செவ்வனவே செய்து முடிப்பார்கள். ஆனால், இங்கு தர்க்கபூர்வ விளக்கங்கள் கேட்டார்கள். அது அவருக்கு ஆச்சரியமாக இருந்தது. அது மட்டுமல்லாமல், இந்திய மேலாளர்கள் அனைவருக்கும் அவரோடு பணிபுரிவதில் மிகுந்த சிரமம் இருந்தது. சில நேரங்களில், ஒவ்வொருவரும் அச்சுறுத்தப் பட்டது போலவும் திறமையற்றவர்களாகவும் உணர்ந்திருக் கிறார்கள். இதன் விளைவாக, பணியாளர் அனைவரும் முழு வேகத்துடன் பணி புரியமுடியாமல் போனது. வாடிக்கையாளர் களின் பார்வையில், நிறுவனம் வலுவிழக்க ஆரம்பித்தது.

இன்னொருபுறம், ஒட்டு மொத்த வர்த்தகச் செயல்பாடுகளின் தலைவராக விநோத் என்பவர் இருந்தார். அவர் நேரடியாக

நிறுவனத்தின் தலைமை நிர்வாக அதிகாரியின் கீழ் இயங்கி வந்தார். விஜய் சேர்ந்த நாள் முதற்கொண்டே அவனைச் சக ஊழியனாக ஏற்றுக்கொள்ளும் பக்குவம் விநோத்துக்கு இருந் திருக்கவில்லை. 'தனக்குத் தான் எல்லாம் தெரியும்' என்ற நினைப்பு, படித்துப் பட்டம் பெற்றிருந்தாலும் தன் அளவுக்கு விஜய் செயலாற்றுவானா என்ற அவ நம்பிக்கை... இவை எல்லாமே விஜயை விநோத் மதிக்காமல் போவதற்குக் காரண மாக இருந்தன.

வாராந்தரக் கூட்டங்களில் விநோத் யாரையும் மதிக்கமாட்டார். எல்லோரைக் காட்டிலும் தான் உயர்ந்தவர் என்ற இறுமாப்புடன் நடந்துகொள்வார். மூலப் பொருள்கள் சரியான நேரத்தில் வந்து சேராத காரணத்தால், உற்பத்தி குறைந்திருக்கும். ஆனால், விநோத்தோ தன் பக்கம் இருக்கும் குறையை மறைத்து, உற்பத்தித் துறையினர் மீதே பழியைப் போடுவார். உற்பத்திப் பிரிவில் பணிபுரிபவர்கள் இதனால் நெருக்கடிக்கு ஆளாவார்கள். விநோத் தின் ஆதிக்க மனோபாவம், எல்லோரையும் மிரள வைத்தது. இந்நேரத்தில், விஜய் அமைதியாகச் சூழ்நிலையைக் கையாண் டான். உற்பத்தி வீழ்ச்சிக்குக் காரணம் மூலப்பொருட்களின் பற்றாக்குறையே என்பதை விஜய் ஆதாரபூர்வமாக நிரூபித்தான்.

வெவ்வேறு துறைகளைச் சேர்ந்தவர்கள் ஒருங்கிணைந்து செயல் பட்டாலொழிய, எந்த நிறுவனமும் வெற்றிபெற முடியாது என்பதை விஜய் நன்கு அறிந்திருந்தான். வெளிநாட்டுப் பிரதி நிதிக்கும் இந்திய மேலாளர்களுக்கும் இடையே பாலமாகச் செயல்பட முடிவெடுத்தான். அதே நேரத்தில் விநோத்தையும் ஒரு வழிக்குக் கொண்டுவரத் தீர்மானித்தான். இந்த இரண்டுமே எச்சரிக்கையுடன் அணுகவேண்டிய விஷயங்கள்.

தனக்கு மேல் பணிபுரியும் ராமநாதனின் ஆலோசனையைப் பெறுவது உபயோகமாக இருக்கும் என்று விஜய் நினைத்தான். பிரச்னையான காலங்களில் அவரிடம் உதவிகேட்பது வழக்கம். தமது அனுபவப்படி, ராமநாதன் தன் கருத்தைக் கூறினார். 'சக ஊழியர்களின் பல்வேறு இயல்புகள் குறித்து விளக்கினார். நம்பத் தகுந்த சக ஊழியராக ஆவதுதான் ஒவ்வொருவருடைய லட்சியமும். பல்வேறு காலகட்டங் களில் வெவ்வேறு நிலைகளில் ஒவ்வொருவரும் இருப்பார் கள்' என்று ராமநாதன் சொன்னார்.




முதலில் நாம் நம்மை எவ்வகை ஊழியர் என்று வரையறுத்துக்கொள்ள வேண்டும். பிறகு நம்பத் தகுந்த ஊழியராக உயர, தொடர்ந்து செயல்பட வேண்டும். எல்லா சக ஊழியரோடும் ஒரே மாதிரியாகப் பழக முடியாது. ஆனால், ஒவ்வொருவரோடும் ஒருங்கிணைந்து செயல்பட அவரவர் எந்தெந்த வகையைச் சார்ந்தவர் என்பதைக் கண்டறிய வேண்டும்.

***சார்ந்திருக்கும் சக ஊழியர்:***

இவர், பணியாளர்களையும் நிறுவனத்தின் செயல்பாடுகளையும் புரிந்துகொள்ள அடுத்தவரைச் சார்ந்திருக்கும் சக ஊழியர். இவர் வெளிப்படையாக எப்போதும் பேசமாட்டார். வாராந்தரக் கூட்டங்களில் சக ஊழியரிடமோ மேலதிகாரிகளிடமோ கூடத் தெளிவாகப் பேசமாட்டார். நெருக்கடியான சிக்கல்களுக்குத் தன்னிச்சையாக முடிவெடுக்கமாட்டார். தன்னம்பிக்கையோடு இவர் செயல்பட வேண்டுமானால், பிறர் தொடர்ந்து உற்சாகப்படுத்த வேண்டியிருக்கும். பொதுவாக, இவ்வகை ஊழியர் புதிதாகச் சேர்ந்தவராக இருக்கலாம். அல்லது பணி இடத்தில் இவருக்கு உணர்ச்சிபூர்வமான-அறிவுபூர்வமான உதவிகள் எப்போதும் தேவைப்படும்.

| சார்ந்திருக்கும் ஊழியரின் உள் முகப் பண்புகள் | சார்ந்திருக்கும் ஊழியரை அடையாளம் காண உதவும் வெளிப்புற சமிக்ஞைகள் |
|---|---|
| முடிவெடுக்க இயலாதவர், சகஜமாகப் பேசாதவர், உறுதியாக இல்லாதவர். | ஒருபோதும் தலைமை ஏற்காதவர். முடிவு எடுக்க இயலாதவர் |
| தகவல் தெளிவு இருக்காது. தம்மைத் தாழ்ந்தவராகக் கருதுபவர். | கூட்டங்களில் அதிகம் பேசமாட்டார் |
| துணையின்றி உணர்பவர். உணர்ச்சிபூர்வமான உதவியை நாடுபவர். | உற்சாகப்படுத்தும் சக ஊழியர்களிடம் மட்டுமே பேசுவார்கள் |
| பணியிடத்தில் யாரையும் எதிர்க்க விரும்பாதவர். | எதைப் பற்றியும் யாரைப் பற்றியும் உறுதியாகக் கருத்துக் கூறாதவர்கள் |
| மற்றவர்களிடம் தாக்கத்தை ஏற்படுத்த முடியாதவர். | தாக்கத்தை ஏற்படுத்த சக ஊழியரின் உதவியை எதிர்பார்ப்பார்கள் |

**நம்பத் தகுந்த ஊழியர்:**

மிகவும் வரவேற்கத்தக்க ஊழியர். ஒவ்வொரு நிபுணரும் சக ஊழியர்கள் நம்பத் தகுந்தவர்களாக இருக்கவேண்டும் என்றே எதிர்பார்ப்பார்கள். தாமும் அப்படியாக இருக்கவே விரும்புவார் கள். ஏனெனில், அப்போதுதான் ஒரு நிறுவனம் உச்சியை எட்ட முடியும். இவர்கள் சக ஊழியர்களை நம்புவார்கள். அவர்கள் முழுத் திறமையுடன் வெளிப்பட உதவுவார்கள். இதனால், இவர் களும் நம்பிக்கைக்குப் பாத்திரமாவார்கள். பணியில் சேரும் முதல் நாளில் இருந்தே யாரும் நம்பத் தகுந்த சக ஊழியராகப் பெயர் எடுக்க முடியாது. காலப்போக்கில், தொடர்ந்து முயற்சித்தால் தான் இந்த நிலையை எட்ட முடியும். இந்தவகைப் பணியாளர்கள் வெளிப்படையாகத் திறந்த மனத்துடன் பேசுவார்கள். விமரிசனங் களைச் சரியான அர்த்தத்தில் எடுத்துக் கொள்வார்கள். வியா பாரத்தில் கண்ணும் கருத்ததுமாக இருப்பார்கள். தெளிவான

தீர்வுகளை முன்வைப்பார்கள். முதிர்ச்சி, உறுதி ஆகியவற்றைக் கொண்டவர்கள்.

| நம்பத் தகுந்த ஊழியரின் உள் முகப் பண்புகள் | நம்பத் தகுந்த ஊழியரை அடையாளம் காண உதவும் வெளிப்புற சமிக்ஞைகள் |
|---|---|
| குறைவான பேச்சு... அதிக வேலை என்பதே இவர்களின் தாரக மந்திரம் | நிறுவனம் தொடர்ந்து பலன்களைப் பெற வழி வகுப்பார் |
| மிகுந்த ஒழுங்குக்கு உட்பட்டவர். திட்டமிட்டுச் செயல்படுபவர். காலத்தைப் பொன்னாகக் கருதுபவர். | எந்தவொரு சூழ்நிலையிலும் நிதானமாக இருப்பார். பொறுமையைக் கடைப்பிடிப்பார். |
| சக ஊழியரின் கருத்துகளை மரியாதையுடன் புரிந்து கொள்வார். | சக ஊழியர்களும், துறைத் தலைவரும் இவர்களிடம் மரியாதை காட்டுவார்கள். இவர்களை விரும்புவார்கள். |
| தீர்வுகளைக் கண்டு சொல்பவர். | நிறுவனத்தின் பெரும் இலக்கை மனதில் கொண்டு, பிரச்னைகளுக்கு மாற்று வழிமுறைகளைத் தேடிக்கண்டுபிடிப்பார். |
| விமரிசனங்களை நேரான கண்ணோட்டத்தில் எடுத்துக் கொள்வார். அதற்கு ஏற்பத் தன்னை மாற்றிக் கொள்வார். | தனி நபர்களை விட்டு பிரச்னைகளை மட்டுமே விமரிசிப்பார்கள். |
| உறுதிப்பாட்டை வெளிப்படுத்துவார். அதில் அராஜகம் இருக்காது. | மறுப்புரைகளையும் காரணங்களோடு கூறுவார். |
| பொறுப்புகளை நிபந்தனையற்று விருப்பமுடன் ஏற்றுக்கொள்வார். | கூட்டங்களில் தலைவருக்கு ஆதரவாக நிற்பார்கள். |

*மந்தமான சக ஊழியர்:*

இவ்வகையான சக ஊழியர் பணியில் ஆர்வம் இல்லாமல் மனம் குன்றிச் செயல்படுவார். பதவி உயர்வு இவர்களுக்குப் புறக் கணிக்கப்பட்டிருக்கலாம். முன்னேறும் வாய்ப்பு அளிக்கப் படாமல் போயிருக்கலாம். இவரோடு சமமாகப் பணிபுரிந்தோ ருக்குப் பதவி உயர்வு தரப்பட்டு, இவரை அவரின் கீழே பணிபுரியும் படிச் செய்திருக்கலாம். தவறான காரணங்களுக்காகத் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டு வந்திருக்கலாம். நீண்ட நாள்களாகவே இவர்கள் எடுத்த முயற்சிகளுக்கு எந்த அங்கீகாரமும் கிடைக்காமல் போனதால், இப்படி மந்த நிலையை அடைந்திருக்கலாம். தம்மு டைய பிரச்னைகளை வெளிப்படையாக இவர்கள் சம்பந்தப் பட்டவர்களுடன் பேசுவதில்லை. ஆனால், தாம் ஆதரவற்று இருப்பதைப் பிறரிடம் சொல்லிக்கொள்ளத் தவறுவதில்லை.

| **மந்தமான ஊழியரின் பண்புகள்** | **மந்தமான ஊழியர்களை அடையாளம் காண உதவும் வெளிப்புற சமிக்ஞைகள்** |
|---|---|
| மனம் குன்றி- ஆர்வம் இன்றி பணிபுரிவர் | பதவி உயர்வு அல்லது முன்னேறும் வாய்ப்பு அளிக்கப்படாமல் போயிருக்கும் |
| ஒதுக்கப்பட்டவர்களாக நினைத்துக் கொள்வர் | மீள்பார்வைக் கூட்டங்களில் துடிப்புடன் பங்கேற்ப தில்லை |
| பணி நிலையாமை குறித்துப் பயப்படுவர் | மூத்த பணியாளர்களுடன் ஒத்திசைந்து செயல்படுவ தில்லை |
| நிறுவனத்துக்குப் பல நல்ல செயல்கள் புரிந்ததாக நினைத்துக் கொள்வர். | நிறுவனத்தின் பெரிய திட்டங்களை அமல்படுத்து வதில் பங்கேற்பதில்லை. |
| மற்றவர்கள் தமது உணர்வுகளைப் புரிந்து கொள்ள வேண்டும் என்று எதிர்பார்ப்பார்கள். | குறைகளை மட்டுமே சொல்வார்கள்; தம் தேவைகளைச் சொல்லவே மாட்டார்கள். |

*சர்வாதிகார சக ஊழியர்:*

இவ்வகை ஊழியர் பயங்கரமானவர். ஒன்று, இவர்கள் அதிபுத்தி சாலிகளாக அதேநேரம் அதிரடியானவர்களாக இருப்பார்கள். அல்லது, தமது பலவீனம் வெளியே தெரியாமல் இருக்க, எல்லாம் தெரிந்தது போல் நடந்து கொள்வார்கள். பிறர் மீது ஆதிக்கம் செலுத்தினால்தான் தலைமைப் பண்பை அடைய முடியும் என்பது இவர்களின் நம்பிக்கை. இன்னொருவரின் மீது குற்றங்குறை காணும் எந்தவொரு வாய்ப்பையும் நழுவ விடாத இவர்கள், எந்தக் காரணம் கொண்டும் மற்றவர்கள் தம்மை விமரிசிக்க அனுமதிப்பதில்லை. இப்படியே ஆதிக்கம் செலுத்துபவராக இருந்தால் காலப்போக்கில் மரியாதையை இழந்துவிடுவார்கள். இவர்கள் கூறும் நல்ல விஷயங்களைக் கூட மற்றவர்கள் செவிமடுப்பதில்லை.

| சர்வாதிகார ஊழியரின் உள் முகப் பண்புகள் | சர்வாதிகார ஊழியரை அடையாளம் காண உதவும் வெளிப்புற சமிக்ஞைகள் |
|---|---|
| 'எனக்கு எல்லாம் தெரியும். நான் எல்லாரையும் விட மேம்பட்டவன்' என்று நினைப்பார்கள். | அடாவடியும், அராஜகமும் இவர்களிடத்தில் இயற்கை யாகத் தென்படும். |
| தற்காப்புக்கான சிறந்த வழி தாக்குவதே என நினைப்பார்கள். | வாராந்தர மீள்பார்வை கூட்டத்தில் பலவீனமான சக ஊழியர்கள் மீது தடாலடி யாக ஆதிக்கம் செலுத்து வார்கள். |
| தனிப்பட்ட முறையில், இவர்களுடைய அணுகுமுறை உயர் தரமானதாக இருக்கும். திறமை மிகுந்தவர்களாக இருப்பார்கள். | நுண்ணறிவு இருக்கும். ஆனால், சக ஊழியரோடு நல்லுறவு இருக்காது. |

| | |
|---|---|
| பயமுறுத்துவதன் மூலமே மரியாதையைப் பெற முடியும் என நம்புவார்கள். மற்றவர்களின் கருத்துகளைப் பற்றிக் கவலைப்பட மாட்டார்கள். பிறருடைய மனத்தைப் புரிந்துகொள்ள மாட்டார்கள். | மற்ற துறை ஊழியர்களுக்கு மதிப்பு, மரியாதை தர மாட்டார்கள். |
| எப்போதுடா பிரச்னை உருவாகும்... அதை எப்படிப் பெரிதுபடுத்தலாம் என்று காத்திருப்பார்கள். | ஆலோசனைகளாக அள்ளி வீசுவார்கள்; கூடுதல் பொறுப்புகளை மட்டும் ஏற்க மாட்டார்கள். |
| வளவளவென்று பேசுவார்கள். பிறர் சொல்வதைக் குறைவாகவே கேட்பார்கள். | மற்றவர்களிடம் இருந்து எதையும் கற்றுக் கொள்ளமாட்டார்கள். |

ராமநாதன் கூறினார்: 'சக ஊழியர்களின் இயல்புகள் இவைதான். நீ எந்த வகையைச் சேர்ந்தவன் என்பதைப் புரிந்துகொள். நீ எந்த வகை சக ஊழியராக வேண்டும் என்பதையும் தீர்மானித்துக் கொள். சக ஊழியரை நீ புரிந்துகொள்ளும் விதத்தில், மேற்கூறிய வற்றை நடைமுறைப்படுத்திப் பார். வாழ்த்துக்கள்.'

விஜய் புதிய உற்சாகத்துடன் புறப்பட்டான். ராமநாதனின் திரு வாக்கு விஜய்க்கு தேவ வாக்காகப்பட்டது. தெளிவு பிறந்தது.

முதல்முதலாக மறுபரிசீலனைக் கூட்டத்தில், குழுவினரின் இடர்பாடுகள், சிக்கல்கள், முதலியவற்றைப் புரிந்துகொண் டான். எல்லாவற்றுக்கும் பொருத்தமான தீர்வையும் முழு ஆதரவையும் அளித்தான். குழு உறுப்பினர்கள் உற்சாகம் அடைந் தார்கள். வெளிநாட்டுப் பிரதிநிதி, தன்னால் சமாளிக்க முடிய வில்லை என்று பிரச்னையில் இருந்து ஒதுங்கிக்கொண்டார். ஆனால், குழுவின் உதவியோடு பிரச்னையை ஆராய்ந்து முடிவு காண விஜய் முற்பட்டான். கரடுமுரடான வாடிக்கையாளரைச் சந்திக்கும்பொறுப்புகளை எந்த நிபந்தனையும் இல்லாமல் எடுத்துக்கொண்டான். வெளிநாட்டுப் பிரதிநிதியும் வாடிக்கை

யாளர்களும் ஆரம்பத்தில் அவநம்பிக்கையுடனே இருந்தார்கள். ஆனால், காலப்போக்கில் நேர்மறையான விளைவுகள் வர ஆரம்பித்ததும் விஜயின் அணுகுமுறையையும் திறமையையும் புரிந்துகொண்டு பாராட்டினர்.

மெதுவாக, விஜய் அனைத்துத் தொழில்நுட்ப வல்லுநர்களிடமும் நன் மதிப்பைப் பெற்றான். நெருக்கடி நேரும் போதெல்லாம் விஜயையே எல்லாரும் நம்பி அணுக ஆரம்பித்தார்கள். வெளிநாட்டுப் பிரதிநிதியிடம் விஜய் காட்டும் மரியாதை அனைவரையும் கவர்ந்தது. தொழில் நுட்பக் குழுவுக்கு ஆதரவு தந்த போதும், வெளிநாட்டுப் பிரதிநிதியின் தொழில் நுண்ணறிவை மிகவும் மதித்தான். துறை வெவ்வேறானாலும், ஒருங்கிணைந்த கூட்டு முயற்சியே வெற்றிக்கு வழிவகுக்கும் என்பதே விஜயின் ஆணித்தரமான நம்பிக்கை.

மூலப்பொருளின் பற்றாக்குறையே வியாபார நஷ்டத்துக்கும் வாடிக்கையாளரின் நம்பிக்கை இழப்புக்கும் காரணம் என்பதை அனைவருக்கும் புரியவைத்தான். நிர்வாகமும் வாடிக்கையாளர்களும் உண்மையான பிரச்னையைப் புரிந்து கொண்டார்கள். வாடிக்கையாளர் மற்றும் சக ஊழியர்களிடம் இருந்து சேகரித்த பின்னூட்டங்கள் விநோத் தன்னுடைய நடவடிக்கைகளை மாற்றிக் கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தின. விநோத்தும் அதற்கேற்ப தன்னை மாற்றிக் கொண்டு உற்பத்திக்குத் தேவையானவற்றைக் கருத்தில் கொண்டு செயற்பட்டார். அவரது இம்மாற்றம் வியாபாரத்தில் வெற்றியைக் கொண்டுவந்தது. கெட்டிக்காரராக இருந்தாலும் அவரது சர்வாதிகாரப் போக்கு அவருடைய திறமையை ஒட்டுமொத்தமாக மறைத்தது என்பதை விநோத் உண்மையாக உணர்ந்தார்.

நிர்வாகம் ஒரு வருட காலத்தில் விஜயை அனைத்துச் செயல்பாடுகளுக்கும் தலைவராக ஆக்கியது. வெளிநாட்டுப் பிரதிநிதியை ஆலோசகராக நியமித்தது. விஜயின் திறமையைப் புரிந்துகொண்ட வெளிநாட்டுப் பிரதிநிதியும் நிர்வாகம் எடுத்த முடிவைப் பாராட்டினார்.

விஜயின் இந்தப் பதவி உயர்வால், கீழ்க்காணும் படிப்பினைகள் கிடைக்கப் பெறுகின்றன:

1 நம்பிக்கைக்குப் பாத்திரமானவர் என்கிற மதிப்பையும் மரியாதையும் சக ஊழியரிடம் எவ்வளவு வேகமாகப்

பெறுகிறீர்களோ அவ்வளவு சீக்கிரத்தில் தலைவராகி விடுவீர்கள்.

2 சக ஊழியர்கள், உங்களைச் சார்ந்திருக்கலாம் என்று எண்ணும் வகையில் நீங்கள் நடக்க ஆரம்பித்தாலே தலைமைப் பதவிக்கு உங்களைத் தயார்படுத்திக் கொண்டுவிட்டீர்கள் என்று அர்த்தம். அந்தப் பதவி வெகு சீக்கிரமே உங்களுக்குக் கிடைத்துவிடும் என்பதில் எந்தச் சந்தேகமும் தேவை யில்லை.

படிப்பினைகள்

***சார்ந்திருக்கும் சக ஊழியர்:***

இத்தகைய ஊழியரைச் சந்திக்க நேர்ந்தால், முடிந்த வரை அவர்களை மனம் திறந்து பேசச் செய்யுங்கள்; அவர்களது எல்லா முயற்சிகளும் வெற்றி பெற வழி காட்டுங்கள்; ஆதரவு கொடுங்கள். அவர்களின் நம்பிக்கையை அதிகப்படுத்துங்கள். உணர்வுபூர்வ மான ஆதரவைத் தருவதன் மூலம் அவர்களுடைய தலைவராகவே ஆகிவிடுவீர்கள். எந்த நெருக்கடி யான முடிவுகளையும் உங்களைக் கலந்து ஆலோ சிக்காமல் எடுக்கமாட்டார். மெதுவாக, அவ ருடைய நம்பிக்கைக்குப் பாத்திரமாகிவிடுவீர்கள். அப்படியாக நீங்கள் நம்பத் தகுந்த சக ஊழியராக ஆகிவிடுவீர்கள்.

***நம்பத் தகுந்த சக ஊழியர்:***

அலுவலகத்தில், இப்படியான சக ஊழியரைக் காண வாய்ப்புக் கிடைத்தால், நீங்கள் பாக்கியம் செய் தவர்கள். அவர்களிடம் இருந்து நல்ல படிப்பினை களைக் கற்றுக்கொள்ளுங்கள். அவரைப் போன்று வாழ முற்பட்டால், இன்னொரு ஊழியருக்கு நீங்கள் நம்பத் தகுந்த ஊழியராக ஆகிவிடுவீர்கள். இப்படிப் பலருக்குப் பல நாட்கள் நம்பத் தகுந்த சக ஊழியராக நிலைத்துவிட்டால், நீங்கள் எளிதில் தலைவராகிவிடலாம்.

*மந்தமான சக ஊழியர்:*

இவ்வகையான சக ஊழியரைச் சந்திக்கும்போது, அவர்களது உணர்வுகளை முதலில் புரிந்துகொள்ளுங்கள். தனிப்பட்ட பிரச்னைகள், திறனற்ற உதவியாளர்கள், நிர்வாகத்திடமிருந்து நெருக்கடிகள் போன்றவற்றால் மிகுந்த சங்கடங்களில் சிக்கித் தவித்துக் கொண்டிருக்கலாம். அவர்களாக வருத்தங்களைச் சொல்லும்போது, கொஞ்சம் காது கொடுத்துக் கேட்டாலே போதும். சிட்டுக் குருவியைப் போல உற்சாகமாகி விடுவார்கள்.

மறுபரிசீலனைக் கூட்டத்தில் அவர்களின் சாதனைகளைப் பட்டியலிட்டு அவர்களுடைய பிம்பத்தை உயர்த்திக் காட்டுங்கள். குறிப்பாக உயர் மட்ட நிர்வாகத்தினரிடம் நற்பெயர் ஈட்டிக் கொடுங்கள். போதுமான நேரம் அவர்களோடு பேச ஒதுக்குங்கள். அவர்களுடைய வலிமையை எடுத்துப் புரிய வையுங்கள். இழந்து போன நம்பிக்கையை மீட்டுக் கொடுங்கள். அவர்கள் வளர்ச்சியில் அக்கறை உள்ள உங்களை, நம்பத் தகுந்த சக ஊழியராக மதிக்க ஆரம்பிப்பார்கள்.

*சர்வாதிகார சக ஊழியர்:*

இவர்களைச் சந்திக்க நேர்ந்தால், முதலில் அவர்களை ஆதிக்கம் செய்யவிடுங்கள். கூடவே உங்கள் வேலையில் கண்ணும் கருத்துமாக இருங்கள். செயல் திறனற்ற ஒருவரால், உங்களுடைய திறமை பாதிக்கப்படக்கூடாது. ஒருவேளை, சர்வாதிகாரச் சக ஊழியரின் ஏளனப் பேச்சு, நையாண்டி, கிண்டல், அவமரியாதை உங்களின் செயல் திறனைப் பாதிக்குமானால், உடனடியாக, தெளிவான சான்றுகளுடன், மேலதிகாரிகளின் பார்வைக்கு அதை எடுத்துச் செல்லுங்கள். சர்வாதிகாரச் சக ஊழியரின் ஒத்துழையாமையாலும் செயலின்மையாலும் நிறுவனத்தின் திறமை எந்தெந்த விதங்களில் சீரழிந்து

போயிருக்கிறது என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டுங்கள்.

இப்படிச் சர்வாதிகாரச் சக ஊழியர் கட்டும் கோட்டையைத் தகர்த்துவிட்டால் பிறகு, அவர் உங்களைச் சார்ந்திருக்கும் சக ஊழியர் ஆகிவிடுவார். சொற்பமாகப் பேசுவார்; உங்கள் யோசனைகளைப் பாராட்டிப் பேசத் தொடங்கி விடுவார்.

சர்வாதிகார சக ஊழியரை வழிக்குக் கொண்டுவரச் சிறந்த வழி உங்கள் வேலையில் செய் நேர்த்தியை அதிகரிப்பதுதான். முன்பு உங்களுக்கு அவர்கள் ஒத்துழைக்காமல் இருந்தபோதும், நீங்கள் அவர்களுக்கு ஆதரவாக இருப்பதை மெதுவாகப் புரிய வையுங்கள். அதன் மூலம் நிறுவனத்துக்கு நன்மை விளையும்.

பல்வேறு வகையான சக ஊழியர்கள் பற்றிய
கோட்பாடுகளைப் புரிந்து கொள்வதைவிட சக
ஊழியர்களைப் புரிந்து கொள்வதே மகிழ்ச்சியைத் தரும்.

# 4

## இரண்டாம் நிலைப் பணியாளர் வரிசையை விரிவுபடுத்துதல்

விஜய், பிறகு இந்தியாவின் மிகப் பெரிய தொலைதொடர்பு நிறுவனத்தில் சேர்ந்தான். தொலை தொடர்புப் புரட்சி இந்தியாவில் பெருமளவில் ஏற்பட ஆரம்பித்திருந்தது. ஏராளமான வேலை வாய்ப்புகள் உருவாகின. வர்த்தகம் பெருமளவுக்கு அதிகரித்தது. இளம் பணியாளர்களின் துடிப்பான குழுவுக்கு விஜய் தலைவராக நியமிக்கப்பட்டான். அவர்களில் வருண் என்னும் இளைஞன் அதிபுத்திசாலியாக இருந்தான். எந்த வேலையைச் செய்தாலும் படுநேர்த்தியாகச் செய்தான். அவனது செயற்பாட்டில் வேகம், தெளிவு, நேர்த்தி, நிறைவு என்று அனைத்தையும் பார்க்கலாம். புதுப்புது யோசனைகளைச் சொல்பவனாகவும் இருந்தான்.

விஜய் சேர்ந்த நாளிலேயே வருணின் திறமையை நன்கு கணித்து விட்டான். அவனிடம் இரண்டாம் கட்டப் பொறுப்பை ஒப்படைக்கத் தீர்மானித்தான்.

சேர்ந்து பணி புரிந்த இரண்டு வருடங்களில், விஜயும் வருணும் ஒட்டு மொத்தச் செயல்பாடுகளையும் அருமையாகச் செய்து முடித்தார்கள். மிகச் சிறந்த குழு என்ற பாராட்டையும் பெற்றார்கள். பல்வேறு செயல்பாடுகளில் ஈடுபட வருணுக்கு விஜய் வாய்ப்புகளை உருவாக்கிக் கொடுத்தான். அதே நேரம் அவன் அந்தத் துறையின் ஆதாரமான செயல்களைச் செய்து, தூண்போல் தாங்கியும் வந்தான். இரண்டாம் நிலை பணியாளரைக்

கண்டுபிடித்துவிட்டால், பெரும்பாலான பிரச்னைகள் எளிதில் தீர்ந்துவிடும். விஜய், வருணிடம் தனக்கு அடுத்த இடத்தில் நீதான் இருக்கிறாய் என்று சொல்லி அவனை உற்சாகப்படுத்தினான். வருண் தன் பொறுப்பை உணர்ந்து விஜய் போலவே எல்லா வற்றையும் திட்டமிட்டு திறமையாகச் செய்து முடித்தான். எனவே விஜய்க்கு மற்ற விஷயங்களில் கவனம் செலுத்தச் சக்தியும் நேரமும் கிடைத்தன.

வருண் அதிவேகமாக முன்னுக்கு வரவேண்டும் என்ற உத்வேகத்தில் இருந்தான். ஆனால், அது பலிக்காமல் போகவே பொறுமையை இழக்க ஆரம்பித்தான். வெற்றிகரமான பணியாளர்களின் எதிர்பார்ப்புகளைப் பூர்த்தி செய்வது எந்தவொரு நிறுவனத்துக்கும் பெரிய சவால்தான். 'தோல்வியைக் கையாள்வது எப்படி?' என்பதற்கு ஆயிரக்கணக்கில் புத்தகங்கள் உள்ளன. ஆனால், வெற்றிகரமானவர்களைக் கையாள்வது எப்படி என்று சொல்லும் புத்தகம் ஒன்று கூட இல்லை.

எதிர்பாராதவிதமாக, ஒரு மனிதவள மேம்பாட்டுக் கருத்தரங்கத்துக்கு விஜய் போனான். அங்கு, ஒரு நிறுவனத்தில் பணியாற்றும் தொழிலாளர்களின் பல்வேறு அடுக்குகளைப் பற்றி நன்கு அறிந்துகொண்டான்.

பணியாளர்களை எத்தனை வகையாகப் பிரிக்கலாம்?

நிலை-1 திறமை கிடையாது. ஆனால், ஊக்கத்துடன் இருப்பார்.

நிலை-2 திறமை உண்டு. உத்வேகமும் உண்டு.

நிலை-3 திறமையும் கிடையாது. உத்வேகமும் கிடையாது.

நிலை-4 திறமை உண்டு. உத்வேகம் கிடையாது.

**நிலை-1 திறமை கிடையாது. ஆனால், ஊக்கத்துடன் இருப்பார்**

இந்த நிலையில் இருக்கும் நபர் மிகவும் உற்சாகத்துடன் இருப்பார். ஏனென்றால், போட்டியிட்ட பல்வேறு நபரில் இவர் திறமையானவர் என்று தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பார். ஆனால், உற்சாகம் மட்டுமே ஒருவரை சிறப்பாகச் செயல்பட வைக்காது. ஏனென்றால், அவருக்கு அந்த நிறுவனத்தின் செயல்பாடுகள், மனிதர்கள் பற்றி எதுவும் தெரிந்திருக்காது. திறமையும் மிகக் குறைவாக இருக்கும். இது பயிற்சிக் காலம்.

**நிலை-2 திறமை உண்டு. உத்வேகமும் உண்டு**

இந்நிலை வளரும் நிலை. மேலதிகாரி, பணியாளர் இருவருக்கும் மிகவும் பலன் தரக்கூடிய நிலை. இந்த நிலையில், ஒருவருடைய செயல் திறன் அதிகரிக்கும். நிறுவனத்தின் செயல்பாடுகள், மனிதர்கள் பற்றி நன்கு தெரிந்திருக்கும். ஊழியர் மிகவும் உற்சாகத்துடன் பணி புரிவார். வண்ணவண்ணக் கனவுகளோடு வந்து சேரும் இளைஞர்கள் இந்நிலையை விரைவில் எட்டி விடுவார்கள். ஆனால், ஒரு குறிப்பிட்ட காலத்துக்குமேல், நிர்வாகத்தால் இவர்களைத் திருப்திகரமாக வைத்திருக்க முடியாது என்பதுதான் இதில் உள்ள கவனிக்கவேண்டிய விஷயம்.

**நிலை-3 திறமையும் கிடையாது. உத்வேகமும் கிடையாது**

இது, நிர்வாகம், பணியாளர் என இரு தரப்பினருக்கும் சிக்கலான நிலை. ஏனெனில், பணியாளர் அந்தத் துறையில் சாமர்த்தியசாலி ஆகிவிடுகிறார். எல்லா நுணுக்கங்களும் அவருக்கு நன்கு தெரியும்.செய்த வேலையையே செய்துச் செய்து அவருக்கு அலுப்பு ஏற்பட்டுவிடும். வேலையில் எந்தச் சவாலும் அவருக்கு இருக்காது. இதனால் நிர்வாகத்துக்கும் பெரியச் சிக்கல். பணியாளர் முழு மனத்துடன் பணியில் ஈடுபடாததால் உற்பத்தி பாதிக்கப்படும். பெரும்பாலான பணியாளர்கள் இந்த நிலையையில் அடிக்கடி மாட்டிக்கொள்வார்கள்.

**நிலை-4 திறமை உண்டு. உத்வேகம் கிடையாது**

இறுதி நிலை. இரு தரப்பினருக்கும் தர்மசங்கடமான நிலை. ஏனெனில், இருவரும் முடிவெடுக்க முடியாமல் காலத்தை ஓட்டும் நிலை. பணியாளரும் சுயமாக வேறு வேலைக்கு முயற்சி செய்வது இல்லை: அதே நேரத்தில் நிர்வாகமும் அவரை வேலையை விட்டுத் தூக்குவதும் இல்லை. இரு தரப்பினருக்கும் இந்தச் சூழ்நிலை சிக்கலானது. யாருக்குமே இப்படியான ஒரு நிலை வரவே கூடாது.

இந்நான்கு நிலைகளையும் ஆராய்ந்த பிறகு, விஜய் ஒரு முடிவுக்கு வந்தான். வருண் இப்போது மூன்றாம் நிலையின் எல்லையில் உள்ளான். செய்கிற வேலையில் அவனுக்கு நிறைவு இல்லை. இந்த மனச் சோர்வு, கெட்ட அறிகுறி இல்லை. ஏனென்றால் இப்போது செய்து வருவதைவிடக் கூடுதலான,

சவாலான வேலைகளைச் செய்ய விரும்புவதையே அது காட்டுகிறது. இந்த நிலையை அடைந்துவிட்டால் ஒருவர் தனக்குள் ஒரு கேள்வியைக் கேட்டுக்கொள்ள வேண்டும். நான் பழைய வேலையையே செய்து வருகிறேனா... புதியவற்றைச் செய்கிறேனா? என்று சிந்திக்க ஆரம்பிக்க வேண்டும். புதிய துறைகள், புதிய திட்டங்களில் ஆர்வம் செலுத்தவேண்டும். உங்களுடைய ஆர்வத்தையும் உற்சாகத்தையும் பார்க்கும் மேலதிகாரிகள் புதிய பொறுப்புகளை உங்களுக்குக் கொடுப்பார்கள். தானாகவே புதிய எல்லைகளை நோக்கி நகர ஆரம்பிப்பீர்கள்.

எல்லா நிறுவனங்களிலும் இந்த நான்கு நிலைப் பணியாளர்களும் இருப்பார்கள். ஒவ்வொரு பணியாளரும் தன் தொழில் வாழ்க்கையில் இந்த நான்கு நிலைகளையும் ஏதாவது ஒரு கட்டத்தில் கடக்கவும் செய்வார்கள். ஒருவர் மூன்றாம் நிலையை எட்டும் போதே, அதே நிறுவனத்தில் இரண்டாம் நிலைக்குச் செல்ல வேண்டும். இல்லையேல், புதிய நிறுவனத்தில் முதல் நிலைக்குச் செல்லவேண்டும். இதைப்போல், நிர்வாகமும் ஏதாவது ஒரு பணியாளரிடம் மனச்சோர்வின் அறிகுறிகள் தென்பட்டால் ஆரம்பத்திலேயே அடையாளம் கண்டுகொண்டுவிடவேண்டும். நான்காம் நிலைக்கு அவர் செல்வதற்கு முன்பாகவே நிலைமையைச் சரி செய்துவிடவேண்டும்.

திறமைக்குச் சவாலான வாய்ப்புகள் எதுவும் இல்லை என்பதால் வருண் மூன்றாம் கட்டத்துக்குள் நுழைய இருப்பதை விஜய் தெரிந்துகொண்டான். அவனுக்கு சவாலாக அமையும் இன்னொரு துறைக்குப் பதவி உயர்வு கொடுத்து அனுப்பினான்.

விஜயின் இந்த முடிவு சரியா... தவறா? தனிப்பட்ட முறையில், இன்னொரு இரண்டாம் நிலைப் பணியாளரை உருவாக்கும்வரை விஜய்க்கு சிரமம்தான். ஆனால், வருணின் எதிர்காலத்தைப் பொறுத்தவரையில் அந்த முடிவுதான் மிகவும் நல்லது. எனவே, விஜய் தனக்குக் கீழ் பணிபுரிபவரின் நலனைக் கருத்தில் கொண்டு நல்ல முடிவைத்தான் எடுத்தான்.

வருண் பன்னாட்டு நிறுவனம் ஒன்றின் மேலதிகாரி பதவிக்கு விரைவிலேயே உயர்ந்துவிட்டான். வேலையின் வீச்சை அதிகரித்தால் சவால் அதிகரிக்கும். அதனால் வருண் மேலும் திறமையுடன் செயல்படுவான்.

**மேலதிகாரியின் பார்வையில்:**

- செய்யும் பணியில் சவால்கள் இல்லை எனில், வெற்றிகரமான பணியாளர்கள், வெளி வாய்ப்பைத் தேடி ஓடுவர். எனவே, அதே நிறுவனத்தின் வேறு துறையிலோ வேறு பிரிவிலோ அவர்களை மாற்றம் செய்து தக்கவைத்துக் கொள்ள வேண்டும்.

- செய்யும் பணியைச் செழுமைப்படுத்தாமல், இரண்டு மூன்று வருடத்துக்கு மேல் பணியாளரை ஒரே வேலையைச் செய்யச் சொல்லக் கூடாது.

- ஒவ்வொரு மேலாளரும் அவரவரின் கீழ் பணி புரியும் ஊழியரோடு அவரவர்களது வருங்கால வளர்ச்சிப் பணித்திட்டம் பற்றிப் பேச ஊக்கம் அளிக்க வேண்டும்.

- மாதாந்தோறும் அல்லது இரண்டு மூன்று மாதங் களுக்கு ஒரு முறை பணியாளர்களோடு மறு பரி சீலனைக் கூட்டம் வைத்துக் கொள்ள வேண்டும். இதனால், மனச் சோர்வடைந்து மூன்றாம் நிலைக்குள் அவர்கள் நுழைவதற்கு முன் அடையாளம் கண்டுவிட முடியும்.

**பணியாளர் பார்வையில்:**

- நான்கு நிலைகளில் எதில் பணிபுரிகிறோம் என்பதை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். 2-ம் நிலைக்கு விரைவாகச் செல்ல அனைத்து முயற்சிகளையும் எடுக்க வேண்டும்.

- பணியில் மனச்சோர்வு ஏற்பட ஆரம்பித்ததுமே சுதாரித்துக் கொண்டுவிடவேண்டும். மனம் குன்றி 4-ம் நிலைக்குப் போகும் முன் ஆவண செய்ய வேண்டும்.

- உங்களுடைய வளர்ச்சிக்கு என்ன செய்கிறீர்கள் என்பது முக்கியமில்லை. அடுத்தவரின் வளர்ச்சிக்கு

என்ன செய்கிறீர்கள் என்பதுதான் உங்களுடைய வளர்ச்சியின் வேகத்தையும் தீர்மானிக்கும்.

- உங்களுக்குக் கீழே செயல்திறன் மிக்க பல நட்சத்திரங்களைப் பிரகாசிக்கவிடுங்கள். அப்போது தான் நீங்கள் பெரிய நட்சத்திரமாகப் பிரகாசிப்பீர்கள்.

மிகவும் வெற்றிகரமான பணியாளர்களுடைய
பணி எல்லையை விரிவடையச் செய்யுங்கள்.
அதன் மூலம் அவர்களே நினைத்துப் பார்க்க முடியாத
அளவுக்குத் திறமையுடன் வெளிப்பட வழி செய்து கொடுங்கள்.

# 5

## பணியாளர்களின் திறமையை வெளிக்கொணர்தல்!

வருண், அந்தத் தொலைத்தொடர்பு நிறுவனத்தில் விஜய்யுடன் தொடர்ந்து பணிபுரிந்துவந்தான். வர்த்தக வளர்ச்சித் துறையை மிகவும் திறம்பட நிர்வகித்ததால் அதைப் பாராட்டி விஜய்க்கு வணிகத்துறையின் கூடுதல் பொறுப்பும் வழங்கப்பட்டது. குழு நன்றாகச் செயல்பட்டாலும், அந்தத் துறை அதன் முழு பலத்துக்கு ஏற்ப வெற்றிபெறவில்லை. முக்கியமான குழு உறுப்பினர்களைக் கூப்பிட்டு விஜய் விசாரித்தான்.

ராஜு என்ற நிர்வாகி கடந்த இரண்டு ஆண்டுகளாகச் சரியாகப் பணிபுரியவில்லை என்ற உண்மை வருண் மூலமாக விஜய்க்குத் தெரியவந்து. சராசரிச் செயற்பாட்டுக்கும் கீழே ராஜுவின் செயற்பாடு இருந்தாகப் புள்ளிவிவரம் எடுத்துக் காட்டியது. இதனால், வணிகத்துறையின் செயற்பாடே தரை மட்டமானது.

'விஜய் சார்! நானும் ராஜுவோடு பல முறை பேசிப் பார்த்து விட்டேன். அவரோட மந்தமான செயல்பாட்டால், துறைக்கே கெட்ட பேர் என்றும் மற்றவரோட மிக நல்ல பல செயற்பாடுகள் பலனற்றுப் போகின்றன என்றும் எடுத்துச் சொல்லியாகி விட்டது. ஈடுபாட்டுடன் வேலை செய்தால் என்ன நன்மை யெல்லாம் கிடைக்கும் என்பதையும் சொல்லிப் பார்த்து விட்டேன். அவரோ திருந்துவதாகத் தெரியவில்லை' என்று வருண் தன் பிரச்னையைச் சொன்னான்.

மனிதர்கள் அனைவருக்குள்ளும் ஒரேவித வலிமையே இருக்கின்றன. சரியான நேரத்தில், சரியான நபர், சரியான முறையில் அவற்றைத் தட்டி எழுப்பி வெளியே கொண்டு வந்தால் போதும் என்ற நம்பிக்கை விஜய்க்கு இருந்தது. மீண்டும் ராஜுவைப் பழைய நிலைக்குக்கொண்டு வர விஜய் முடிவு செய்தான். வருணிடம் இது பற்றிப் பேசினான். 'ஒரு நிறுவனத்தில் வெவ்வேறுவிதமான பணியாளர்கள் இருப்பார்கள். ஒவ்வொருவரையும் ஒவ்வொருவிதமாகக் கையாள வேண்டியிருக்கும்' என்று சொல்லி அதை விஜய் விளக்கினான்.




**வகை:1 வெளிப்படுத்து : உயர்ந்த ஆற்றல் - குறைந்த அறிவு**

இவ்வகையைச் சேர்ந்தவர்கள் ஆற்றல் மிக்கவர்கள். ஆனால், அறிவை மேம்படுத்திக் கொள்ளும் வாய்ப்பு கிடைத்திருக்காது. அவர்களைப் பணியின் எல்லா அம்சங்களிலும் ஈடுபடவைக்க வேண்டும். அப்போதுதான், அவர்களுக்குள் தன்னம்பிக்கை துளிர்விடும். அறிவு தழைக்கும். ஒருவேளை, அவர்களின் ஆற்றலை ஆக்கபூர்வமாக ஒருமுகப்படுத்தத் தவறிவிடுவோம் என்றால், எல்லா ஆற்றலும் பாழாகிப்போகும். ஆகவே, இத்தகைய நபர்கள் வளர வழிகாட்டுவது முக்கியமாகும்.

**வகை:2 விரிவாக்கு : உயர்ந்த ஆற்றல் - உயர்ந்த அறிவு**

இவ்வகையைச் சேர்ந்தவர்கள் ஆற்றலோடு அறிவும் மிக்க வர்கள். தொடர்ந்து இவர்களின் பணிவீச்சை விரிவுபடுத்த வேண்டும். கூடுதல் பொறுப்புகள் கொடுத்து இவர்களின் பணியை மேம்படுத்தவேண்டும். இத்தகையோருக்கு ஒரே துறையில் கூடுதல் பொறுப்புகளையும் பல்வேறு துறைகளுக் கான பொறுப்புகளையும் கொடுப்பதன் மூலம் வருங்காலத்துக் கான தலைவர்களை நம்மால் உருவாக்க முடியும். இவ்வகையைச் சேர்ந்த பணியாளர்களுக்குத் தொடர்ந்து சவால்களைக் கொடுத்து அவர்களுடைய ஒப்புயர்வற்ற ஆற்றலை வெளியே கொண்டுவரவேண்டும்.

**வகை:3 கண்டுபிடி : உயர்ந்த அறிவு - குறைந்த ஆற்றல்**

இவ்வகையைச் சேர்ந்தவர்கள் அறிவுடையவர்கள். முழுமை யாக இவர்களைப் பயன்படுத்தாமல் போனால், தத்தமது ஆர்வத்தையும் ஆற்றலையும் இழந்துவிடுவார்கள். அதன் பிறகு, நிறுவனத்தின் செயல்பாடுகளைத் தொடர்ந்து விமரிசிக்கும் நிலைக்குப் போய்விடுவார்கள். இவர்களுக்கு சுவாரசியமான சிறப்பான பெரிய திட்டங்களைக் கொடுத்துக்கொண்டே இருக்க வேண்டும். குறிப்பாகப் பணியிடத்தில் இருந்து வெளியே வித்தி யாசமான சூழலில் செயல்பட வைப்பது நல்லது. தமது உள்ளாற் றலை வெளிக்கொணர சவாலான பணிகளைத் தேடி எடுத்துச் செய்பவர்கள் வாழ்க்கையில் கிடுகிடுவென வளர்ந்துவிடுவர். முன்பின் தெரியாத காரியங்களை இவர்களிடம் தொடர்ந்து ஒப்படைத்து முழு ஆற்றலை வெளிக் கொண்டுவருவது மிகவும் அவசியம்.

**வகை:4 ஈடுபடுத்து : குறைந்த ஆற்றல் - குறைந்த அறிவு**

'சுமாராகப் பங்களிப்பவர்கள்' என்று கார்ப்பரேட் சொல்வழக் கில் இவர்களைப் பற்றிச் சொல்வார்கள். அறிவும் ஆற்றலும் இல்லாதவர்கள் என்று சொல்ல முடியாது. ஆனால், இப்போது இந்த இரண்டையும் வெளிப்படுத்தாமல் இருக்கிறார்கள். ஒரே பணியையே செய்துவருதல், மோசமான தலைமை, தாழ்மை யான சுய கணிப்பு, வளர்ச்சிக்கு வாய்ப்பின்மை என்று பல்வேறு காரணங்களை அடுக்கிக்கொண்டே போகலாம். இவர்களுக்குள் திறமை ஒளிந்துகொண்டு இருக்குமானால்,

தேவையான நம்பிக்கை - ஆக்கம் - ஊக்கம் - நல்லாதரவு போன்றவற்றைத் தந்து இவர்கள் முழுப்பலத்துடன் வெளிப் பட வழிசெய்து கொடுக்கவேண்டும்.

'ஒரு நிறுவனத்தில் பல தரப்பட்ட பணியாளர்கள் இருப்பது மிகவும் நல்லது. ஒவ்வொருவரும் முழுத்திறமையுடன் வெளிப்பட நாம்தான் வசதி வாய்ப்புகளை உருவாக்கித் தரவேண்டும். இவரிவர் இன்ன இன்ன ரகம் எனப் பிரித்து, அதற்குத் தக்கபடி வாய்ப்புகளை ஏற்படுத்தி அவர்களை முன்னுக்குக் கொண்டு வரவேண்டும். இரண்டாம், மூன்றாம் வகைப் பணியாளர்களுக்குத் தக்க வாய்ப்புகளை உருவாக்கிக் கொடுத்தால், பிற்காலத்தில் தலைமை ஏற்று மற்றவர்களுக்கு வழி காட்டுமளவுக்குப் பணியைச் சிறப்பாகச் செய்வார்கள் என்பதில் சந்தேகம் வேண்டாம். முதல், நான்காம் வகைப் பணியாளர்களை, இரண்டு, மூன்றாம் வகை பணியாளர்களின் தலைமையின் கீழ் அமர்த்தவும். இவ்விதம் செய்வதால், விஷயங்களைக் கற்றுக்கொண்டு சிறப்பாகச் செயல்படுவார்கள்' என்று வருணுக்கு விஜய் விளக்கினான்.

'வருண்... பொறுமையைக் கடைப்பிடி. எந்தவிதத்தில் ராஜுவை வழிக்குக் கொண்டுவந்து நிறுவனத்தின் நன்மைக்கு ஈடுபடுத்த லாம் என்பதைப் பற்றி யோசி' என்று விஜய் முத்தாய்ப்பு வைத்தான்.

விஜயின் அறிவுரைக்குப் பிறகு வருண், ராஜுவைச் சந்தித்துப் பேசினான். தன்னம்பிக்கை இல்லாமல் போனதால், அறி வாற்றல் இருந்தும் ராஜுவால் சாதிக்க முடியாமல் போனது என்பதை வருண் உணர்ந்தான், தன்னைப் பற்றிய தாழ்வான அபிப்ராயத்தால் நிறுவனம் முழுதுமே கேலி செய்யும் நிலைக்கு ராஜு ஆளாகியிருந்தான். வேலையில் உற்சாகம் இல்லாமல் போனதோடு, வாழ்க்கையிலும் எந்த லட்சியமும் இல்லாமல் போனது.

சார்ட்டர்ட் அக்கவுண்டன்ஸியை முடிப்பது ராஜுவின் நெடு நாளைய கனவு. ஆனால், தேர்வு நேரத்தில் படிக்கவும் எழுதவும் அலுவலகத்தில் ஒருபோதும் விடுமுறை தரப்பட்டதே இல்லை. தனிப்பட்ட முறையில், ராஜுவின் விருப்பம் என்ன என்பதை நிறுவனத்தில் யாரும் விசாரித்தது கூட இல்லை. இதையும் வருத்தத்தோடு வருணிடம் ராஜு சொல்லியிருந்தான். ராஜு

சரியாகச் செயலாற்ற முடியாமல் போனதற்கு இதுவே காரணம். 'ஒருவர் வேலையில் எந்த அளவுக்குத் தீவிரமாக ஈடுபடுவார் என்பதை வேலை அல்லாதவற்றில் எவ்வளவு ஆர்வத்துடன் ஈடுபடுகிறார் என்பதை வைத்தே தீர்மானிக்க முடியும்' என்ற ஜிக் ஜிக்லர் வாக்கியம் வருண் நெஞ்சில் நிழலாடியது. சார்ட்டர்ட் அக்கவுண்டன்ஸி தேர்வில் வெற்றி பெற வழிசெய்து கொடுத்தால், ராஜு நன்றாகப் பணிபுரிவான் என்று வருண் தீர்மானித்தான்.

விஜயின் அறிவுரைப்படி, ராஜுவுக்கு ஒரு மாதம் விடுமுறை வழங்கப்பட்டது. தாற்காலிகமாக அவனுடைய இடத்தில் வேறொருவர் நியமிக்கப்பட்டார். ராஜுவுக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. தன் மீதும் தன் படிப்பின் மீதும் நிர்வாகம் அக்கறை காட்டுவது குறித்து இரட்டிப்புச் சந்தோஷம். முடுக்கிவிட்ட அம்பைப் போல, படிக்கத் தொடங்கினான். தேர்வில் மாநில அளவில் முதலிடம் பிடிக்க முயற்சி செய்கிற மாணவன் போல், படிப்பில் கவனம் செலுத்தினான்.

வெற்றிகரமாகத் தேர்வும் எழுதி நல்ல மதிப்பெண்களுடன் ராஜு பாஸானான். வருண், விஜயின் முன்னால் நன்றிப் பெருக்கின் கண்ணீர் அரும்ப வந்து நின்றான். ராஜு தேர்ச்சி பெற்றதற்கு மட்டுமல்லாமல் தமது அணுகுமுறை வெற்றியடைந்ததை நினைத்தும் வருணும் விஜயும் மகிழ்ந்தார்கள். ராஜுவின் நெடு நாளைய கனவு என்ன என்பதைத் தெரிந்துகொண்டு அந்தக் கனவை நனவாக்கியிருக்கிறார்கள். இதன் மூலம் அவனுக்குப் புதியதோர் வாழ்க்கையை உருவாக்கிக் கொடுத்திருக்கிறார்கள். உயர்வான விழிப்புணர்வும் சுற்றி இருப்பவர்களைக் கூர்ந்து கவனிக்கும் குணமும் இருந்தால் பிறருடைய கனவைக்கூட ஒருவரால் நிறைவேற்ற முடியும்.

ராஜுவின் வாழ்க்கையில் மிகப் பெரிய திருப்பம். இதன்பின், ராஜு பழைய வாழ்க்கையைத் திரும்பிப் பார்க்கவே இல்லை. தகவல் தொழில்நுட்பத் துறையில் முன்னணி பதவியில் இப்போது இருந்து வருகிறான்.

**படிப்பினைகள்:**

- கீழ் பணிபுரியும் பணியாளர்களின் ஆற்றலை ஒருங்கிணைத்து உற்சாகப்படுத்துவது ஒவ்வொரு தலைவரின் முக்கியக் கடமையாகும்.

- வெவ்வேறுவிதமான அறிவும் ஆற்றலும் கொண்ட பணியாளர்களை வெவ்வேறுவிதமாகக் கையாள வேண்டும் என்பதைப் பணியில் அமர்வோரும் அமர்த்துவோரும் அறியவேண்டும்.
- மிகவும் திறமையானவர்களை மட்டுமல்லாது சுமாரானவர்களையும் நிர்வாகம் தக்கவைக்க வேண்டும். அப்போதுதான் ஒரு நிறுவனம் சமச்சீராகத் திறம்படச் செயல்பட முடியும்.
- ஒரு பணியாளர், தான் எந்த வகையைச் சேர்ந்தவர் என்பதைத் தெரிந்துகொள்வதோடு, மேற்கொண்டு எந்தத் திசையில் போய் வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்பதையும் அறிய வேண்டும்.
- கூடுதல் பொறுப்புகளை ஏற்று, புதுப்புதுத் துறைகளைத் தெரிந்து கொள்ளுங்கள். வெவ்வேறு நிலைகளில் பணிபுரியுங்கள்.

சுமாராகச் செயல்படும் பணியாளரின்
சுய கௌரவத்தை உயர்த்துங்கள்.
அதன் மூலம் அவருடைய வாழ்க்கையில்
மாபெரும் மாற்றத்தைக் கொண்டு வாருங்கள்.

# 6

## நிலையான வேலை... நீடித்த நன்மை

ஏதாவது பிரச்னை என்றால், கடற்கரையில் கண்களை மூடிக் கொண்டு அலைகளின் சப்தத்தைக் கேட்டபடி மௌனமாக அமர்ந் திருப்பது வருணின் வழக்கம். அலையும் கடலும் எந்தத் தீர்வை யும் தரப்போவதில்லை. என்றாலும் தன்னை அமைதிப்படுத்திக் கொள்ள அவன் அப்படித் தனிமையில் அமர்வது வழக்கம்.

குழப்பமான சூழ்நிலையில் வருண், அடுத்ததாக என்ன செய்ய லாம் என்று யோசித்துக் கொண்டிருந்தான். தகவல் தொடர்பு நிறுவனத்தில் இருந்து உற்பத்தி செய்யும் நிறுவனத்துக்கு ஒரு வருடத்துக்கு முன்புதான் வந்து சேர்ந்திருந்தான். நிறுவனம் தொடர்பாக உறுத்தல் ஏதும் இல்லை. ஆனாலும் பணியில் மன நிறைவு இல்லை. பணி சவாலாக இல்லை. செய்த வேலை யையே செய்துவந்ததால் மனச் சோர்வு. குடும்பத்தை நினைத்துப் பார்த்தான். இதே நிறுவனத்தின் இன்னொரு கிளைக்குச் சென்று புதிய பொறுப்புகளை ஏற்கலாமா? அல்லது புதிய வேலையைத் தேடி வேறு நிறுவனத்துக்குப் போகலாமா? அந்த வேலையும் பிடிக்காமல் போனால் என்ன செய்வது? மனத்துக்குள்ளும் கடல் அலைகளின் குமுறல். எந்தக் கோணத்தில் பார்த்தாலும் குழப்பம். சற்று அமைதியாக ஆழ்ந்து யோசித்தால், சரியான முடிவு கிட்டும் என்பது அவன் நம்பிக்கை.

'ஹாய்' என்ற நன்கு பரிச்சயமான குரல் கேட்டது... கூடவே மென்மையாக யாரோ தோளில் தட்டிக் கொடுப்பதை உணர்ந் தான். திரும்பிப் பார்த்தால் விஜய்!

பரஸ்பர நல விசாரிப்புகள் முடிந்த பிறகு, வருண் தன் மனக் கவலையைச் சொன்னான். பணியை விடுவதா... தொடர்வதா? என்பது பற்றி விஜய் தனது அனுபவத்தைப் பகிர்ந்துகொள்ள ஆரம்பித்தான்.

'சென்னையில் ஓர் ஆட்டோமொபைல் நிறுவனத்தில், படிப்பை முடித்துப் பணியைத் தொடங்கினேன். நிறுவனம் சிறியதும் இல்லை; பெரியதும் இல்லை; நடுவாந்திரம். வெற்றிகரமான தாக இருந்தது. ஆனால், அந்த வேலையில் ஒருவித முழுமை இல்லை. தொழிற்துறை பற்றியும் என் எதிர்கால வளர்ச்சி பற்றியும் ஒருவித நிச்சயமற்றதன்மை இருந்தது. உற்பத்தி முதல் விற்பனை வரை தலைமைப் பொறுப்பு என்னிடம் இருந்தது. எனவே, பல விஷயங்களைக் கற்றுக் கொள்ள முடிந்தது. ஆனால், மிகப் பெரிய சர்வதேச நிறுவனத்தில் பணிபுரிந்திருந் தால் கிடைத்திருக்க வேண்டிய அனுபவம் கிடைக்காமல் போனதை உணர்ந்தேன். வேறு வேலை தேடிக் கொள்ளலாம் என்று நினைத்தேன். ஆனால், சொந்த ஊரில் குடும்பத்துடன் வசித்து வந்தால், சௌகரியமான வாழ்க்கையை இழக்க முதலில் மனமில்லாமல் இருந்தது. ஆனால், ஒரு கட்டத்தில் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு இன்னொரு நகரத்தில் இருந்த பெரிய தகவல் தொடர்பு நிறுவனத்தில் சேர்ந்துவிட்டேன். புதிய பணி... வளர்ந்து வரும் நிறுவனம்; ஒவ்வொரு நாளும் சுவாரஸ்யம். குடும்பம் சென்னையில் இருந்தது. மனைவியின் வேலையும் அங்குதான். விடுமுறையில் மட்டும் சென்னைக்குச் செல்வேன்.

நாளடைவில் வீட்டு நினைவுகள் அதிகரிக்கத் தொடங்கின. சென்னைக்கு மாற்றல் கிடைக்குமா என்று பார்க்க ஆரம்பித் தேன். இது புதிய வேலையில் என் முன்னேற்றத்துக்குத் தடை யானது. என் மனைவியும் நான் பணிபுரியும் நகரத்துக்குப் பணி மாற்றத்தில் வரமுடியுமா என்று பார்த்தாள். பலனில்லை.' விஜய் சிறிது இடைவெளி விட்டு மேலும் தொடர்ந்தான்.

'வருண்! நான் நன்கு யோசித்தேன். என் மனத்தில் இரண்டு எண்ணங்கள் அலை மோதின. முதலாவது : ஒரு பணியாளர் முன்னுக்கு வரவேண்டும் என்றால் ஒரே நிறுவனத்திலேயே தொடர்ந்து வேலை செய்ய வேண்டும். செய்யும் வேலை சவாலானதாக இல்லையென்றால் அந்த நிறுவனத்திலேயே வேறு சவாலான துறைகளுக்கு மாற்றல் வாங்கிக் கொள்ள வேண்டும். இதன் மூலம் பல புதிய அனுபவங்கள் கிடைக்கும். இது அடுத்த

அடி எடுத்து வைக்க நல்ல நம்பிக்கையைத் தரும். என் மனத்தில் இன்னொரு எண்ணமும் இருந்தது. ஒரே நிறுவனத்தில் செய்த வேலையையே செய்து வருவது சலிப்பையே தரும்; நீண்ட கால அளவில் பார்த்தால் எந்த வளர்ச்சியும் இருக்காது; வயது ஆன வுடன், புதிய சூழ்நிலைகளைச் சந்திக்க மனம் இடம் கொடுக்காது; இப்படி என் மனத்தில் இரண்டு எண்ணங்கள் அலை மோதின.

வேலையை விட்டு என் தொழில் ரீதியான முன்னேற்றத்துக்கு மனைவி முழுமையாகக் கை கொடுக்கவேண்டும் என ஒரு நாள் என் மனைவியும் நானும் திடீரென்று முடிவு எடுத்தோம். எங்கள் விஷயத்தில் இருவருக்குமே இந்த முடிவு பிடித்திருந்து. அதுவரை அவள் பார்த்து வந்த காலை 9 மணி முதல் மாலை 5 மணி வரையிலான அலுவலக வேலை அவளுக்கும் பிடிக்காமல் தான் இருந்தது. அந்த வேலையை விட்ட பிறகுதான் வாழ்க்கை யின் முக்கியத்துவத்தை நன்கு உணர்ந்தாள். அதுதான் எங்கள் இருவரின் வாழ்க்கையிலும் மிகப் பெரிய திருப்பத்தை ஏற் படுத்தியது.

குடும்பத்துடன் நான் இடம்பெயர்ந்து வந்ததைத் தெரிந்துகொண்ட நிர்வாகம், பணியின் மீது எனக்கு இருந்த அக்கறையைப் புரிந்து கொண்டு, உடனேயே பெரிய பொறுப்புகளையும் பதவி உயர்வை யும் தந்தது. குடும்பமும் அருகில் வந்துவிட்டது. அலுவலகத்துக்கு வந்து போவதிலிருந்த சிக்கல்களும் தீர்ந்துவிட்டன. எனவே மிகுந்த சுதந்தரத்துடன் முழு வீச்சில் வேலைகளில் ஈடுபட்டேன். நிறுவனத்தின் எந்தத் துறையில் எந்தச் சவாலான வேலையையும் உற்சாகத்துடன் எடுத்துச் செய்தேன். மூன்றே வருடத்தில் கார்ப்ப ரேட் அலுவலகத்தில் மிக உயர்ந்த பதவியில் அமர்த்தப்பட்டேன்.

என்னால் நன்றாக முன்னுக்கு வர முடிந்தது. காரணம், அதே நிறுவனத்தில் வெவ்வேறு துறைகளிலுள்ள பொறுப்புகளை எடுத்துக்கொண்டேன். வளர்ச்சிப் பருவமான 30-32 வயதை அடைந்ததும் ஒரே துறையில் மேலே மேலே பதவி உயர்வு பெற்றுச் செல்வதோடு, அந்த நிறுவனத்தில் பல்வேறு துறைகளிலும் நல்ல அனுபவத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டும் என்ற தீர்மானத்தை எடுத்துக் கொள். ஒரு பணியாளருக்கு உண்மையான வளர்ச்சி ஒரு வெற்றிப் படியிலிருந்து இன்னொரு வெற்றிப் படிக்கு, எந்தவித சந்தோஷ இழப்பும் இன்றி, இன்னும் வெற்றி பெற வேண்டும் என்ற ஆர்வத்துடன் செல்வதுதான். உன்னைப் போன்றோர் முன்னுக்கு

வராமல் யார் வரப்போகிறார்கள். விரைவில் உன்னை உயர்ந்த பதவியில் சந்திக்கிறேன்' என்று சொல்லிவிட்டு விஜய் விடைபெற்றான்.

**படிப்பினைகள்:**

- ஒரு நிறுவனத்தில் அதிக வீச்சு கொண்ட பொறுப்பு களை ஏற்க வேண்டும். அப்போதுதான், புதிய விஷயங்களைத் தெரிந்து கொள்ள முடியும். புதிய சவால்களைச் சந்திக்க முடியும்.
- வளர்ச்சியில் இருக்கும் நிறுவனத்தில் பணியாற்ற வாய்ப்பு கிடைக்குமானால், பலவற்றைக் கற்க வாய்ப்பு கிடைக்கும்.
- ஒரே நிறுவனத்தில் கணிசமான காலம் தொடர்ந்து பணிபுரிவதுதான் நல்லது. அப்போதுதான் ஒரு குறிப்பிட்ட சூழலில் பல்வேறு வேலைகள் பற்றிய முழுமையான அனுபவம் கிடைக்கும்.
- நிறுவனத்துக்குள்ளேயே மாறி மாறிப் பணி செய்ய வாய்ப்பு கிடைக்குமானால், அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். கொடுக்கப் பட்டுள்ள பணியை நன்றாகச் செய்து நல்ல பெயர் பெற்றிருக்கும் நிலையிலேயே வேறொரு பணிக்கு மாறிவிட வேண்டும்.
- ஒரு நிறுவனத்தில் புதிய வாய்ப்புகள் கிடைக்கத் தாமதம் ஆகலாம். பொறுமையை இழக்காதீர்கள். புதிய நிறுவனத்தில் கொஞ்சம் கூடுதலாகக் கிடைக்கும் பணத்தைவிட நம்முடைய நிறுவனத்தில் நம்பகமான திறமையான பணியாளர் என்று நற்பெயர் எடுப்பதே மிகவும் முக்கியமானது.
- நிறுவனத்துக்கு உள்ளேயோ வெளியேயோ பணி மாற்றம் செய்யும்போது சுமுகமாக, நல்ல பெய ரோடு செய்யவேண்டும். அப்போதுதான் வாழ்க்கை யில் முன்னேறும்போது நல்ல நட்புறவுகளைத் தக்க வைத்துக் கொள்ள அது உதவும்.

- மரபு சாரா பொறுப்புகளை ஏற்றுக் கொள்ளுங்கள். அப்போதுதான், முழுமையான வளர்ச்சி காண முடியும்.
- தெள்ளத்தெளிவாக உங்கள் எதிர்பார்ப்புகளை மேலதிகாரிகளிடம் சொல்லிவிடுங்கள். வேலையை அல்லது துறையை மாற்றிக் கொள்வதற்கு முன் மிகவும் பொறுமையாக இருங்கள்.
- கணவன் மனைவி இருவரும் பணிபுரிபவரானால், இருவருமாக உட்கார்ந்து தனிமையில் பேச வேண்டும். இருவருடைய பணி பொறுப்புகளும் எதிர்பார்ப்புகளும் ஒன்றுக்கொன்று முரண்பாடில் லாமல் பார்த்துக் கொள்ளவேண்டும்.
- ஒவ்வொரு பணியாளரின் வாழ்க்கைச் சுழலும் வெவ்வேறானது. அது மாற்றம் தொடர்பான ஆர்வத்தையும் அணுகுமுறையையும் பொறுத்ததே ஒழிய, அவரவர் திறமையையும் கற்கும் ஆர்வத்தை யும் பொறுத்தது அல்ல.

ஒரு வேலையைப் பிடிக்காமல் போன பிறகு
வேறொரு வேலையைத் தேடிச் செல்லாதீர்கள்.
அந்த வேலையை நன்றாகச் செய்து கொண்டிருக்கும்போதே
அதே நிறுவனத்தில் இன்னொரு துறையைத் தேடிச் செல்லுங்கள்.

# 7

## இல்லத்தரசியின் இதயம்

கல்யாணம் ஒன்றில், வருண் தன் கல்லூரி நண்பன் ராஜனை விஜய்க்கு அறிமுகப்படுத்தி வைத்தான். ராஜன், தனது பணி மாற்றத்தைப் பற்றி யோசித்துக்கொண்டு இருந்த நேரமது. ராஜனது அறிவையும் உள்ளாற்றலையும் பார்வையாலும் பேச்சாலும் விஜய் அளந்து விட்டிருந்தான். எனவே, தனது நிறுவனத்தில் சேர்த்துக்கொண்டான்.

இரண்டு வருடங்கள் உருண்டோடின. செயல்படும் விதத்தில் அணுகுமுறையில் சிற்சில வித்தியாசங்கள் இருந்தாலும் விஜயை ராஜன் பெருமையுடன் மதிக்க ஆரம்பித்தான். விஜய் கொஞ்சம் கறாரான மேலதிகாரிதான். என்றாலும் அவன் கொடுக்கும் பொறுப்புகளையும் சவால்களையும் நன்கு செய்து முடிக்கும் பணியாளர்கள் நிச்சயம் நல்ல நிலைக்கு உயர்ந்து விடுவார்கள்.

ஒரு நாள் ராஜன் மதிய நேரம் உணவு விடுதியில் எதையோ பறிகொடுத்தவன்போல் அமர்ந்திருந்தான். வழக்கமாக சக ஊழியர்களுடன் சேர்ந்தே சாப்பிடுபவன், அன்று அவர்களைத் தவிர்த்திருந்தான். காரணம், மனைவி வனஜா அவனுடைய உடம்பைப் பற்றி அக்கறையே கொள்வதில்லை என்று ராஜன் காலையில் சத்தம் போட்டு விட்டு வந்திருந்தான். அது அவனுக்கு மிகவும் வருத்தமாக இருந்தது.அவர்களுக்குத் திருமணமாகிப் பல வருடங்கள் ஆகிவிட்டது. பள்ளிக்குச் செல்லும் வயதில்

குழந்தையும் இருந்தது. திருமண வாழ்க்கை முழுவதும் வீட்டு வேலையோடு குழந்தைகள், வயதான பெற்றோர்களின் மருந்து மாத்திரை, வாராந்திர மருத்துவப் பரிசோதனை, பத்தியச் சாப்பாடு என்று மாறி மாறிக் கவனித்துக் கொண்டு வந்தாள்.

தன் கையைப் பிடித்து வந்த நாளிலிருந்து மற்றவர்களின் தேவைகளைக் கவனித்துக் கவனித்துத் தன் ஆரோக்கியத்தை வனஜா ஒதுக்கி வைத்துவிட்டதாக ராஜனுக்குப்பட்டது. வீட்டுக்குச் சென்று தன் அன்பைத் தெரிவிக்க வேண்டும். இல்லையென்றால், தன்னுடைய கோபம் மட்டுமே அவள் மனத்தில் இருக்கும். அதற்கான காரணம் புரியாமல் போய்விடும் என்று நினைத்தான்.

கல்யாணத்துக்கு முன்னால் கர்நாடக சங்கீதக் கச்சேரிகளில் அவள் பாடி வந்ததும் அதற்காக அவளைப் புகழ்ந்து பேசியதும் நினைவுக்கு வந்தது. ஆம்... அவர்கள் காதலித்துத் திருமணம் செய்து கொண்டவர்கள்தான். திருமணம் முடிந்த பிறகு சில வருடங்கள் அந்தக் காதல் நீடிக்கவும் செய்தது. தேன் நிலவு நினைவுகள் வாழ்நாள் முழுதும் மறக்கமுடியாத அனுபவ மாகவே இருந்தன. வேலைக்கு எதுவும் செல்லாமல் இல்லப் பொறுப்புகளை அவள் கவனித்துக் கொள்ள வேண்டும் என்று தீர்மானித்தார்கள். ஒருவரையொருவர் புரிந்துகொண்டு சந்தோஷமாக வாழ்ந்து வந்தார்கள்.

செல்லப்பிள்ளை, ராம் பிறந்தான். குழந்தையின் வளர்ச்சியை அணுஅணுவாக ரசித்து வந்தார்கள். ராம், பள்ளிக்குப் போக ஆரம்பித்தான். சந்தோஷமான காதல் கதையில் இந்த இடத்தில் ஒரு திருப்பம் ஏற்பட்டது.

ராமின் படிப்பு, ஆரோக்கியம் ஆகியவற்றைக் கவனித்தல், வயதான ராஜனின் பெற்றோர்களைக் கவனித்துக் கொள்ளல் என்பதிலேயே எல்லா நேரத்தையும் செலவழித்ததால் ராஜனு டன் ஆற அமரப் பேச நேரமே இல்லாமலே போனது. குடும் பத்தை நிர்வகிப்பது அவளுக்குப் பிடித்துத்தான் இருந்தது. என்றாலும், ஒரே வேலையைச் செய்து வந்ததால் சலிப்பும் அலுப்பும் அவளைச் சூழ்ந்துகொண்டது. ராஜனிடமிருந்து எந்தவிதத் தார்மிக, மனரீதியான ஆதரவும் கிடைக்கவே இல்லை. எந்தவொரு வேலையிலும் அவன் உதவி செய்யவும் இல்லை. ராஜன் வெளி நாட்டில் சில காலம் வேலை

செய்தபோது ராமுக்கு அப்பாவாகவும் அம்மாவாகவும் இவளே செயல்படவேண்டியிருந்தது. ராஜனுடைய பெற்றோரின் மறைவுக்குப்பின், அவளுடைய தனிமை வெகுவாக அதிகரித்தது. அதற்குப்பின், எதைப் பேசினாலும் வாதங்கள் பிரதிவாதங்கள்... ஒவ்வொருவரும் தங்கள் தரப்பை நியாயப்படுத்தியே பேசிக் கொண்டார்கள்.

ராஜன் மனத்தில் பழைய எண்ணங்கள் அலைபாய மனச் சோர்வுடன் அமர்ந்திருந்தான். அப்போது உணவு விடுதிக்கு வந்த விஜய் சோகமாக உட்கார்ந்திருக்கும் ராஜனைப் பார்த்தான். அவனருகே சென்றான். 'என்னப்பா இப்போதெல்லாம் வீட்டுல இருந்து சாப்பாடு எடுத்துக்கிட்டு வர்றது இல்லையா?' - ராஜனின் மௌனத்தைக் கலைத்தான் விஜய்,

'மனைவிக்குச் சில நாளா உடம்பு சுகம் இல்ல. அதுதான் இங்க சாப்பிடறேன்' - ராஜனின் குரல் தழுதழுத்தது. விஜயால் நிலைமையைப் புரிந்துகொள்ள முடிந்தது.

'லைஃப் எப்படி போயிட்டு இருக்கு?' அக்கறையோடு விஜய் கேட்ட கேள்விக்கு, என்ன பதில் சொல்வது? எதை மறைப்பது என்று ராஜனுக்குத் தெரியவில்லை. எல்லா விஷயத்தையும் விஜயிடம் சொன்னான். மனைவி வனஜாவின் உடல் நலக் குறைவு பற்றி வருத்தத்துடன் சொன்னான். 'மருத்துவமனைக்கு அழைத்துப் போய் எல்லாப் பரிசோதனைகளும் செய்து பார்த்து விட்டேன். என்ன நோய் என்றே தெரியவில்லை. மருந்தால் குணமாகிற வியாதி மாதிரித் தெரியவில்லை. உடம்புக்கு முடியவில்லையென்றால் நன்கு ஓய்வெடுத்துக்கொள். வீட்டு வேலைக்கு வேறு ஆளை வைத்துக் கொள்ளலாம் என்று சொல்லியும் பார்த்துவிட்டேன். ஒன்றையும் கேட்பதாகத் தெரியவில்லை. சோர்ந்து போய்ப் பிள்ளை மீதும் என் மீதும் எரிந்து விழுகிறாள். காலையில் சத்தம் போட்டுவிட்டு வந்துவிட்டேன். மனம் சங்கடப்படுகிறது.'

'ராஜன்! மனம் ஒன்றி ஒரு வேலையில் ஈடுபட்டால் அது ஒரு வேலையாகவே தோன்றாது என்ற பொன்மொழி அலுவலகத்து வேலைக்கு மட்டுமல்ல. வீட்டு வேலைகளுக்கும் பொருந்தும். இன்னொருவரைப் பணிக்கு அமர்த்தினாலும் வனஜாவின் மனம் நிறைவற்றுதான் இருக்கும். ஏதாவது ஒரு விஷயம் சங்கடமாகத்

தான் படும். வீட்டு வேலையைச் செய்வதில் உன் மனைவிக்கு அதிருப்தியென்று நினைப்பதை விட மகிழ்ச்சியும் மன அமைதியும் அவர் மனத்தில் வெகு நாட்களாக இல்லை என்ற உண்மையைப் புரிந்துகொள். இந்த அடிப்படை விஷயத்தைச் சரி செய். வாழ்க்கையில் மீண்டும் வசந்தம் தான்' என்று ராஜனுக்கு விஜய் அறிவுரை கூறினான்.

'சார்... அவ ஏன் அப்படி நடந்துக்கணும்? என் அப்பா அம்மாவின் மறைவுக்குப் பிறகு, குழந்தையும் பெரியவனாக வளர்ந்த பிறகு வேலைப் பளுவே இல்லையே. சந்தோஷமாக இருக்கலாமே' - ராஜனின் வார்த்தையில் வருத்தம் தெரிந்தது.

'ராஜன்... இதுதான் பிரச்னை. உன் மனைவி வீட்டு வேலை செய்து செய்தே ஓய்ந்துபோய்விட்டார். நீயோ உன் வேலை யிலேயே குறியாக இருக்கிறாய். தனிமையும், வேண்டாத எண்ணங்களும் அவர்களைப் பாடாய்படுத்துவதுபோல் தெரிகிறது. அவர்களுக்குப் பிடித்த ஏதாவது ஒன்றில் ஈடுபட வழி செய்து கொடு. திறமையுள்ள பெண்களுக்கு அதை வெளிப்படுத்த வாய்ப்பு கிடைக்கவில்லையென்றால் பல பிரச்னைகள் வரும்' - விஜயின் ஆலோசனை ராஜனை யோசிக்க வைத்தது.

'சார்! அவளுக்கு கர்நாடக சங்கீதம் என்றால் மிகவும் பிடிக்கும். திருமணத்துக்கு முன்பு நிறைய கச்சேரிகளில் பாடியிருக்கிறாள். ஐந்தாறு வருடங்களுக்கும் மேலாக முறையான சங்கீதம் கற்றுக் கொண்டிருக்கிறாள். சங்கீத வகுப்பு நடத்த வேண்டும் என்ற ஆசை இருந்ததாகச் சொல்லியிருக்கிறாள். குடும்பம், குழந்தை கள் என்று ஆகிவிட்டதால் செய்ய முடியவில்லை. ஆனால், இத்தனை வருடங்களுக்குப் பிறகு அவளுக்கு அதில் ஆர்வம் இருக்குமா? முறிந்து போன கனவுகள் பற்றிய நினைவுகள் மேலும் சோகத்தை ஏற்படுத்திவிடக்கூடாதே' - என்று ராஜன் மளமளவென்று பதில் சொன்னான்.

'ராஜன்... தாமதிக்காதே! வனஜா போன்ற பெண்களைச் சுறுசுறுப் பாக இயங்க வைக்கவேண்டும். இசையில் அவருக்கு ஆர்வம் இருந்த விஷயம் தெரிந்த பிறகும் ஆதரவு தராமல் இருந்தது பெரிய தவறு. இப்போதும் ஒன்றும் கெட்டுவிடவில்லை. இனியும் இசையில் அவருக்கு ஆர்வத்தை வரவைக்க முடியும். அது வனஜாவின் தனிமைக்கும் சலிப்புக்கும் நல்ல மருந்தாக

அமையும். ஒரே வேலையையே செய்து வந்தால் யாருக்குமே மனச்சோர்வு வரத்தான் செய்யும். நீயும் அலுவலக வேலையில் பொறுப்புகள் அதிகரித்துவிட்டதால் மனைவியிடம் ஆற அமர்ந்து பேசுவதைக் குறைத்திருப்பாய். அதுவும் நல்லதல்ல' என்று விஜய் ஆலோசனையில் அழுத்தம் காண்பித்தான்.

'தொழிலில் வெற்றி மேல் வெற்றி வந்து கொண்டிருந்தாலும் தம்பதிகள் அன்பாகப் பேசிக் கொள்ளும் நேரம் குறைந்துவிட்டால் மண வாழ்க்கையில் வேதனையே ஏற்படும். தொழில் வாழ்க்கை - மணவாழ்க்கை இரண்டும் முக்கியமே. மனைவியின் வாழ்க்கையில் சந்தோஷத்தைக் கொண்டுவருவது கணவனின் கடமைதான். வாழ்க்கைத் துணையின் சந்தோஷம் எதில் என்று அடையாளம் கண்டு கொண்டு தக்க தருணத்தில் அதற்கு ஆவன செய்ய வேண்டும். தம்பதியர் மனம் விட்டு பேச ஒவ்வொரு நாளும் நேரம் ஒதுக்கியே ஆக வேண்டும். ஒருவர் மற்றவரின் உணர்வுகளைப் புரிந்துகொண்டு விட்டுக் கொடுத்து நடந்து கொள்ள வேண்டும்.

பணியில் பதவி உயர்வு-முன்னேற்றம் கிடைத்தால் மட்டும் போதாது. மண வாழ்க்கையிலும் நிறைவான வாழ்வு இருக்க வேண்டும். முக்கோணத்தில் எந்த ஒரு பக்கம் நீண்டாலும் சம விகித்தில் மற்ற இரண்டு பக்கங்களும் நீண்டே ஆக வேண்டும். அப்போதுதான் முக்கோணப் பரப்பு பெரிதாகும். தனிப்பட்ட வாழ்க்கை - பணிவாழ்க்கை - சமூக வாழ்க்கை மூன்றுமே வாழ்க்கை முக்கோணத்தின் மூன்று பக்கங்கள். இதை ஒவ்வொருவரும் உணர வேண்டும். மூன்று பக்கங்களின் சம வளர்ச்சியே வரவேற்கத்தக்க வளர்ச்சி. வீட்டு வேலைகளிலும் ஒன்றிரண்டு வேலைகளை நீயும் செய். காலையும் மாலையும் வனஜா செய்யும் பணிகளை நீயும் மதிப்பதாக மிகவும் மகிழ்ச்சி யடைவாள். மீண்டும் பழைய வனஜாவை மகிழ்ச்சியுடனும் குதுகலத்துடனும் விரைவில் பார்ப்பாய். வாழ்த்துகள் ராஜன்!' தன் சிற்றுண்டியை முடித்துக்கொண்டு விடைபெற்றான் விஜய்.

விஜய் கூறிய அறிவுரையில் அர்த்தம் இருப்பதை உணர்ந்த ராஜன் மனைவியின் வாழ்க்கையில் புதிய மறுமலர்ச்சியைக் கொண்டு வர முடியும் என்ற நம்பிக்கையோடு உணவு விடுதியில் இருந்து வெளியேறினான்.

**படிப்பினைகள்:**

- மனைவி வீட்டு வேலை செய்து செய்து சலிப் படையும் போது, அவளது உள்ளாற்றலை வெளிப் படுத்த வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும். அவளுடைய வாழ்க்கையைக் குடும்பத்தைவிட விரிவான தளத்துக்குக் கொண்டுசெல்லவேண்டும்.
- தொழில் வாழ்க்கையில் வெளி உலகத்தில் நீங்கள் எவ்வளவு பெரிய சாதனையாளராகவும் இருக்க லாம். ஆனால், மனைவியுடன் கணிசமான நேரத்தைச் செலவிடாமல் இருந்துவிடாதீர்கள். ஏனென்றால் மனைவியின் உலகமே நீங்கள்தான்.
- உங்கள் மனைவியின் தனித்தன்மை வாய்ந்த திறமையை வெகு சீக்கிரமே அடையாளம் கண்டு கொள்ளுங்கள். அதை வெளிப்படுத்த நல்ல வாய்ப்பை உருவாக்கிக் கொடுங்கள். அப்போது தான் வாழ்க்கை அன்பும் மகிழ்ச்சியுமாக இருக்கும்.
- முக்கிய நேரத்தை மனைவிக்காக ஒதுக்குதல், அவள் கூறுவதைக் காது கொடுத்துக் கேட்டல், அவளை மகிழ்வாக வைத்திருத்தல் போன்றவை உங்கள் வாழ்க்கையை வளமாக்கும். இதைக் குழந்தைகள், பெற்றோர்கள் என்று எல்லோரிடமும் கடைப் பிடியுங்கள்.

அன்புக்குரியவர்களின் உலகத்தை விரிவடையச் செய்தால் அவர்களுடைய வாழ்க்கையும் தானாகவே விசாலமாகிவிடும்!

# 8

## திருமண பந்தத்தின் நான்கு நிலைகள்

ராஜனின் கவலை ஒரு மாத காலத்தில் பறந்தது. சிறு உதவி கிடைத்தாலே நன்றி சொல்லும் பழக்கம் ராஜனுக்கு உண்டு. விஜய் செய்த உதவியோ ராஜனின் குடும்ப வாழ்க்கையை சந்தோஷ வெள்ளத்தில் ஆழ்த்தியிருக்கிறது. எனவே, விஜயின் நல்ல ஆலோசனைக்கு நன்றி கூற வீடு தேடிச் சென்றான்.

விஜயும் அவன் மனைவி வாசுகியும் மார்க்கெட் சென்று அப்போதுதான் திரும்பி வந்திருந்தார்கள். தேநீர் அருந்திக் கொண்டு இருந்தனர். மதன் சிறிய மகன். 4 வயது. அம்மாவிடம் சித்திரக் கதைப் புத்தகத்தைக் காட்டிக் கதை சொல்லும்படிக் கொஞ்சிக் கொண்டு இருந்தான். வனிதா பெரியவள். அப்பா வுடன் செஸ் ஆட வந்து கொண்டிருந்தாள். அலுவலகத்தில் உடன் பணிபுரிபவரின் மன ஓட்டத்தை எளிதில் புரிந்து கொள்ளும் விஜய் குடும்பத்தில் குழந்தைகளுடன் அவர்களுக்குச் சரிசமமாக விளையாடுவதைப் பார்த்து ராஜன் உள்ளம் நெகிழ்ந்தான். அப்பாவின் நெருங்கிய நண்பரான ராஜனுக்கு வணக்கம் சொல்லி வரவேற்ற குழந்தைகள், பெரியவர் பேசும் இடத்தில் சிறுவர்கள் இருக்கக் கூடாது என்ற நல்ல பண்புடன் புன்முறுவலோடு அடுத்த அறைக்குச் சென்றனர்.

ராஜன் வசதியாக உட்கார்ந்து கொண்டான். அன்பாகத் தரப்பட்ட தேநீரைப் பருகினான். விஜயைப் பார்த்துப் பேச ஆரம்பித்தான் : 'உங்கள் அறிவுரை மிக நல்ல பலனைத் தந்தது. என் மனைவி

யிடம் நிதானமாகப் பேசினேன். என்ன சொல்கிறாள் என்று காது கொடுத்துக் கேட்டேன். அவளின் தியாகத்தைப் புகழ்ந்து பேசினேன். 'பாட்டு வகுப்புகள் நடத்து. உனக்குதான் சங்கீதம் நன்றாக வருமே என்றேன்.' அவளுக்கு ரொம்ப சந்தோஷம். அவளுடைய இசை ஆர்வத்தை ஞாபகம் வைத்துக்கொண்டு இருக்கிறேனே என்று புகழ்ந்தாள். உடனே வகுப்பு எடுக்கச் சம்மதித்துவிட்டாள். என் மகன் ராமனையும் சேர்த்து இப்போது பத்து மாணவர்கள். அவளுடைய உடல் நலம் எப்படியாகுமோ என்று கவலைப்பட்டேன். மாறாக, நன்கு தேறி வருகிறாள். வீடு - வகுப்பு இரண்டையும் நன்கு நிர்வகிக்கிறாள். என் பிள்ளை ராமுவுக்கு அம்மா முகத்தில் மாற்றத்தைப் பார்த்து மிகவும் சந்தோஷம்.'

விஜய்க்கு தன் கணிப்பு சரியாக ஆனதில் மகிழ்ச்சி. 'நீ உன் மனைவியின் நலனில் அக்கறையோடு இருந்தாலே போதும். உடல்நிலை என்னதான் மோசமாக இருந்தாலும் அவர் தேறி வந்துவிடுவார். மனைவிக்குப் பணம்-நகை சேர்த்துத் தருவது பெரிய விஷயம் இல்லை. அவளின் உணர்வுகளுக்கு எந்தளவுக்கு மதிப்புக் கொடுக்கிறாய் என்பதுதான் முக்கியம். உன் இதயத்தில் அவளுக்கான இடத்தை அதிகரிக்கிறாய் என்று தெரிந்து கொள்ளும்போதே அவள் ஆரோக்கியமாக வாழ ஆரம்பித்து விடுவாள். வீட்டின் வெளியே குடும்ப வளர்ச்சியோடு உன் வளர்ச்சிக்கும் நீ உழைப்பது போலவே, உன் மனைவியும் குடும்ப வளர்ச்சியோடு தனது தனிப்பட்ட வளர்ச்சியையும் அடைய வழி செய்து கொடுக்க வேண்டும். நானும் என் மனைவி வாசுகியும் தினமும் காலையில் ஒரு மணி நேரம் நடப்போம். அதை வெறும் உடற்பயிற்சிக்காக மட்டும் செய்யவில்லை. எங்கள் அனுபவங்கள், ஆசைகள், எதிர்காலத் திட்டங்கள் என எல்லாவற்றைப் பற்றியும் மனம் விட்டுப் பேசிக் கொள்வோம். காலை நேரத்தில் எல்லாமே மிகவும் புத்துணர்ச்சியுடன் இருப்பதைப் பார்த்திருப்பாயே! பொறுமையாக ஒருவர் பேசுவதை மற்றவர் காது கொடுத்துக் கேட்போம். காலை நேர நடைக்காகச் சீக்கிரமே எழுந்து கொண்டும் விடுவோம். இருவரும் சேர்ந்தே காபி சாப்பிடுவோம்' - விஜய் பேசி முடித்தான்.

வாசுகி தட்டில் இனிப்புகளோடு வந்தாள். 'வனஜா எப்படி இருக்காங்க? பார்த்து ரொம்ப நாளாச்சு. ராமனைக் கட்டி மேய்க்கவே நேரம் பத்தாது இல்லையா?' - விருந்தாளிகளை வாசுகி புன்முறுவலோடு கவனிப்பதே தனி அழகு.

'வனஜா நல்லா இருக்கா. வீட்டுக்கு வாங்க. எப்பவுமே சிரித்த முகம் மாறாம இருக்கீங்களே. என்ன ரகசியம் சொல்லுங்களேன்' ராஜன் புன்முறுவல் பூத்தபடியே கேட்டான்.

'ரகசியம்னு ஒண்ணும் இல்ல. எந்த வேலையைச் செய்தாலும் முழு ஆர்வத்தோட ஈடுபடுவேன். அவ்வளவுதான். பழகிப் பாருங்க... வாழ்க்கையே உற்சாகமாகிடும்' - வாசுகி விடையளித்தாள். 'என்ன அழகான பதில்!' தனக்குள்ளேயே மெச்சினான் ராஜன். 'அது சரி. நீங்க ரெண்டு பேரும் சந்தோஷமா எப்பவும் ஒற்றுமையா இருக்கீங்களே. அது எப்படி சார்?'

'என் மனைவி வாசுகி எல்லாப் பெண்களையும்போல் அன்பான மனைவியாகவும் பொறுப்பான அம்மாவாகவும் இருப்பவள் தான்... கூடவே குழந்தைகள் உளவியல் படிப்பில் முதுகலைப் பட்டம் பெற்றவள். குழந்தைகள் பிறந்து பள்ளிக்குச் செல்ல ஆரம்பித்தது வரையில் தொழில் வாழ்க்கையில் இருந்து சிறிய இடைவெளிவிட்டிருந்தாள். நேரம் கிடைத்ததும் குழந்தைகளுக்கு வகுப்புகள் எடுக்க ஆரம்பிக்கும்படிச் சொன்னேன். வீட்டு வேலைக்கு ஒருவரை நியமித்துக் கொள்ளச் சொன்னேன். இல்லையென்றால் அன்றாட வீட்டு வேலைகளால் மிகவும் நொறுங்கிப் போயிருப்பாள். இப்படிச் செய்ததால் எங்கள் இருவருக்கும் நல்ல நிம்மதி. அவள் தன்னுடைய திறமையை நன்கு வெளிப்படுத்திப் பல பணிகளில் ஈடுபடுகிறாள். ப்ரீஸ்கூல் ஒன்றை ஆரம்பித்து நடத்தி வருகிறாள். உற்சாகமாக, சந்தோஷமாக எல்லா வேலைகளையும் செய்கிறாள்...' விஜயின் பெருமிதம் அவருடைய வார்த்தைகளில் தென்பட்டது.

'உங்க ரெண்டு பேருக்கு நடுவுல கருத்து வேறுபாடு வருமா?' - ராஜன் கண்களில் ஆச்சரியம் தெரிந்தது.

'ராஜன்! நாங்க ரெண்டு பேரும் என்ன எந்திரமா, கருத்து வேறு பாடே வராமல் இருக்க. எப்பவுமே ஒருத்தர் மத்தவங்களப் பார்த்து சிரிச்சுக்கிட்டே இருந்தா வாழ்க்கை செயற்கையா ஆகிடும். எங்க ரெண்டு பேருக்கும்னு தனித்தனியான விருப்பு வெறுப்பு இருக்கு. எங்கள் கருத்துகள், உணர்ச்சிகள்... எல்லாமே ஒவ்வொரு நிகழ்வுக்கும் ஒவ்வொரு மாதிரி இருக்கும். நாங்க பேசும்போது குரல் வலுக்கும். ஆனா... ஒருத்தர ஒருத்தர் தரக்குறைவா பேசவே மாட்டோம். பேசறது எல்லாமே பிரச்னைக்குத் தீர்வு காண வேண்டும் என்ற நோக்கத்தில்தான் இருக்கும். விட்டுக் கொடுத்தா கெட்டுப் போகமாட்டோம். நமது பாரத தேசமும் தாம்பத்தியமும்

ஒருவிதத்தில் ஒண்ணுதான். ஆமாம். வேற்றுமையில் ஒற்றுமை! எங்க ரெண்டு பேருக்குமே தனிப்பட்ட-குடும்ப-சமூக இலக்குகள் இருக்கு. சின்னப் பிரச்னையைப் பெரிசு பண்ணினா, பெரிய நஷ்டத்த நாமதான் சந்திக்க வேண்டியிருக்கும். அந்தத் தப்பை நாங்க ரெண்டு பேருமே பண்ண தயாரா இல்ல' - விஜயின் நிதர்சனப் பேச்சு, ராஜனுக்குப் பிடித்திருந்தது.

தான் இனி என்ன செய்ய வேண்டும் என்பதைத் தானாகவே ராஜன் புரிந்துகொண்டான். 'நான் எங்கு தவறு இழைத்தேன் என்பது எனக்கு இப்போது தெரிந்தது. என்ன செய்ய வேண்டும் என்பதும் எனக்கு இப்போது தெரிந்தது. என்னோடு உங்கள் பொன்னான நேரத்தை ஒதுக்கிப் பேசியதற்கு மிக்க நன்றி. நீங்கள் இருவரும் வாழும் விதம், நீங்கள் கூறிய அறிவுரையைவிட என் புத்திக்கு எட்டும்படி இருக்கிறது. கருத்துகள் வேறுபட்டாலும் இனிமையாக வாழலாம் என்று உங்களிடம் இருந்து கற்றுக் கொண்டேன். நன்றி' என்று சொல்லி விடைபெற்றான் ராஜன்.

படிப்பினைகள்:

தாம்பத்திய வாழ்க்கையில் 4 நிலைகள் உள்ளன. தொழில் வாழ்க்கையோடு அந்த நிலைகள் ஒத்துப்போகின்றன. ஒரு நிலையில் இருந்து இன்னொரு நிலைக்கு வயது ஆக ஆகத் தான், கடக்க நேரிடுகிறது.



*நிலை 1: உற்சாகம் இருக்கும். ஆனால், ஒத்திசைவு இருக்காது*

திருமணமான தொடக்கக் காலம் இது. பணியில் சேர்ந்து வேலையைக் கற்க ஆரம்பிக்கும் காலமாகவும் இது இருக்கும். இந்தக் காலத்தில் அன்பு பீறிடும். எல்லாமே ஆச்சரியமாக இருக்கும். தம்பதியர் இடையே இருக்கும் நல்ல விஷயங்கள் மட்டுமே இருவருக்கும் தென்படும். பொறுப்புகள் புதிதாக இருந்தாலும், ஒருவர் மற்றவரின் சுதந்தரத்தில் தலையிட மாட்டார். காலம் செல்லச் செல்ல ஆரம்ப கட்டப் பரபரப்பு அடங்கி குழந்தைகளைப் பராமரித்தல், ஒருவர் மற்றவரின் விருப்பு வெறுப்புகளை எதிர்கொள்ளுதல் என நிலைமை மாறத் தொடங்கும். தம்பதியினர் தங்களுடைய தொழில் லட்சியங்கள் என்ன... வீட்டு நிர்வாகத்தில் என்னென்ன சவால்கள் இருக்கின்றன... கருத்து வேறுபாடுகளை நேர்மறையாகக் கையாளுவது எப்படி... போன்றவை பற்றியெல்லாம் புரிந்து கொள்ள வேண்டிய காலகட்டம் வந்துவிடும்.

ஆம். ஒருவர் மற்றவரைப் புரிந்துகொண்டு மதித்து நடந்து கொள்வது இருவருடைய தொழில் வாழ்க்கையிலும் நல்ல விளைவுகளையே ஏற்படுத்தும். இதன் தொடர்பாகக் கீழ்க் காணும் குறிப்புகள் கவனிக்கத் தக்கவை:

- உங்கள் விருப்பு வெறுப்புகளைப் பற்றிப் பேசுவதோடு வாழ்க்கையை நன்கு அனுபவிக்கப் போதுமான நேரத்தையும் செலவிடுங்கள்.
- சிறியதோ பெரியதோ... துணைவரின் வெற்றியைப் பெருமையாக எண்ணுங்கள்.
- துணைவரின் உறவினர்களை நன்கு அறிந்து கொள்ளப் போதுமான நேரத்தைச் செலவிடுங்கள்.. முடிந்தவரை அவர்களுக்கு உதவிகரமாக இருங்கள்.
- பணிபுரியும் தம்பதியர் தத்தமது சவால்கள் நிறைந்த அனுபவங்களைப் பகிர்ந்துகொள்வது நல்லது.
- ஒருவர் மற்றவரின் சமூக, நட்பு வட்டத்தைப் பெரிதாக்குங்கள்.
- கூட்டுக்குடும்பமோ தனிக்குடும்பமோ இருவரும் கலந்து பேசி முடிவெடுங்கள்.

- உங்களின் ஈடுபாட்டோடு வீட்டில் நல்லுறவை நிலைநாட்ட மனைவிக்கு உதவுங்கள்.

- மற்றவரின் நேரத்தைப் பொன்னாகக் கருதுங்கள். முன்னுரிமைகளை மதியுங்கள். பரஸ்பர மதிப்பும் மரியாதையும் அதன் மூலம் அதிகரிக்கும்.

- மனைவியின் ஆரோக்கியத்தில், அதிலும் மகப்பேறு காலங்களில், அதிகக் கவனம் செலுத்துங்கள்.

தொழில் வாழ்க்கையின்மீது நேரடித் தாக்கத்தை ஏற்படுத்தக் கூடிய சொந்த வாழ்க்கைச் செயல்கள்:

| குடும்ப வாழ்க்கை | தொழில் வாழ்க்கை |
| --- | --- |
| வீட்டில் சந்தோஷமாக இருக்கிறார். | பணியிடத்தில் நேர்மறையான அதிர்வுகளை உருவாக்குகிறது. |
| துணைவரின் நற்குணங்களைப் புகழ்கிறார். | சக ஊழியர்களைப் பாராட்டிப் பேசுகிறார். அனைவராலும் மதிக்கப்படுகிறார். |
| துணைவரின் நேரத்தையும் முன்னுரிமைகளையும் மதிக்கிறார். | பணியில் சிறப்பான ஊழியராகத் திகழ்கிறார். |
| துணைவருடன் ஏற்படும் சிறிய சிக்கல்களைப் பொறுத்துக்கொள்கிறார். | சிக்கலான பிரச்னைகளை நளினமாகச் சமாளிக்கிறார். |

திருமணமான புதிதில் செய்யப்படும் சிறுசிறு தவறுகளைப் பொறுத்துக் கொள்வதால், பிற்காலத்தில் நெருக்கடியான பிரச்னைகளைக்கூட எளிதில் சமாளிக்கும் பக்குவம் தம்பதியரிடம் வந்துவிடுகிறது.

**நிலை 2: ஒத்திசைவும் உற்சாகமும்**

தாம்பத்தியத்தில் இது அற்புதமான காலகட்டம். குழந்தைகள் வளரத் தொடங்கியிருப்பார்கள். நிலம், வீடு வாங்குவீர்கள். தொழில் வாழ்க்கையில் வெற்றியும் முன்னேற்றமும் இருக்கும்.

தொழில் வாழ்க்கையில்தான் முழுக்கவனமும் இருக்கும் என்றாலும், கல்லாலும் மண்ணாலும் ஆன வீட்டைக் குழந்தைகளுக்கும் வயதான பெற்றோருக்கும் அன்பால் ஆன இல்லம் ஆக்க முற்படுவீர்கள். பொறுப்புகளும் எதிர்பார்ப்புகளும் அதிகரிக்க அதிகரிக்க இருவரிடையே தவறான புரிதல்கள் வளர்வதற்கும் வாய்ப்பு இருக்கிறது. ஆனாலும், மிகுந்த பக்குவமும் புத்துணர்வும் பரிமளித்துக் கொண்டிருப்பதால் சவால்களைச் சாதரணமாக எதிர்கொள்வீர்கள். இந்த நிலையில் இருவரும் பரஸ்பரம் புரிந்துகொண்டு இயைந்து வாழ்வதற்குச் சில குறிப்புகள்:

- உடலும் மனமும் ஆரோக்கியமாக இருக்க ஒருவர் எடுக்கும் முயற்சிகளுக்கு மற்றவர் உதவியும் உற்சாகமும் தர வேண்டும்.
- குழந்தைகளை வளர்த்தெடுப்பதில் இருவரும் சேர்ந்து பங்கெடுக்க வேண்டும்.
- வாழ்க்கைத் துணைவரின் தொழில் லட்சியங்களை மதித்து நடந்து கொள்ளுங்கள். வாழ்க்கையை விரிவுபடுத்திக் கொள்ளப் போதிய சுதந்தரம் கொடுங்கள்.
- அலுவலகத்திலும் இல்லத்திலும் ஒவ்வொருவருக்கும் இருக்கும் சவால்களைப் புரிந்து கொள்ளுங்கள்; வழி காட்டுங்கள்; உதவுங்கள்.
- தனி நபரைப் பற்றிக் குறை கூறாமல் பிரச்னைகளைப் பேசுவதன் மூலம் கருத்து வேறுபாடுகளை நேர்மறையாகக் கையாளுங்கள்.
- தாம்பத்திய வாழ்க்கையின் உற்சாகம் குன்றாமல் இருக்கும் வகையில் அடிக்கடி ஆச்சரியத்தில் ஆழ்த்துங்கள்.
- துணைவரின் சிறப்பான உள்ளாற்றலை அடையாளம் காணுங்கள். அதை வெளிப்படுத்துவதற்கான வாய்ப்பை ஏற்படுத்துங்கள்.
- குடும்பத்தார் அனைவரும் ஏதாவது ஒரு சமூகச்சேவையில் ஈடுபடுங்கள். அப்போதுதான் இளம் தலைமுறைக்குப் பொறுப்பும் அக்கறையும் வரும்.

தொழில் வாழ்க்கையின் மீது நேரடித் தாக்கத்தை ஏற்படுத்தக் கூடிய சொந்த வாழ்க்கைச் செயல்கள்:

| சொந்த வாழ்க்கை | தொழில் வாழ்க்கை |
|---|---|
| உடல் மற்றும் மன ஆரோக்கியம்<br><br>கருத்து வேறுபாடுகளை நல்ல விதமாகக் கையாளுதல். | பணி நெருக்கடிகளைப் பக்குவமாகச் சமாளித்தல்<br><br>வெவ்வேறு நபர்களோடு நட்புறவை வளர்த்தல். |
| துணைவரின் கருத்துகளுக்கேற்ப தன்னை மாற்றிக் கொள்ளுதல். | வளர்ச்சிகளுக்கான விமரிசனங்களை வரவேற்றல். |
| துணைவரின் சவால்களைப் புரிந்துகொண்டு வழிகாட்டுதல். | குழுவுக்குத் தலைமை ஏற்றல், இளைய தலைமுறையை வளர்த்தெடுத்தல். |

தம்பதியர் ஒவ்வொருவரின் கனவுகள், இலக்குகள், ஆர்வம் முதலியவற்றை ஒத்திசைவுக்குக் கொண்டுவரவேண்டும். இது இருவரின் குடும்ப, பணி வாழ்க்கைகளின் இலக்குகளை இருவரின் வாழ்வியல் லட்சியங்களோடு ஒத்திசைவுகொள்ள வைக்க உதவும். திருமண வாழ்க்கையில் எந்தக் கட்டத்தில் இருக்கிறோம் என்பதைக் கணிப்பது எளிதுதான். அது, பணி வாழ்க்கைக்கு மெருகு ஏற்றுகிறதா... எதிர்மறையான விளைவை ஏற்படுத்துகிறதா என்பதையும் எளிதில் கண்டுகொள்ளலாம். மகிழ்ச்சிகரமான வெற்றிகரமான வாழ்க்கையின் ரகசியம் உயிர்த்துடிப்புடன் வாழ்கிறீர்களா... ஒப்புக்கு வாழ்கிறீர்களா என்பதில் இருக்கிறது. ஒருவேளை, இந்த இரண்டாம் நிலையில் இருந்து தள்ளப் பட்டாலும் மீண்டும் அந்த நிலைக்கு வருவதற்கு முயற்சி செய்ய வேண்டும். இந்த நிலையில் நீண்ட நாட்கள் வாழும் தம்பதியர் மற்ற தம்பதியருக்கு முன்னுதாரணமாகத் திகழ்வர்.

**நிலை 3: உற்சாகம் இருக்காது. ஒத்திசைவு இருக்கும்.**

இந்த நிலை தம்பதியினரின் பெற்றோர், குழந்தைகளின் வாழ்க்கையை மையமாகக் கொண்டதாக இருக்கும். அவர்களின் வாழ்க்கை, ஆரோக்கியம், பழக்கவழக்கங்கள் தொடர்பான சவால்கள் ஆகியவையே தம்பதியரின் பிரதான இலக்காக இருக்கும். அலுவலகத்தில் பொறுப்பு மிகுந்திருக்கும். இதனால் துணைவருடன் சந்தோஷமாகப் பேசி மகிழ நேரமே இல்லாமல் இருக்கும்.

ஆண் (வேலைக்குப் போகும் பெண்களும்) தொழிலில் வெற்றியைக் குறிவைத்துத் தீவிரமாகப் போராடிக் கொண்டிருப் பார். பெண்ணோ குடும்ப வேலைகளை மட்டுமே செய்து சலித்துப் போயிருப்பார். தொழில் சார்ந்த வெற்றியும் வாழ்க்கை வசதிகளும் உயர்ந்துகொண்டே போகும். என்றாலும் தனிப்பட்ட வாழ்க்கை யின் மகிழ்ச்சியும், மனஅமைதியும் குறைந்துகொண்டே இருக்கும். தொழில் வாழ்க்கையின் வெவ்வேறுவிதமான சவால்களினால் வேலைக்குப் போகும் தம்பதியினர் இரண்டு வேறு உலகங்களில் வசித்து வருவார்கள். குழந்தை இல்லாத அல்லது நோயுள்ள தம்பதி யர், முதல் நிலையிலிருந்து நேரடியாக மூன்றாம் நிலைக்குப் போய் விடுவர். இரண்டாம் நிலையின் சுவாரசியத்தை அனுபவிக்கவே மாட்டார்கள். இந்த நிலையில் ஒருவர் மற்றவரின் வாழ்க்கை மீது போதிய அக்கறை செலுத்தவில்லையென்றால், விரைவில் நான்காம் நிலைக்குச் சென்றுவிடுவர். இழந்த உற்சாகத்தை மீட் டெடுக்கக் கீழ்க்காணும் குறிப்புகள் கை கொடுக்கும்:

- விசேஷமாக விடுமுறை எடுத்துக்கொண்டு (மீண்டும் ஒரு தேன் நிலவு) திருமணமான புதிதில் இருந்த உற்சாகத்தை மீட்டெடுங்கள்.
- மெழுகுவர்த்தி வெளிச்சத்தில் இரவு விருந்துகளை உண்டு மகிழ்வதற்குப் பதிலாக வெறுமனே எஸ் எம் எஸ் அல்லது இணைய தள சாட் செய்து நேரத்தைக் கழிக்காதீர்..
- மனைவியிடம் (குறிப்பாக இல்லத்தரசியாக மட்டுமே இருக்கும் பட்சத்தில்) ஒளிந்திருக்கும் ஆற்றலைத் தெரிந்து கொள்ளுங்கள். அதை வெளியே கொண்டுவர ஏற்பாடு செய்யுங்கள்.
- பணி நிமித்தமாகத் தாற்காலிகமாக இருவரும் பிரிந்து இருக்கும் கட்டாயம் ஏற்பட்டால், உணர்வுபூர்வமான ஒத்திசைவு குலையாமல் பார்த்துக் கொள்ளுங்கள். பிரிவு காலத்தை அமைதியாக, சஞ்சலமில்லாமல் கடந்து வாருங்கள்.
- குழந்தைகளிடம் உள்ள சிறப்புத் திறமைகளை வளர்ப்பதில் இருவரும் மிகுந்த ஆர்வத்துடன் பங்களிக்க வேண்டும்.
- இல்லற வாழ்வின் சந்தோஷமே தலையானதாகக் கருதப்பட வேண்டும். இருவருடைய தொழில் வாழ்க்கையும்

பரஸ்பரம் இன்னொருவரின் வாழ்க்கையைச் செழுமைப் படுத்துவதாக இருக்கவேண்டும். பணிபுரியும் தம்பதியர் இருவரும் கலந்து பேசி இருவருக்கும் உகந்த ஒரு முடிவை எடுக்கவேண்டும்.

- உணர்வுபூர்வமான சமநிலையைத் தக்கவைக்க இருவரும் யோகா, தியானம் போன்றவற்றில் ஈடுபடவேண்டும்.
- எந்த நிலை உருவானாலும் தனியாகச் சமாளிக்க முடியும் என்கிற சுயநம்பிக்கை இருக்கவேண்டும். வாழ்க்கைத் துணைவரின் மனத்திலும் அந்த உத்வேகத்தை உருவாக்க வேண்டும்.
- தம்பதியர் (குழந்தைகள் இருந்தாலும் இல்லாவிட்டாலும்) சமூக சேவையில் ஈடுபடுவது அல்லது இருவருக்கும் பொதுவான கனவுகளை வடிவமைத்தல் எனத் தங்கள் வருங்காலத்தைத் தெளிவாகத் திட்டமிடவேண்டும்.

தொழில் வாழ்க்கையின் மீது நேரடித் தாக்கத்தை ஏற்படுத்தக் கூடிய சொந்த வாழ்க்கைச் செயல்கள்:

| சொந்த வாழ்க்கை | தொழில் வாழ்க்கை |
|---|---|
| துணைவரின் உள் ஆற்றலை வெளிக் கொண்டுவருதல் | ஒவ்வொரு பணியாளரிடமும் ஒளிந்துள்ள உள் ஆற்றலை அடையாளம் காணுதல் |
| குடும்பத்தில் உணர்ச்சி பூர்வமான சமநிலையைத் தக்கவைத்தல் | பணிக்களத்தில் சரிவுகளை இதமாகக் கையாளும் லாகவம் |
| திருமண வாழ்க்கையின் உற்சாகத்தைக் குறையாமல் பார்த்துக் கொள்ளுதல் | செயல் துடிப்பைத் தளரவிடாமல் பேணிக் காத்தல் |
| அன்றாடப் பணிகளை விட மிக உயர்வான லட்சியங்களில் கவனம் செலுத்துதல் | கீழே பணிபுரிபவர்கள், சக ஊழியர்களால் பெரிதும் மதிக்கப்படுதல் |

மற்றவருக்குள் ஒளிந்திருக்கும் ஆற்றலை வெளிக்கொணர்வதில் ஒருவர் காட்டும் ஆர்வம், துணைவரின் 'இன்னொரு முகத்தை' வெளிக்காட்டும்; வாழ்க்கையில் உற்சாகத்தைத் தரும். இவை மட்டுமல்லாமல், தம்பதியருக்குள் இருக்கிற பொதுவான கனவுகளை நனவாக்கவும் கை கொடுக்கும்.

**நிலை 4: உற்சாகமும் இருக்காது. ஒத்திசைவும் இருக்காது.**

நீண்ட காலத் திருமண பந்தத்தின் கடைசிக் கட்டத்தில் இப்படி யான நிலை ஏற்படும். கருத்து வேறுபாடுகளைச் சரிவரக் கையாளத் தெரியாத இளம் தம்பதிகளின் வாழ்க்கையிலும் இப்படியான நிலை ஏற்படும். ஒருவர் மற்றவரின் குறைகளையே அதிகமும் பார்த்துக் கொண்டிருந்தால் பரஸ்பரம் மரியாதை போய்விடும். சில விஷயங்களில் தாற்காலிகமான இடைவெளி உருவாகிவிடும். தம்பதியரின் இடையே அன்பு முறிந்தால்கூட மீண்டும் அதை வரவைத்துவிட முடியும். ஆனால், மரியாதை போய்விட்டால் அன்பை மீட்டெடுப்பது மிகவும் சிரமம். அது, நாவினால் சுட்ட வடுவாக நிலைத்துவிடும். எனவே, சூழ்நிலை எதுவானாலும் மரியாதை போய்விடும்படி தம்பதியர் நடந்து கொள்ளவே கூடாது. இந்த நான்காம் நிலைக்குத் தள்ளப்படும் தம்பதியர் இரண்டாம் நிலையை நீண்ட நாள்கள் அனுபவித்திருக்க மாட்டார்கள். எனவே ஒத்திசைவுடன், உற்சாகமாக இருப்பது என்றால் என்ன என்பதே அவர்களுக்குத் தெரிந்திருக்காது. வாழ்க்கையில் உற்சாகத்தை மீட்டெடுக்க இதோ சில வழிகள்:

- கர்வம் அதிகரித்தால் வாழ்க்கை காலி. கர்வம் குறைந்தால் வாழ்க்கை ஜாலி. கர்வத்தைக் கைவிட்டு அன்பை அதிகரி யுங்கள்.
- துயரத்தைப் பகிர்ந்து கொண்டால் பாதியாகக் குறையும். சந்தோஷத்தைப் பகிர்ந்து கொண்டால் இரட்டிப்பாகும். இதை இருவரும் நன்கு உணர்ந்து புரிந்து கொள்ள வேண்டும்.
- கோபம் இருக்கும் இடத்தில்தான் குணமும் இருக்கும் என்பதை உணர்ந்தால் மனமும் உணர்வும் கட்டுப்பாட்டுக்குள் இருக்கும். சீரான எண்ணங்கள் தழைக்கும். ஒருவர் மற்றவரின் சுய கௌரவத்துக்கு எந்தப் பங்கமும் விளைவிக்காமல் தமது எதிர்பார்ப்புகளைப் பரிமாறிக் கொள்ள அது உதவும்.
- தாற்காலிகமாக தம்பதியர் பிரிய நேரிட்டால், தாமதிக்காமல் மறுபடியும் இருவரும் ஒன்று சேரத் தாமாகவே

நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். இல்லையெனில், தாற்காலிகப் பிரிவு நிரந்தரப் பிரிவை ஏற்படுத்திவிடும்.

- அலுவலகத்தில் கொள்ளும் நட்புறவுகள் அலுவல் சார்ந்ததாகவே இருக்கட்டும். உணர்வுபூர்வமான நெருக்கம் கூடாது.
- தம்பதியர் தம்முடைய பொதுவான கனவை மீண்டும் உயிர்ப்பித்தால் சின்னச் சின்னக் கருத்து வேறுபாடுகள் (ஏதேனும் இருந்தால்) காணாமலேயே போய்விடும்.
- மூத்த தம்பதியர் இளைய தலைமுறையிடம் முழுப் பொறுப்பையும் கொடுத்து விட வேண்டும். தேவைப்பட்டால் மட்டுமே தலையிட்டு ஆலோசனை சொல்லவேண்டும்.

தொழில் வாழ்க்கையின் மீது நேரடித் தாக்கத்தை ஏற்படுத்தக் கூடிய சொந்த வாழ்க்கைச் செயல்கள்:

| சொந்த வாழ்க்கை | தொழில் வாழ்க்கை |
|---|---|
| நட்புறவை வலுப்படுத்த மேற்கொள்ளும் நடவடிக்கை | வேறுபாடுகளை மன்னித்து மறக்கும் பண்பு |
| இல்லத்துணையின் தனிப்பட்ட விருப்பங்களுக்கு முக்கியத்துவம் அளித்தல் | இரண்டாம் கட்டப் பணியாளர்களுக்கு முன்னேற வாய்ப்பு அளித்தல் |
| குழந்தைகளுக்கு நன்நடத்தைகளைப் போதித்துப் பரிவோடு வளர்த்தல் | நிறுவனத்தில் மதிப்பீடுகளை வளர்த்தெடுத்தல் |
| பொறுப்புகளை அடுத்த தலைமுறைக்கு விட்டுச் செல்லுதல் | வருங்காலத் தலைவர்களை உருவாக்க அதிகாரங்களையும் பொறுப்புகளையும் அடுத்த கட்டப் பணியாளர்களுக்குப் பகிர்ந்துகொடுத்தல் |

தம்பதியர் இருவரும் அடுத்தவரின் மனநிலையைப் புரிந்து கொண்டு விட்டுக்கொடுத்து நடந்து கொள்ள வேண்டும். அது, மற்றவரின் நல்ல குணங்களைப் புரிந்துகொள்ள உதவும்.

மேற்கூறிய நான்கு நிலைகளை நன்கு புரிந்து கொண்டாலே போதும், தாம்பத்திய வாழ்க்கையைத் தெளிவாகச் சமாளித்து விட முடியும். அது பணி வாழ்க்கையின் வெற்றிக்கு நல்ல ஊக்கத்தைத் தரும். நீங்கள் எந்த நிலையில், வயதில் இருந்தாலும் இரண்டாம் நிலைக்குத் தக்கபடி உங்களை மாற்றிக்கொள்ள வேண்டும். தனிப்பட்ட- பணி சார்ந்த- சமூக வாழ்க்கை மூன்றை யும் கூட்டி ஒரு புனித வாழ்க்கையை திரிவேணி சங்கமாக வாழுங் கள். இன்பகரமான வெற்றிகரமான வாழ்க்கையை வாழ்ந்து காட்டுங்கள்.

காதலில் விழுந்தால் மட்டும் போதாது.
தொடர்ந்து காதலில் நீடித்து வரவேண்டும்.
அப்போதுதான் வாழ்க்கையில் மகிழ்ச்சியும் ஒத்திசைவும் இருக்கும்.

# 9

## ஆளுமைத் திறனா... அனுபவமா?

ஊழியரை நிர்வகிக்கும் திறனாலும் திறமை மிக்க செயல் பாடுகளாலும் நிதித் துறையில் வருண் தொடர்ந்து சிறந்து விளங்கினான். நிறுவனம் வளர வளர அவனும் குறுகிய காலத்துக்குள்ளேயே உயர் பதவியை அடைந்தான். தெளிவில்லா சூழ்நிலைகளிலும் வருணால் சரியான முடிவுகளை எடுக்க முடிந்தது. நிலைமையை வெகு சீக்கிரமே கட்டுக்குள் கொண்டுவர முடிந்தது.

ஒரு துறையில் அனைத்துச் செயல்பாடுகள், வழிமுறைகள் ஆகியவற்றை வெற்றிகரமாக அமல்படுத்தினான். பிறகு, வருணுக்கு இன்னொரு பிரிவில் அதிகப் பொறுப்பு மிக்க பணி அளிக்கப்பட்டது. வருணுக்கு முன் அனுபவம் இருந்தால், ஆறு மாதங்களுக்குள்ளாகவே, புதுப் பொறுப்பிலும் ஓர் ஒழுங்கைக் கொண்டு வந்தான்.

ஒன்பது மாதங்களுக்குள் வருணுக்கு வேலை அலுத்துப்போனது. அவனுக்கு மேலும் சவாலான பொறுப்புகள் அளிக்கமுடியாமல் போனது. நிறுவனத்தின் அந்தப் பிரிவில் அவன் வகிப்பதுதான் பெரிய பதவி. நிதி தவிர்த்த மற்ற மற்ற துறைகளில் பொறுப்புகள் இருந்தன. ஆனால், வருண் செய்வதை விடச் சிறிய பொறுப்புகளே. வருணுக்கும் மற்ற பிரிவுகளுக்குச் செல்ல விருப்பமில்லை. ஏனெனில், முக்கியத்துவம் குறைந்த அந்தப் பொறுப்புகளுக்குப் போனால் தனது புகழ் மங்கிவிடும் என்று பயந்தான். தனக்கு வசதியாக இருக்கும் பதவியில் இருந்து விலகவும் அவன்

விரும்பவில்லை. இதே பொறுப்பைப் பெரிய அளவில் செய்து வந்தால் காலப்போக்கில் முன்னேற்றம் கிடைக்கும் என்று நினைத்தான். ஆனால், பல்வேறு பொறுப்புகளை ஏற்றுக் கொண்டு தன் அனுபவ வீச்சை அதிகரித்துக் கொள்வதுதான் உண்மையில் நல்ல பலனைத் தரும் என்பதை உணரத் தவறி விட்டான். தனது மேலதிகாரியிடம் போய் தனது வளர்ச்சிக்கு வழி வகுத்துக் கொடுக்குமாறு நெருக்கடிகள் கொடுத்தான்.

மிகவும் மனச் சோர்வடைந்திருந்த வருண், ஒரு நாள் விஜயிடம் தன் மனக்குமுறலை எடுத்துச் சொன்னான். விஜய்க்கு வருணைப் பற்றித் தெரியும். வருண் மளமளவென்று கொடுத்த பணியை முடிக்கும் செயல் வீரன். மேற்கொண்டு பொறுப்புகள் கொடுத்தால் அதையும் செய்துமுடிக்கும் திறமை கொண்டவன். அவனுடைய எதிர்காலம் பற்றித் திட்டமிட உதவவேண்டும் என்று விஜய் நினைத்தான். தன் வீட்டுக்குச் சாப்பிட வரும்படிக் கூப்பிட்டான். வருண் அவனது அழைப்பை ஏற்றான்.

விஜய் வீட்டுக்கு வருண் வந்தான். நல்ல வரவேற்பு. வருண் மகிழ்ந்தான். 'சார்! எனக்களிக்கும் பொறுப்பு எதுவானாலும், முழு மனதுடன் செய்கிறேன். எல்லாவற்றையும் ஓர் ஒழுங்குக்குள் கொண்டுவந்துவிடுகிறேன். சீக்கிரமே அந்தப் பொறுப்பைவிட அதிகத் திறமை உடையவனாக ஆகிவிடுகிறேன். பிறகு, எனக்கு அலுப்புத் தட்டுகிறது. வேலையில் எந்தச் சவாலும் இல்லாத நிலை ஏற்பட்டுவிடுகிறது. அதே நேரத்தில், நிர்வாகத்தின் மேல்மட்டப் பொறுப்பை எடுத்துக் கொள்ளவும் என்னால் முடியவில்லை. இந்த நிலை எனக்கு கவலையாக இருக்கிறது. நான் தேங்கிப் போவது போல் தோன்றுகிறது' என்று தன் பிரச்னையைச் சொல்லி முடித்தான் வருண்.

அதிவிரைவில் முன்னேற வேண்டும் என்ற பொறுமையற்ற வேகத்தை வருணின் கண்களில் விஜய் கண்டான். அவனது கையாலாகாத நிலையைப் புரிந்துகொண்டான். 'வருண்! நீ இப்போது இருக்கும் நிலை உன்னைப் போன்ற துடிப்புள்ள வெற்றிகரமானவர்கள் அனைவருக்கும் ஏற்படக்கூடியதுதான். நீ எதிர்கொள்ளும் இந்த நெருக்கடி உண்மையில் நேர்மறையான ஒன்றுதான். வருத்தப்படத் தேவையில்லை. எந்தவொரு வேலையாக இருந்தாலும் அதில் ஒருவித சமநிலையைக் கண்டடைந்துகொள். அதன் மூலம் உன் ஆளுமைத் திறன் விரிவடையும். உனக்கு நல்ல

அனுபவம் ஏற்படும். புதியது கற்கக் கற்க வேலை மீதான ஆர்வம் அதிகரிக்கும். ஆர்வத்தோடு ஒரு வேலையைச் செய்தால் அது ஒரு வேலையாகவே தோன்றாது' என்று சொன்ன விஜய், மேலும் ஒரு கேள்வி கேட்டான்: 'செய்கிற வேலையில் நிபுணன் ஆகிவிட்டால், புதிய வேலையை ஏற்பதில் உனக்கு என்ன தயக்கம்?'

'வெற்றிகரமாகச் செய்துவரும் இந்தப் பணியை விட்டு விட்டால், என் அடையாளத்தை இழந்துவிடுவேனோ என்று அஞ்சுகிறேன்' என்று வருண் பதிலளித்தான்.

'வருண்! ஒரு பணியில் அதிகமான வெற்றியை அடைந்துவிட்டால் உடனே புதிய பணியைத் தேடி நகர்ந்துவிட வேண்டும். அப்போது தான், கற்கவேண்டும் என்ற ஆர்வம் அதிகரித்துக்கொண்டே போகும். ஒரு பணி செய்து கொண்டிருக்கும்போது உன்னுடைய திறமைக்கு அது மிகவும் சாதாரணமானது என்று ஒருபோதும் எண்ணக்கூடாது. மாறாக, உன் திறமையை விடக் கூடுதலாக அந்த வேலைக்குத் தேவை என்று நினைக்கவேண்டும். இந்தக் கொஞ்சம் போலப் பற்றாக்குறை என்பது வேலையைத் தொடர்ந்து செய்ய வைக்கும். ஏற்கெனவே நன்கு தெரிந்த வேலையையே தொடர்ந்து செய்து வரலாமா? புதிய வேலையைச் செய்ய ஆரம்பிக்கலாமா என்ற குழப்பம் எல்லாருக்கும் வரத்தான் செய்யும். இதற்கு நேரடியான பதில் உடனடியாக இல்லை. அனுபவத்தின் அடிப்படையில் செயல்படும்போது ஆரம்பகட்ட எளிதில் வெற்றி கிடைக்கும். ஆனால், உன்னுடைய கனவுக்கு ஏற்ப புதுப் புதுத் துறைகளில் நீ அனுபவம் பெறுதல் அவசியம்.

இதோ பார் வருண்! ஒரு நிறுவனத்தில் முதன்மை நிதி அலுவலர் ஆக வேண்டும் என்று ஆசைப்பட்டால் கணக்கியல், திட்டமிடுதல், நிதி மேலாண்மை, நிர்வாகம், சட்ட நுணுக்கங்கள் என்று எல்லாத் துறைகளிலும் சம அளவு அறிவு பெற்றிருக்க வேண்டியிருக்கும். உன் முன்னே இரண்டு வழிகள் இருக்கின்றன. ஒன்று, ஏதாவது ஒரு நிதிப் பிரிவில் உன் திறமையை அதிகரித்துக் கொண்டே போகலாம். பல்வேறு நிறுவனங்களில் இதே துறையில் அனுபவம் பெற்று (நெடுக்குவாக்கில்) மேலே வரலாம். அல்லது ஒரே நிறுவனத்தில் பல்வேறு துறைகளில் பரந்துபட்ட தேர்ச்சி பெற்று (பக்கவாட்டில்) உயர்வை அடையலாம்.

'தொடர்ச்சியான புதுமை' என்பதுதான் இன்றைய பொருளாதாரச் சூழலில் மந்திரமாக இருக்கிறது. ஒருவருடைய வளர்ச்சிக்கு

முக்கியமான துறையில் நிபுணத்துவம் இருந்தாலோ நல்ல அனுபவம் இருந்தாலோ மட்டும் போதாது. அத்தகையோரால் நிறுவனத்தை முன்னுக்குக் கொண்டுவருவதும் சிரமம். இன்று ஒருவர் செயல்பாடுகளில் நிபுணத்துவம் பெற்றிருக்க வேண்டும். பணியாளர்களை ஊக்குவிக்கும் அனுபவமும் பெற்றிருக்க வேண்டும். ஆளுமை... அனுபவம்... இந்த இரண்டுக்கும் நடுவில் ஒரு சமநிலையைக் கண்டடைய வேண்டும். இது தனிப்பட்ட நபர்களுக்கு மட்டுமல்ல நிறுவனத்துக்கும் நன்மையைத் தரும்.

வருண்! நான் சொல்வதை நன்றாகக் கேட்டுக்கொள். நிதித்துறையில் பல்வேறு பிரிவுகளில் பணிபுரிந்து உன் நிபுணத்துவத்தை அதிகரித்துக் கொள். பல்வேறு மனிதர்களைச் சந்தித்து உன் அனுபவத்தை அதிகரித்துக் கொள். அனுபவம் உன் மனத்தை விசாலமாக்குவதோடு உன் உணர்ச்சிகளையும் கட்டுக்குள் கொண்டுவர வேண்டும். உன்னோட அபார வளர்ச்சிக்கு எதுவுமே தடையாக இருக்க முடியாது'- என்று வருணைக் கட்டி அணைத்து வாழ்த்து சொன்னான் விஜய்.

ஒரு பெரிய விடுதலை கிடைத்ததுபோல் வருண் உணர்ந்தான். மனம் லேசானது. திறந்த மனதோடு புதிய வாய்ப்பினை அலசிப் பார்க்க ஆரம்பித்தான் வருண்.

நிதித்துறையின் பல்வேறு பிரிவுகளில் புதிய மனிதர்களுடன் பணிபுரிந்து நல்ல அனுபவம் பெற்றான். சிறிது நாட்களிலேயே உயர்பதவியை அடைந்தான். தன் பணித் திறமைகளை விரிவு படுத்த வேண்டும் என்று அவன் தானாக ஆர்வத்துடன் எடுத்த முயற்சிகள்... திறன் மிக்க பற்பல பணிக்குழுக்களை அமைப்பதில் பெற்ற அனுபவங்கள்... இவைதான் அவனுடைய எல்லா வெற்றிக்கும் காரணமாக அமைந்தன,

**படிப்பினைகள்:**

- புதிய செயல்களன்கள், வியாபாரச் செயல்பாடுகள் என நிபுணத்துவத்தை விரிவுபடுத்திக் கொள்ள வேண்டும். புதிய பணியாளர்களுடன் தொடர்பு கொண்டு அனுபவத்தை அதிகரித்துக் கொள்ள வேண்டும். அப்போதுதான் ஒருவர் தொடர்ச்சியான வளர்ச்சியைக் காண முடியும்.

- தற்போதைய ஆளுமைத் திறனுக்கு நீரும் உரமும் வார்க்கக்கூடியதாகவும், வெவ்வேறான பணிக் களன்களில் அனுபவம் தரக்கூடியதாகவும் இருக்கும் பொறுப்புகளைத் தேடிப் பெற வேண்டும்.
- ஒரு பணியாளர் நல்ல அனுபவம் மிகுந்தவராக இருக்க வேண்டும். அதே நேரம் புதிய துறைகளின் பொறுப்புகளைத் திறமையாகச் செயல்படுத்துபவ ராகவும் இருக்க வேண்டும். இப்படியான நபர் களையே நிறுவனங்கள் எதிர்பார்க்கின்றன.
- பணிவாழ்க்கையில் எதிர்பார்த்தபடியான வளர்ச்சி உங்களுக்குக் கிடைக்காமல் போகிறதா... சுய ஆய்வு செய்து கொள்ளச் சில கேள்விகள்:

1. உங்களின் பணியை நன்கு அறிவீர்களா? - 'ஆம்' என்றால் புதிய பணிகளுக்குப் புறப்பட வேண்டிய தருணம் வந்துவிட்டது.
2. உங்கள் குழுவினர் உங்களை மதிக்கவில்லையா... புதிய திறமைகளை வளர்த்துக் கொள்ளுங்கள்.
3. உங்களின் பணிக்குழு போதுமான அளவுக்கு உற் சாகத்துடன் செயல்படவில்லையா - பணிக்குழுக் களின் அன்றாடச் செயல்பாடுகளில் பங்கேற்று வழிகாட்டுங்கள்.
4. நிறுவனத்தின் பிற துறையைச் சார்ந்தவர்கள் உங்க ளிடம் மரியாதையுடன் நடந்து கொள்ளவில்லையா? - அந்தத் துறைகளின் கலப்பு-பணிப் பொறுப்புக் களை நன்கு செயல்படுத்தி, கௌரவத்தைச் சம் பாதித்துக் கொள்ளுங்கள்.
5. புத்திசாலி பணியாளர்களைத் தக்கவைத்துக்கொள்ள முடியவில்லையா? பிறருடைய புத்திசாலித்தனத் தின் வளர்ச்சிக்கு வழி ஏற்படுத்திக் கொடுங்கள்.
6. உங்களுடன் பணிபுரிபவர்களுக்கு உற்சாகம் உண்டு. ஆனால், திறமை கிடையாதா... அவர்களின் நிபுணத்துவத்தை மேம்படுத்துங்கள்.

7. கடுமையாக உழைக்கிறீர்கள். ஆனால், எதிர்பார்க்கும் பலன்கள் கிடைக்கவில்லையா? உங்களால் என்ன முடியுமோ அதைச் செய்கிறீர்களா... அல்லது நீங்கள் என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்கிறீர்களா? கண்டுபிடியுங்கள். நடைமுறைப்படுத்துங்கள்.

நிபுணத்துவத்தை அதிகரித்துக் கொள்ளும்போது உங்கள் பலத்தை அதிகரித்துக் கொள்கிறீர்கள். உங்கள் அனுபவத்தைப் பகிர்ந்து கொள்ளும்போது பிறருடைய திறனை அதிகரிக்கிறீர்கள். ஒரு நல்ல தலைவரின் அடையாளம், நிபுணராகவும் இருக்க வேண்டும். பிறரை நிபுணராகவும் ஆக்க வேண்டும்.

# 10

## வேற்றுமையும் ஒவ்வாமையும்

வாசுவும் ரகுவும் வெகு நாள்களாகவே ஒன்றாகப் பணிபுரிந்து வருகிறார்கள். வெவ்வேறான பணிகளை நன்கு செய்து வருகிறார்கள். வாசு மென்மையாகப் பேசுபவன். ரகு படபடவென்று பேசுபவன். சென்ற வருடம்தான் வாசுவுக்கு வியாபாரத் துறையின் தலைவர் பொறுப்பு அளிக்கப்பட்டது. ரகுவுக்கு வாசுவின் கீழ் பணிபுரியும் வாய்ப்பு கிடைத்தது. இருவருக்கும் மகிழ்ச்சி. இருவரும் அந்த நிறுவனத்தில் முன்னேறினர்.

சில நாட்கள் கழிந்த பிறகு, ரகுவின் நடத்தையில் சில மாற்றங்கள் தென்பட்டன. பேச்சு குறைந்தது. துடிப்புடன் செயல்பட்டவன் இடிந்து போனதுபோல் இருந்தது. வாராந்திர மறு பரிசீலனைக் கூட்டங்களில் கலகல என்று செயல்பட்ட ரகுவின் மாற்றம், எல்லோருக்கும் வியப்பாக இருந்தது. வாசுவும் ரகுவும் சக பணியாளர்களாகச் செயலாற்றியவர்கள். இருவருக்குள் கருத்து வேறுபாடே வந்தது இல்லை. ரகுவின் திறமைகளை நன்கு அறிந்தவன் என்ற முறையில், இந்த நிலையிலிருந்து அவனை வெளிக்கொண்டு வரவேண்டும் என்று வாசு நினைத்தான்.

'ரகு! என்ன ஆச்சுப்பா உனக்கு. என்ன பிரச்னை? நீயாகவே சமாளித்துக் கொண்டுவிடுவாய் என்று தெரியும். இருந்தாலும் என் உதவி ஏதாவது தேவைப்படும் என்றால் சொல்... நான்

தயாரா இருக்கேன்' - என்று வாசு சொன்னான். எந்த ஒரு விஷயத்தையும் இரு தரப்புக்கும் வெற்றி என்ற வகையில் முடிக்கும் சாமர்த்தியம் வாசுவிடம் இருந்தது.

'சிறிது தயங்கிய ரகு மெதுவாகத் தன் மனத்தில் இருந்ததைச் சொல்ல ஆரம்பித்தான்: 'இப்போதெல்லாம், நீங்க என்னை நம்பறது இல்ல. என் திறமை மேல் உங்களுக்கு சந்தேகம் வருது. நான் வேலையில சேர்ந்தப்ப காட்டின ஆதரவை இப்ப நீங்க காட்டறது இல்ல.'

வாசுவுக்கு ரகு சொன்னது ஒருவகையில் ஆச்சரியமாக இருந்தது. பொறுமையாகக் கேட்டான். மௌனத்தை விடப் பேசுவதற்கு உகந்ததாக இருக்கும் இடங்களில் மட்டுமே பேசுங்கள் என்று சீனப் பழமொழி ஒன்று உண்டு. இந்த இடத்தில் அதைக் கடைப் பிடிப்பது மிகவும் நல்லது என்று வாசு நினைத்தான். தன் தரப்பு நியாயத்தைச் சொல்வதற்கு முன்னால் அவன் மனத்தில் உள்ளதைக் காது கொடுத்துக் கேட்க வேண்டும். அது ரகுவுக்கு ஆறுதலைத் தரும் என்று நினைத்தான்.

ரகு தொடர்ந்து பேசினான். 'ரவிக்கும் எனக்கும் இடையில் மிகப் பெரிய கருத்து வேறுபாடு இருக்கு. எனக்கு ஆதரவா நீங்க ஒண்ணுமே செய்யலை. உண்மையில எங்க ரெண்டு பேருக்கு இடையில என்ன பிரச்னை அப்படின்னே நீங்க தெரிஞ்சுக்கவே இல்லை. ரவி என்கிட்டப் பல தடவை மரியாதை குறைவா நடந்துக்கிட்டிருக்கான். எதைப் பேசினாலும் தப்பாவே பார்க்கிறான். அவனோட பேசறதயே விட்டுட்டேன். எங்க கிட்ட இருக்கற கருத்து வேறுபாட்ட எப்படிப் போக்கிக்க? நாளாக நாளாக இடைவெளி பெரிசா போய்கிட்டேதான் இருக்கு...' ரகு தன் பக்க நியாயத்தை எடுத்து வைத்தான்.

வாசு இதமாகப் பேசினான் : 'ரகு! நீ சொல்ல வருவது எனக்குப் புரிகிறது. ஆனால், ஒரு விஷயம் உனக்கும் தெரிந்திருக்கும். எல்லா மனிதரும் ஒரே மாதிரி இருப்பதில்லை. உனக்குத்தான் எல்லாம் தெரியும். மத்தவங்க எல்லாம் வேஸ்ட் அப்படின்னு நீ நடந்துக்கறதா ரவி சொல்றான். அவன் உன்ன மதிக்கறது இல்லனு நீ சொல்ற.. இப்படியே போனா, இதுக்கு என்னதான் முடிவு? என் குழுவோட முழு வலிமையை எப்படி என்னால கொண்டுவர முடியும்? ஒரு நிறுவனத்தோட திறமை எப்ப

அதிகாரிக்கும் தெரியுமா... இலக்கு ஒன்றாகவே இருந்தாலும் ஒவ்வொருத்தரும் வெவ்வேறுவிதமா சிந்திக்கணும். நீயும் ரவியும் சிந்திக்கிற விதத்துல நிச்சயம் வித்தியாசம் இருக்கத்தான் செய்யும். மாற்றுக் கருத்துகளைப் புரிஞ்சிக்கறதுதான் முக்கியமே தவிர அதை இல்லாம ஆக்கறது இல்லை. சரி நான் உன்னை ஒண்ணு கேக்கறேன்... என்னிக்காவது ரவியோட உட்கார்ந்து மனசு விட்டுப் பேசிப் பார்த்திருக்கிறாயா?' வாசு, ரகுவிடம் கேட்டான்.

'எவ்வளவுதான் பொறுத்துக்கிட்டுப் போறது. அவன் எதையும் புரிஞ்சுக்கவே மாட்டேங்கறான். அவன் கூடப் பழகறதுன்னாலே எனக்குக் கோபம் பத்திக்கிட்டு வருது. அவன் தொடர்பா எதுவுமே இல்லாம இருக்கணும்னு நெனைக்கறேன். அதனால தான், எதுவானாலும் என்னோட இருக்கட்டும்னு ஒதுங்கிப் போறேன்'

'ரகு நீ புரிஞ்சு தான் பேசறியா? தனிப்பட்ட வாழ்க்கையோ பணி வாழ்க்கையோ... இப்படி யாருடனும் பேசாம எல்லாம் இருக்கவே முடியாது. நடக்கற விஷயத்த மட்டும் யோசி..பேசு. கருத்து வேறுபாடு வந்துடுச்சுன்னா அது தொடர்பான மனுஷங் களோட முதல்ல மனம் விட்டுப் பேசு. அத விட்டுட்டு இப்படி ஓடி ஒளியறதுல அர்த்தம் இல்ல... மனசுல இருக்கற எதிர்மறை எண்ணங்கள் எல்லாத்தையும் சீக்கிரமா இறக்கிவிடு.'

வாசு மேலும் தொடர்ந்தான். 'ரகு! கண்மூடித்தனமா எல்லா வித்தி யாசத்தையும் ஒத்துக்கிட்டுப் போன்னு சொல்லல. ஒவ்வாமை எதற்கும் தீர்வாக முடியாதுன்னு சொல்ல வர்றேன். தெளிவான சிந்தனையோடு, ஒவ்வாத விஷயங்களை ஆய்வு செஞ்சு பாரு! அந்த விஷயங்களை நல்லா புரிஞ்சுக்கவ. ஒருத்தர் மீது கோபப் பட்டு மன விரக்தி அடையறதுல அர்த்தம் இல்ல. கோபம் என்பது மன விரக்தியின் வெளிப்பாடு. கோபத்தை அடக்குவதால் மன விரக்தி ஏற்படுகிறது. எதிராளியோட உணர்வைச் சமாளிக்க முடியாமல் போறப்ப கோவம் வெடிக்குது. உன்னோட உணர்வை அடக்க முடியாமப் போறப்ப விரக்தி வெளிப்படுது. இரண்டுக்குமே ஒரு வடிகால் தேவை. பிறருடைய உணர்வைப் புரிந்து கொண்டு பேசுவதுதான் அந்த வடிகால்.'

ரகு சிறிது நேரம் பேசாமல் இருந்தான். வாசு, ரகுவின் கழுத்தில் தன் கைகளை மாலையாக இட்டான். 'ஒரு வேறுபாடு, சிந்தனை அளவில் நீண்ட காலம் இருந்தால் அது அப்படியே உணர்வு

களிலும் வெளிப்பட ஆரம்பித்துவிடும். அந்த உணர்ச்சியும் நீண்ட காலம் நீடித்தால் அதுவே ஒவ்வாமை ஆகிவிடும். எந்த வொரு நட்புறவிலும் நெருக்கம் உருவாக வேண்டுமென்றால் வேறுபாடுகள், சிந்தனை அளவில் இருக்கும்போதே களையப் பட்டுவிட வேண்டும். ஒருவர் மற்றவரிடம் பார்க்கும் நல்ல குணங்களை முதலில் பேசிக் கொள்ளுங்கள். இப்படி ஆரம்பித் தால் நிச்சயம் இருவருடைய கருத்துகளிலும் ஓர் ஒற்றுமை சீக்கிரமே ஏற்பட்டுவிடும். கருத்து வேறுபாடுகளை நீங்கள் எளிதில் கையாண்டுவிடுவீர்கள்' என்று நிதானமாக விளக்கி னான்.

மறு நாள் காலையில் ரகு, ரவியைக் கூப்பிட்டு நீண்ட நேரம் பேசினான். ரவி முதலில் நிறுவனத்தில் சேர்ந்தபோது, அவனை எப்படிப் பார்த்தான் என்று சொன்னான். ரவியிடமிருந்து எத்தனை நல்ல விஷயங்களைத் தான் கற்றுக் கொண்டதை ரகு கூறிப் பெருமிதப்பட்டான். இருவருக்கும் இடையில் கருத்து வேறுபாடு எப்படி வந்தது என்று இருவரும் ஆராய்ந்தனர். இருவரும் மனம் விட்டுப் பேசியிருந்தால், பிரச்னை இவ்வளவு பெரிதாக ஆகி இருக்காது என்று உணர்ந்தனர். இறுதியில் இருவரும் ஒருவரை ஒருவர் ஆரத் தழுவிக்கொண்டனர். புன்முறுவலோடு கை குலுக்கிக் கொண்டனர்.

வாசுவுக்கு மிகுந்த சந்தோஷம். இரு திறமைசாலிகளை மீண்டும் ஒன்று சேர்த்த பெருமிதம். நிறுவனம் முழுதும் இந்த விஷயம் பரவியது. இருவரின் முழு ஆற்றலும் நிறுவனத்துக்குப் பயன்படப்போகிறது என்று எல்லோருக்கும் சந்தோஷம். ஒருவேளை, மறுபடியும் கருத்து வேறுபாடு தலைதூக்கினால், இப்போது நிகழ்ந்ததுபோல் நட்பு முறிவு நிச்சயமாக இருக்காது. படிக்கப் படிக்க ஒருவரின் நூலறிவு சிறப்பது போலப் பழகப் பழகப் பண்புள்ள நண்பர்களின் நட்பு சிறக்கும் என்பது பொய் அல்லவே!

**படிப்பினைகள்**

- பணியாளர் ஒன்றை நன்றாக நினைவில் கொள்ள வேண்டும். கருத்து மாறுபாடுகள் உருவாவது இயற்கை. ஆனால், அதுவே ஒவ்வாமையாக ஆகி விடக்கூடாது.

- கருத்து மாறுபாடுகள் தலைதூக்கும்போதே கிள்ளி எறியாவிட்டால், நட்புறவில் பெரும் பிளவை ஏற்படுத்தி விடும்; மாறாக, கருத்து வேறுபாடுகள் கண்டறியப்பட்டு, உடனுக்குடன் சரி செய்யப் பட்டால், நட்புறவு பலப்படும்.

விளக்கப்படாத சிந்தனைகள் வித்தியாசத்தை உருவாக்கும். வெளிப்படுத்தப்படாத உணர்வுகள் ஒவ்வாமையை ஏற்படுத்தும். பரஸ்பரக் கருத்துப் பரிமாற்றமே ஒரே தீர்வு.

# 11

## மன்னிப்பு – உச்சபட்ச விடுதலை

நாம் சந்திக்கக்கூடிய நல்ல, கெட்ட அனுபவங்களைப் பொறுத்துத்தான், வாழ்க்கையின் திசையும் தரமும் அமையும் என்பதில் விஜய்க்கு அசைக்க முடியாத நம்பிக்கை. அனுபவம் நமக்கு விஷயங்களைக் கற்றுக்கொடுப்பது உண்மைதான். ஆனால், அதிலிருந்து நாம் புரிந்து கொள்பவைதான் நம்மிடையே மாற்றத்தை ஏற்படுத்தும். தனது தற்போதைய வாழ்வு என்பது அனுபவங்களில் இருந்து கற்றுக் கொண்டதன் வெகுமதி என்று விஜய் நினைத்தான். ஒருமுறை சென்னையில் இருந்து தில்லிக்கு விமானத்தில் பயணிக்கும்போது, கென் ப்ளாசர்ட் எழுதிய 'ஒன் மினிட் அப்பாலஜி' (ஒரு நிமிட மன்னிப்பு) என்ற புத்தகத்தை வாசிக்கும் வாய்ப்புக் கிட்டியது. அதைத் தொடர்ந்து மனத்தில் பல கேள்விகள் முளைத்தன:

1. ஒரு சிறு தவறு நிகழ்ந்தால், அதற்கு வெளிப்படையாக மன்னிப்புக் கேட்கும் பக்குவம் இல்லாமல் எத்தனை முறை வாழ்க்கையில் நடந்து கொண்டிருக்கிறேன்?

2. இரு தரப்புக்கும் தர்ம சங்கடத்தை உருவாக்குவதுபோல் கடந்த கால மனமுறிவுகளை எத்தனை முறை மறக்காமல் சுமந்து வந்திருக்கிறேன்?

3. செய்த தவற்றைத் திருத்திக் கொள்ளாமல், 'மன்னிக்கவும்' என்பதை வெறும் வார்த்தை அளவில் மட்டுமே எத்தனை முறை உபயோகித்திருக்கிறேன்?

4. நான் ஏன் முதலில் மன்னிப்புக் கேட்க வேண்டும். எதிராளி தான் கேட்கட்டுமே என்று எத்தனை முறை கர்வத்துடன் இருந்திருக்கிறேன்?

5. நான் நினைத்தபடிப் பழக முடியாதவகையில், கடந்த காலக் கசப்பான அனுபவத்தை மனத்தில் சுமந்தபடியே எத்தனை முறை இருந்திருக்கிறேன்?

ஒருபுறம் கண்கள், புத்தகத்தில் பதிய, மறுபுறம் 'எத்தனை பேர் மனத்தைப் புண்படுத்தி இருக்கிறேன்' என்று விஜயின் மனம் யோசிக்க ஆரம்பித்தது. விஜய் வேண்டுமென்றே யாரையும் புண்படுத்தாத நற்குணம் கொண்டவன்; அதேநேரத்தில், புண்படும்படி யார் பேசியிருந்தாலும், அதை அப்போதே மறந்து விடும் மனம் கொண்டவன்; கண்களை மூடி யோசித்தபோது ஒரு சம்பவம் நிழலாடியது.

சில வருடங்களுக்கு முன்பு, தகவல் தொடர்பு தனியார் நிறுவனத்தில் பணிபுரிந்த கொண்டிருந்தபோது அந்தச் சம்பவம் நடந்திருந்தது. வியாபார விரிவாக்கத் துறையில் தலைமைப் பொறுப்பை செவ்வனவே செய்து வந்தான். மூன்றாண்டுப் பணியில், இரண்டு வெவ்வேறான பொறுப்புகளை வகித்து வந்தான். புதியதொரு மாற்றத்தை எதிர்பார்த்து இருந்தான். தற்போது தந்திருப்பதைவிட இன்னும் பெரிய பொறுப்பைக் கொடுக்க வேண்டும் என்று நிர்வாகத்திடம் விஜய் முன்னரே விண்ணப்பித்து இருந்தான். மூன்று மாதங்கள் உருண்டோடின. நிர்வாகத்திடம் இருந்து எந்த விதப் பதிலும் வரவில்லை. தான் விரும்பும், வித்யாசமான பொறுப்பை வேறொரு இடத்தில் தேட ஆரம்பித்தான். ஏனெனில், இப்போதைய நிர்வாகம் பணி மாற்றத்துக்கான விண்ணப்பத்தை ஏற்காது என்பதை விஜய் நன்றாக அறிந்திருந்தான்.

ஒரு மாதத்துக்குள்ளாகவே, எதிர்பார்த்தபடி ஒரு வேலை இருப்பது தெரியவந்தது. அந்த இடத்தின் மனித வளப்பிரிவிலிருந்து, விஜயின் திறமைக்கு சவால் விடும்படியான பணிக்கான அழைப்பும் வந்தது. ஆனால், அன்றிரவே, பணியாற்றிக் கொண்டிருந்த நிறுவனத்தின் முதன்மைச் செயலாளரிடமிருந்து, உங்களுக்குப் பதவி உயர்வு கொடுக்கத் தீர்மானித்திருக்கிறோம் என்று ஒரு செய்தி வந்தது.

விஜய்க்கு மூக்குக்கு மேல் கோபம் வந்தது. சவாலான வேலையைத் தாருங்கள் என்று கேட்ட போதெல்லாம், எதுவும் பதில் சொல்லாமல் இருந்த நிர்வாகம், இப்போது வேறு வேலைக்கான எல்லா முனைப்புகளும் வெற்றிகரமாக முடியும் தறுவாயில் இப்படிச் சொல்வது கோபத்தைத் தந்தது. தன்னுடைய முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டைப் போடுவது போல் அது தோற்றம் அளித்தது. முதன்மைச் செயலாளர் தன் மீது காட்டிய கரிசனத்துக்கு நன்றி தெரிவித்தபடியே, பணி உயர்வு வாய்ப்பை விஜய் புறக்கணித்தான். புதிய நிறுவனத்தின் வேலை கவனத்தை ஈர்ப்பதாகக் கூறினான். முதன்மைச் செயலாளர், மறு நாள் காலை தன்னை வந்து சந்திக்கும்படி விஜயிடம் கூறினார்.

சொன்னபடி மறுநாள், விஜய் முதன்மைச் செயலாளரைச் சந்தித்தான். மனித வளத் தலைவரும் முன்னதாகவே வந்திருந்தார். பதவி உயர்வின் சிறப்பம்சங்களை இருவருமாக விளக்கினார்கள். புதிய நிறுவனத்தில் கிடைக்கும் வேலையோடு தாம் அளிக்கும் உயர்ந்த பொறுப்பினை ஒப்பிட்டுக் காட்டினர். மேற்கொண்டு பதவி உயர்வு துரிதமாகக் கிடைப்பதற்கான வாய்ப்புகள் இருப் பதை அடிக்கோடிட்டுக் காட்டினர். விஜய், தான் எடுத்த முடிவில் தெளிவாக இருந்தான். திறம்பட நன்றாகச் செயல்பட்டபோதும், பதவி உயர்வு தர வேண்டிய தருணங்களில் நிர்வாகம் கண்டு கொள்ளாமல் இருந்ததால், முதன்மைச் செயலாளரும் மனித வளத் தலைவரும் சேர்ந்து நடத்தும் நாடகப் பேச்சுவார்த்தைக்கு விஜய் செவிசாய்க்காமல் இருந்தான். படபடவென்று பொரிந்து தள்ளினான். அன்று, அவனது அறிவை உணர்ச்சிகள் வென்று விட்டன. இறுதியில் இருவரின் முயற்சியும் தோற்றது. விஜய் வெளியேறினான். புறப்பட்டு வந்ததில் இருந்து, முதன்மைச் செயலாளரிடம் தாறுமாறாக நடந்து கொண்டதற்கு மன்னிப்புக் கேட்காமல் வந்துவிட்டோமே என்பது அவன் மனத்தை உறுத்திக் கொண்டே இருந்தது.

அப்போது 'சார் உங்க சீட்பெல்ட்டை இறுக்கிப் போட்டுக்குங்க' - என்று விமானப் பணிப்பெண் சொல்ல, பழைய நினைவலை களிலிருந்து விஜய் மீண்டான். கையில் வைத்திருந்த புத்தகத்தின் அட்டையில் அவன் பார்வை திரும்பியது. அவ்வளவுதான், உடனே தனது பழைய முதன்மைச் செயலாளரிடம் கோபமாக நடந்து கொண்டதற்கு மன்னிப்புக் கேட்கத் தீர்மானித்தான். மேகத்தைக் கிழித்தபடி விமானம் பறந்து கொண்டு இருந்தது.

'இப்போது லேப் டாப் பயன்படுத்திக் கொள்ளலாம்' என்று விமானத்தினுள் அறிவிப்பு வந்து. மள மளவென்று மின்னஞ்சல் அனுப்பினான். இதயம் லகுவானது. மன்னிப்பு சம்பிரதாயமாக இல்லாமல், இதயத்தின் ஆழத்திலிருந்து வரும்போது அதற்கு வலிமை அதிகம் என்பதை விஜய் உணர்ந்தான். முன்பே அனுப்பியிருக்க வேண்டும் என்று வருத்தப்பட்டான்.

இந்த நிகழ்ச்சி நடந்து 15 நாட்களுக்குப் பிறகு, விஜய் வெளி நாட்டில் நடைபெற்ற வியாபார மாநாட்டுக்குச் செல்ல நேர்ந்தது. எதிர்பாரரதவிதமாக அங்கு முன்னாள் முதன்மைச் செயலாளரைச் சந்தித்தான். அங்கிருந்த நாள் முழுதும் தர்ம சங்கடமான நிலைமை ஏதும் அவனுக்கு ஏற்படவில்லை. தான் மன்னிப்புக் கேட்டு மின்னஞ்சல் அனுப்பியிருக்கவில்லை என்றால், அவரைச் சந்திப்பதற்கு எவ்வளவு கஷ்டமாக இருந் திருக்கும் என்று விஜய் நினைத்தான். நாகரிகத்தோடு அவன் கேட்டுக்கொண்ட மன்னிப்பு, இருவரிடம் இருந்த உறவையும் நல்லெண்ணங்களையும் இன்னும் வலுப்படுத்தியது. மன்னிப்புக் கடிதத்தில் விஜய் வெளிப்படுத்தி இருந்த உணர்வுகள், மன உளைச்சல்களில் இருந்து அவனுக்கு விடுதலை அளித்தன என்பது தான் உண்மை.

அதன் பிறகு, தன்னிடம் யார் உணர்ச்சிக் கொந்தளிப்புடன் பேசி னாலும் அல்லது தான் அவ்வாறு நடந்து கொண்டாலும் நட்பு முறிந்து போகக் கூடிய அளவுக்குப் போகாமல் பார்த்துக்கொள்ள ஆரம்பித்தான். இதுதான் அவன் வாழ்க்கையில் மன்னிப்புக் கேட்டுக்கொண்டதால் ஏற்பட்ட பெரும் மாற்றம்... திருப்புமுனை. தானாகவே மன்னிப்புக் கேட்டுக்கொள்வதினாலும், மன்னிப்புக் கேட்பவர்களின் தவற்றை உடனடியாக மறந்து போகும் பக்குவத்தினாலும் என்றைக்கும் வாழ்க்கையில் ஆனந்தத்தையும் அமைதியையும் விஜய் அனுபவிக்க ஆரம்பித்தான்.

**படிப்பினைகள்**

- நம்மால் பாதிக்கப்பட்டவரிடம் மன்னிப்புக் கேட்கும்போது, சுத்தமாவது நம் இதயம் மட்டு மல்ல... அவர்களுடைய மனமும்தான். அதே போல், நமக்கு பாதிப்பை ஏற்படுத்தியவரிடம் பெருந்தன்மையாக நடந்து கொள்வது, நம்மை மனக் குமுறல்களில் இருந்து விடுவிக்கும்.

- மன்னிப்பானது, சொல்லப்படும் வார்த்தைகளை விட மிகவும் வலிமையானது. எந்தப் பலனையும் எதிர்பார்த்து மன்னிப்பு கேட்கக் கூடாது. நாம் செய்தது தவறு என்று உணர்ந்து கேட்க வேண்டும். நாம் மன்னிப்புக் கேட்க வேண்டும் என்ற எண்ணம் நம் மனத்தில் வந்தாலே போதும் மனம் சுத்தமாகி விடும்.'

- யார் அல்லது எது நம்மைப் பாதிக்கிறது என்பது முக்கியமில்லை. எப்படி அவற்றை எதிர் கொள் கிறோம் என்பதுதான் மிக முக்கியம்.

- பணிவாழ்க்கையோ மணவாழ்க்கையோ எந்த வொன்றிலும் இது போன்ற சம்பவங்கள் சகஜம் தான். நாம் பாதிக்கப்பட்டாலும், நாம் பிறரைப் பாதித்தாலும் உறவில் விரிசல் விழுகிறது என்று அர்த்தம்.

- யாருக்கும் பாதிப்பு ஏற்படாதபடி நிலைமைகளைச் சமாளிக்க வேண்டும். தவறு உங்களிடமா... தயங்காமல் மன்னிப்பு கேட்டு சமாதானப் புறாவைப் பறக்கவிடுங்கள். தவறு மறுபக்க மானால், பெருந்தன்மையோடு மன்னியுங்கள். ஏனென்றால் தவறு இழைத்தல் மனித இயல்பு: மன்னித்தல் தெய்வ இயல்பு.

உடல்ரீதியான மனரீதியான களைப்புகளைவிட உணர்வுபூர்வமான சோர்வுகளே மனித ஆற்றலை உறிஞ்சிவிடுகின்றன. உணர்வுபூர்வமான விடுதலை என்பது நம்மை உற்சாகமாக வாழ வைக்கிறது.

# 12

## ஆனந்தம் விளையாடும் வீடு

புதிய பொறுப்பை ஏற்க வருண் தன் சொந்த ஊரை விட்டு, திருமணமான சில நாள்களிலேயே செல்ல நேர்ந்தது. மனைவி விஜயாவுக்கு சந்தோஷம். திருமணமானவுடன் தனிக்குடித் தனம். நாத்தனார்-மைத்துனர்-மாமனார்-மாமியார் தொந்தரவு இல்லை. முழு சுதந்தரம். பெருமகிழ்ச்சி. எப்போதாவது அவர்கள் வருகையில் இரண்டொரு வாரங்கள் சுதந்தரத்தை அடமானம் வைக்க வேண்டும். அவ்வளவே.

ஆனால், அந்த இரண்டொரு வாரங்களிலும் அவர்களின் பாரம் பரியப் பழக்கவழக்கங்கள், ஆசார அனுஷ்டானங்களுக்கு விஜயா வால் ஒத்துப் போகவே இல்லை. அதிலும், குறிப்பாக வருணின் அம்மாவுக்கும் விஜயாவுக்கும் ஒத்துப் போகவில்லை. ஒருவரை ஒருவர் புரிந்து கொள்வதற்கு முயற்சி எடுப்பதற்கு முன்னரே, பெற்றோர் விடைபெற்றுச் செல்வது வாடிக்கையாகிப் போனது. இந்த நிலையே சில வருடங்கள் தொடர்ந்தன.

பேரன், ஜெயன் பிறந்தான். விஜயாவின் முழுக்கவனமும் மகன் பக்கம் திரும்பியது. விஜயாவின் பெற்றோர்-வருணின் பெற்றோர் என மாறி மாறி வருகை தந்து முழு ஒத்துழைப்புத் தந்தார்கள். தன் பெற்றோர் தன்னோடு வெகுநாள்கள் தங்க வேண்டும் என்று விரும்பினாலும் , மனைவிக்கும் அவர்களுக்கும் இடையே நிலவும் கருத்து வேறுபாடுகளைக் கருத்தில்கொண்டு வருண் எதுவும் சொல்லமாட்டான். அதேநேரம், விஜயா தன் பெற்றோர் தன்னோடு வெகு நாள்கள் தங்கவேண்டும் என்று நினைத்தாள்.

ஆனால், அவர்களுக்கு ஊரில் மற்ற முக்கிய பணிகள் நிறைய இருந்ததால் முடியாமல் போனது. எனவே, வேறு வழியில்லாமல் விஜயாவே குழந்தையைத் தன்னந்தனியாக அதிகம் கவனித்துக் கொள்ள வேண்டிவந்தது. உடல் ரீதியாகவும் உள ரீதியாகவும் வேலைகள் அதிகமானது. கணவன் மனைவி இடையேயான நெருக்கம் குறைந்தது. மந்த கதியிலான அன்றாட வாழ்க்கை இருவரையும் களைப்படைய வைத்தது.

சில மாதங்களிலேயே நல்ல வேளையாக, சொந்த ஊரில் வேலை செய்ய ஒரு வாய்ப்பு வருணுக்குக் கிட்டியது. வயதான காலத்தில் அப்பா, அம்மாவோடு இருக்கும் நாள்களை நினைத்து சந்தோஷப்பட்டான். அதே நேரத்தில் சுதந்தரமாக தனிக்குடித் தனத்தின் சுகத்தை அனுபவித்த மனைவி விஜயாவின் போக்கு, கூட்டுக்குடும்பத்துக்கு ஒத்துவராதே என்று மிகவும் வருந்தினான். குழப்பத்தில் ஆழ்ந்து என்ன செய்யலாம் என்று யோசித்தான்.

ஊரில் நடந்த திருவிழாவில் எதிர்பாராதவிதமாக விஜயை வருண் சந்திதான். தன் குழப்பத்தைத் தெரிவித்தான். 'ஊருக்குத் திரும்பிச் செல்வதற்கு முன்னால், உன் வீட்டுக்கு வந்துவிட்டுச் செல் கிறேன். குழந்தையையும் பார்க்க வேண்டும். ஜூனியர் வருண் எப்படி இருக்கிறான் என்று பார்க்க வேண்டாமா?' என்றான் விஜய். வருண் சந்தோஷப்பட்டான்.

சொன்னபடியே, விஜய் வருணின் வீட்டுக்கு வந்தான். விஜயா புன்முறுவலோடு வரவேற்றாள். 'குழந்தை பிறந்து ஏழெட்டு மாதங்கள் ஆச்சு. இப்பத்தான் எங்க ஞாபகம் வந்தா? அக்கா எப்படி இருக்காங்க? பசங்க நலமா இருக்காங்களா?' என் று நலம் விசாரித்தாள்.

'எல்லாரும் நல்லா இருக்காங்கம்மா. வரணும்னு தான் நினைக் கறேன். எங்கம்மா நேரம் இருக்கு. அலுவலக வேலைகளே சரியா இருக்கு. முன்ன மாதிரி இப்பெல்லாம் யார் வீட்டுக்கும் போகவே முடியறது இல்ல' - பதில் சொன்ன விஜய், குழந்தைக்காக வாங்கியிருந்த புதிய ஆடையைக் கொடுத்தான். விஜயா குழந்தைக்கு அதைப் போட்டுவிட்டாள். 'பயலே! அம்மாவைப் போட்டு படுத்தி எடுக்கறியா?' என்று கொஞ்சின படி, கொண்டு வந்த காபியை வாங்கிக் கொண்டான்.

'விஜயா! உங்க ஊருக்குப் போகப் போறீங்க. சந்தோஷம்தானே!' - விஜயின் கேள்விக்கு யோசிக்காமலே விஜயா பதில்

சொன்னாள் : 'சந்தோஷம்தான். என்ன ஒண்ணு. இங்க இருக்கற சுதந்தரமும் சந்தோஷமும் தொடரணும்.'

'பார்த்தீங்களா? நான் சொன்னது சரியா போச்சு. கல்யாணமான உடனே ஊர் விட்டு வந்தது தப்பாப் போச்சு. இவ பேச்சுக்கே எங்க அப்பா அம்மா வர்றது இல்ல. இப்பவே இந்த நிலைமை. அங்க போனா என்ன ஆகுமோ... எனக்குப் பயமா இருக்கு. அவங்க வயசானவங்க. நான் தான் இந்தியாவுல இருக்கற ஒரே பையன். ஒத்துக்கிட்டு கூட்டுக் குடும்பமா இருந்தா என்னவாம்?' வருண் தன் வேதனையைக் கொட்டித் தீர்த்தான்.

'கணவருடைய அம்மா அப்பாவோட இருக்கறதால உங்களுக்கு என்ன கஷ்டம்? சொல்லப்போனா அவங்க ரொம்ப உதவிகரமா இருப்பங்க. ஒவ்வொரு நாளும் வருண் வேலை வேலைன்னு போயிட்டு வீட்டுக்குத் தாமதமா வர்றப்ப, குழந்தையை சமாளிக்க அவங்க நிச்சயம் ஒத்தாசையா இருப்பங்க. பேரப் பிள்ளையோட விளையாடறது இந்த வயசான காலத்துல அவங் களுக்கு ஆறுதலா இருக்கும் இல்லியா...' - விஜய், விஜயா வுக்குப் புரிய வைக்கப் பார்த்தான்.

'நீங்க சொல்றது புரியுது. ஆனா, அவங்களோட ஒத்துப் போக முடியும் என்று எனக்குத் தோணல. அவரோட அப்பா பரவா யில்லை. அம்மாவுக்கு நான் எது செஞ்சாலும் பிடிக்காது. அவங்க என்ன செய்யணும்னு நெனைக்கறாங்களோ, அத நான் செய்யணும்னு எதிர்பார்க்கறாங்க. தலைமுறை இடைவெளியைப் புரிஞ்சுக்கறதே இல்ல. அதுக்காக அவங்க சொல்றது எல்லாம் தப்புனு சொல்ல வரல. இப்ப இருக்கற கால கட்டத்துல நடைமுறைக்கு ஒத்து வராதுன்னு சொல்றேன். அவங்க என்னோட டேஸ்ட்டுக்கு ஒத்துப் போகமாட்டாங்க' - விஜயா தன் தரப்பு நியாயங்களை முன்வைத்தாள்.

'விஜயா! அவங்க நம்மோட லைஃப் ஸ்டைலுக்கு வர விருப்பப் படலைனு ஏன் நெனைக்கிறீங்க? ஆடம்பரமா இருக்கறதுக்கு பதிலா எளிமையா வாழணும்னு நெனைக்கறாங்க. என் அப்பாவை எடுத்துக்குங்க... எங்க வீட்டுல ரெண்டு கார் இருக்கு. ரெண்டு டிரைவர் இருக்காங்க. ஆனா சைக்கிள்ல போறதுதான் பிடிச்சிருக்குன்னு என் அப்பா சொல்றாரு. எனக்கு அது கஷ்டமா இருந்தாலும் அவரோட கொள்கை எனக்குப் பிடிச்சிருக்கு. நம்ம வாழ்க்கைத்தரம் உசந்திருக்குங்கறதுக்காக நம்மச் சுத்தி

இருக்கறவங்க நாம் எதிர்பார்க்கற மாதிரி மாறிடணும்னு நெனைக்கறது ரொம்ப தப்பு விஜயா. நம்ம பெற்றோரோட வாழ்க்கையை அவங்க எதிர்பார்க்கற மாதிரி அமைச்சுத் தரணும். அது தான் நம்ம கடமை. பணம் காசைப் பார்த்து அவங்க நம்மோட இருக்கணும்னு நெனைக்கல. பாசம், மரியாதை... நம்ம வாழ்க்கையில இன்னமும் அவங்கள முக்கியமா கருதணும்னு நெனைக்கற ஏக்கம். அந்த உணர்வுகளுக்கு நாம மதிப்பு கொடுக்கணும். இத மனசுல வச்சு நாம நடந்துக்கிட்டா போதும். பிரச்னையே வராது. உசிரா நெனைக்கற புருஷனைப் பெத்தவங்க. அவரை மொத்தமா கொடுத்துட்டவங்க. அதுக்காகவாவது நாம் கொஞ்சம் விட்டுக் கொடுத்துப் போகலாமே. முழுக்கவே விட்டுக்கொடுக்கணும்னு சொல்ல வரல. ஏதோ ஒண்ணு ரெண்டு கொஞ்சம் மாத்திக்கலாம் இல்லையா. ஏதோ இன்னும் கொஞ்ச நாள். இது கூட முடியாதா...'

வருண் இடைமறித்தான், 'விடுங்க... அவ என்னோட மனசையே புரிஞ்சுக்கறது இல்ல... அவ நெனைக்கறதுல பிடிவாதமா இருக்கா.'

'இப்படித்தான் இவரும் என் மனசைப் புரிஞ்சுக்கறதே இல்லை. அஞ்சு நிமிஷம் தொடர்ந்து பேசினாலேயே குத்துச்சண்டை போடறாப் போல பேசறார். கல்யாணத்துக்கு முன்னால இருந்த காதல் இப்ப எங்க போச்சுன்னே தெரியல. பேச்சுக்கு நூறுதரம் அவங்க அம்மா-அப்பானு சொல்றாரே தவிர வாய் வார்த்தையில கூட எங்க அம்மா அப்பாகிட்ட பாசமா பேசமாட்டேங்கிறாரு' - என்று பொரிந்தாள் விஜயா.

வருண் தன் தரப்பை அழுத்தமாகச் சொல்ல ஆரம்பித்தான். 'ஆமாம்... எனக்கு என் அம்மாதான் உசத்தி. யாரோடையும் ஒப்பிட்டுக்கூடச் சொல்லமுடியாது. அன்பு, பாசம், தியாகம், பக்தி, நெஞ்சுரம், கடின உழைப்பு எல்லாத்துக்குமே என்னோட அகராதி யில ஒரே ஒரு வார்த்தைதான்... அதுதான் என் அம்மா. எனக்கு எங்கம்மாதான் எல்லாமே. இன்னிக்கு நான் இந்த நெலைமைல இருக்கறதுக்கு என் அம்மா அப்பாதான் காரணம். என் அம்மா பட்ட கஷ்டம் வேற யாரும் பட்டிருக்கவே மாட்டாங்க.. எங்க பாட்டி எப்படியெல்லாம் வேலை வாங்குவாங்க தெரியுமா. ரெண்டு கையும் 24 மணி நேரமும் எங்க அம்மாக்குப் போதாது. எனக்கு ஒரு சித்தி இருந்தாங்க. ரொம்பப் பணக்காரங்க. எப்ப வாய்ப்பு கிடைச்சாலும் பாட்டி, அவங்க கூட ஒப்பிட்டு அம்மாவைக் குறை சொல்லிக்கிட்டே இருப்பங்க. திட்டுவாங்க. அம்மாக்கு மனசு

ரொம்ப கஷ்டமாதான் இருக்கும். எத்தனையோ தடவை தனியா உட்கார்ந்து அழறதைப் பார்த்திருக்கேன். ஆனா, பாட்டிக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளைக் குறைவே இல்லாம செஞ்சி கிட்டே இருப்பங்க... பாட்டி சாகற வரைக்கும் சலிக்காம செஞ்சுக் கிட்டே இருந்தாங்க... தன் புருஷனோட தாய் என்கிற ஒண்ணை மட்டும் மனசுல வச்சுக்கிட்டு செயல்பட்டாங்க. சேவையா செஞ்சாங்க.'

வருண் மேலும் தொடர்ந்தான். 'எங்கப்பா ஒரு வியாபாரி. ஒரு நாளுக்கு 24 மணி நேரம்தான் இருக்குன்னு கவலைப்படற அளவுக்கு உழைக்கக்கூடியவர். அவரோட உழைப்புலதான் நான் என் மேல் படிப்பை முடிச்சேன். வெறும் வருணா இருந்திருந்தா இந்த விஜயா காதலிச்சு இருப்பாளா... கல்யாணம்தான் பண்ணிக்கிட்டு இருப்பாளா? சொல்லுங்க. என்னை வளர்ந்து இந்த நல்ல நிலையில வாழ வெச்சிருக்கற என் பெற்றோருக்கு என் உடம்பைச் செருப்பா தைச்சுப் போட்டாலும் தகும். அவங்க நல்லது சொன்னா கேட்கணும்னு எதிர்பார்க்கறாங்க. இதுல என்ன தப்பு இருக்கு? இந்தியால இருக்கற ஒரே பிள்ள நான்தான். என் அக்கா சவுதில இருக்காங்க. என் அண்ணன் யூ.எஸ்.ல இருக்கான். என் பெற்றோர் என் கூட இல்லாம யார் கூட வாழ முடியும். சொல்லுங்க. அவங்களப் புரிஞ்சு நடந்துக்கிட்டா என்ன? இவ மயில் தோகை பொல பொலன்னு கொட்டிடப் போகுதா? காதலிக்க ஆரம்பிச்ச முதல் நாள்லயிருந்தே நான் இவ கிட்ட எதிர்பார்க்கற விஷயம் இது ஒண்ணுதான். இதையும் ஆயிரம் தடவை சொல்லி இருப்பேன். அப்ப எல்லாம் 'பூம் பூம் மாடு' மாதிரி தலைய ஆட்டிட்டு இப்ப இப்படி நடந்துக்கிட்டா எப்படி? இத மட்டும் இவ ஒத்துகிட்டான்னா, இவளுக்கு என் உசிரையே தரத் தயாரா இருக்கேன். இதைச் சொன்னா அவ என்ன பதில் சொல்லுவா தெரியுமா... உங்க உசிரு எனக்கு எதுக்கு. நான் உசிரோட இருக்கறவரை என் மேல பாசமா இருங் களேன்.. அப்படின்னு முகத்துல அடிச்சமாதிரி பேசறா...' வருண் பெருமூச்சோடு சரவெடியாகக் கொட்டித் தீர்த்தான்.

விஜய்க்கு உண்மையான பிரச்னை என்ன என்பது புரிந்து விட்டது. விஜயா காபி டம்ளரை உள்ளே வைக்கச் சென்றாள். விஜய் வருணிடம் சொன்னான் . ' இதோ பார் வருண்... நீ விஜயா மீதும் உன் அப்பா அம்மா மீதும் வைத்துள்ள பாசம் அளவிட முடியாததுதான். ஆனாலும், உன் பெற்றோருக்கும் விஜயா வுக்கும் இடையே உள்ள உறவு உணர்ச்சிபூர்வமா நெருக்க

மானால்தான் நீ இவங்க கிட்ட காட்டுற அன்பு முழுமையடை யும். இதுக்கு மொதல்ல நீ செய்யவேண்டியது ஒண்ணு இருக்கு. விஜயாவோட அம்மா அப்பாகிட்ட உன்னோட அன்பை நெறையா காட்ட ஆரம்பி. விஜயாகிட்ட பெரிய மாற்றம் வந்துடும். விஜயாவோட பெற்றோரிடம் நீ காட்டுற ப்ரியத்தை உன்னோட அம்மா அப்பாகிட்ட அவ காட்ட ஆரம்பிச்சுடுவா...'

விஜய் அறிவுரை கூறி முடிப்பதற்கும் விஜயா உள்ளே இருந்து வெளியே வரவும் சரியாக இருந்தது. விஜய் தொடர்ந்தான்:

'மொதல்ல நீங்க ரெண்டு பேரும் மனம் விட்டு பேசிக்கணும். மனசுல ஒண்ணும் வெளியில ஒண்ணுமா பேசிக்கக்கூடாது. ஒருத்தர் இன்னொருத்தரோட மன உணர்வுகளை நல்லா புரிஞ்சுகிட்டுப் பேசணும். கருத்துகள் மோதிக்கொள்ளலாம். நீங்க ரெண்டு பேரும் தனிப்பட்ட நபர்களாக மோதிக்கக்கூடாது. கோபத்துக்கு இடமே கொடுக்கக்கூடாது. ஒருவர் சொல்வதை இன்னொருவர் முழுவதாகக் கேட்டுவிட்டு மேற்கொண்டு பேசவேண்டும். உணர்வுப் பரிமாற்றங்கள் நிகழும்போது, நெகிழ்ச்சியும் மகிழ்ச்சியும் ஏற்படும். ஒருவர் மற்றவரின் வார்த்தைகளுக்கும் உணர்வுகளுக்கும் மரியாதை கொடுக்க வேண்டும். மரியாதை பரிணமிக்கும் போது அன்பு பரிமளிக்கும். இவை நிகழ தம்பதியர் இருவரும் போதியநேரத்தை ஒதுக்கிக் கொண்டு பேசவேண்டும். வீடு என்பது அமைதியான அழகான, ஆனந்தமான இடமாக மாற தம்பதியர் இருவரும் சேர்ந்து செயல் பட வேண்டும்.

ஒத்துவராத விஷயத்தையே பேசிக்கொண்டு இருந்தால் மனஸ்தாபம் வரலாம். ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டு விட்டுக்கொடுத்தால் நிச்சயம் நடைமுறைக்கு ஏற்றாற்போல் ஒரு தீர்வு காணமுடியும். இப்போதைய பிரச்னையே எடுத்துக் கொள்ளுங்கள். வருணின் எதிர்பார்ப்பு என்ன... அவனுடைய அம்மா, அப்பாமீது விஜயா அக்கறை காட்டவேண்டும், ஆதரவாக இருக்கவேண்டும். விஜயா என்ன சொல்கிறாள் : 'வருணின் பெற்றோருடன் சேர்ந்திருக்க முடியாது. ஏனென்றால், அவர்களின் எதிர்பார்ப்புகள் அவளது இயல்பான சுதந்தர வாழ்க்கையைப் பாதிக்கும்.' இரண்டுக்குமான தீர்வு இப்படி எடுக்கமுடியுமா என்று பாருங்கள். நீங்களும் வருணின் பெற்றோரும் அக்கம்பக்கத்தில் இரண்டு தனிவீடு எடுத்துத் தங்கிக் கொள்ளுங்கள். பெற்றோரின் ஆரோக்கியம், தேவைகள்

முதலியவற்றை அடிக்கடி போய்க் கவனித்துக் கொள்ளுங்கள். ஆனால், தனித்தனியாகக் குடித்தனம் நடத்துங்கள். சாப்பிட்ட நேரம் போக, அவர்கள் குழந்தையைக் கவனித்துக் கொள்ளட்டும். டிஃபன், காபி, இனிப்பு, காரம் என்று பிடித்ததை இயன்ற போதெல்லாம் விஜயா செய்து தரட்டும். காலையிலும் மாலையிலும் அவர்களைப் பார்த்துக்கொள். பெற்றோர் எங்காவது கோயில், குளம் என்று போக ஆசைப்படுகிறார்களா... சனி ஞாயிறுகளில் அழைத்துக் கொண்டு போ. உன் மனைவியும் குழந்தைகளும் பீச், பார்க் என்று போக ஆசைப்படுகிறார்களா... இன்னொரு நாளில் அவர்களை அழைத்துச் செல். குடும்பத்தின் முக்கிய முடிவுகளில் பெற்றோரும் கலந்து கொள்ள வாய்ப்புக் கொடு. ஒத்துவரக்கூடிய ஆலோசனைகளை ஏற்றுக்கொள். அவர்கள் சந்தோஷப்படுவார்கள். நடைமுறைக்கு ஒத்துவாத ஆலோசனையாக இருந்தால் உடனே மறுப்பு சொல்லாமல், ஓரிரு நாட்கள் கழித்து அவர்களுக்குப் புரியும் படி, உங்கள் தரப்பு அணுகுமுறையை எடுத்துச் சொல்லுங்கள்' - விஜய் தெளிவாக நிதானமாக இருவருக்கும் புரியவைத்தான்.

'விஜய் சார்! நீங்கள் சொல்லும் யோசனை நன்றாகத்தான் இருக் கிறது. ஆனால், தனித்தனியாக வசித்தால் சமூகம் தவறாகச் சொல்லாதா...' - என்று வருண் கேட்டான்.

'இதோ பார் வருண்... இந்த உலகம் என்ன சொல்லும் என்று யோசிக்காதே. உங்க ரெண்டு பேருக்கும் இதுல ஒரே கருத்து இருக்கணும். அதுதான் முக்கியம். எனக்கு இத விட வேற ஏதாவது நல்ல மாற்று வழி இருக்கற மாதிரி தோணல. நீ விரும்பற மாதிரி பெற்றோரை பக்கத்துல இருந்து பாத்துக்க வும் முடியும். விஜயா விரும்பற மாதிரித் தனிக்குடித்தன மாகவும் இருக்க முடியும். வேற எதையும் யோசிக்காதே. இந்த ஆலோசனைய நடைமுறைப்படுத்தத் தொடங்கிவிடு வருண்' - விஜய் உற்சாகப்படுத்தினான்.

'வருண்... உங்க அப்பா, அம்மாவையும் வீட்டுல தனியா சும்மா உட்கார வைக்காதே. தனிமையும் சோம்பலும் சேர்ந்தா மனட் கண்டதை யோசிக்கும். கோயில், கதாகாலட்சேபம், பாட்டு, கச்சேரின்னு போயிட்டு வரச் சொல்லு. வீட்டு வேலைக்கு ஆளை நியமிச்சுக் கொடு. பிடிச்ச விஷயத்தைத் தொடர்ந்து செய்ய வை. அவங்க முகத்துல எப்பவும் சிரிப்பு இருக்கணும். அதுதான் முக்கியம்' என்று சொல்லி விஜய் விடைபெற்றான்.

தம்பதியர் இருவரும் விஜயின் அறிவுரையையும் ஆலோசனை யையும் நிதானமாக யோசித்தார்கள். தனது யோசனை எளிதில் நடைமுறைப்படுத்தும்படி இருப்பதால் இருவரும் ஏற்றுக் கொள்வார்கள் என்பது விஜயின் அசைக்க முடியாத நம்பிக்கை .

என்ன செய்தாலும் மாமியாரால் மருமகளுக்கு அம்மாவாக முடியாது. மருமகளால் மாமியாருக்குப் பெண்ணாக முடியாது' என்ற பேச்சுகளுக்கெல்லாம் முற்றுப்புள்ளி வைக்க விரும்பி னான் வருண். விஜய் கூறிய யோசனையை நடைமுறைப் படுத்தும் முனைப்புகளில் வருண் மும்முரமானான். தன் பெற்றோருக்கு என்னென்ன செய்ய வேண்டும் என்று பட்டிய லிட்டான். அதைப்போலவே தன் பணி மாற்றத்துக்கும் விஜயா வுக்குத் தனிக்குடித்தனம் நடத்தத் தேவையானவற்றுக்கும் ஏற்பாடு செய்யலானான். விஜயாவின் உணர்வுகளுக்கும் மரியாதை கொடுக்கலானான். விஜயா எதைச் சொன்னாலும் குற்றம் குறை கண்டுகொண்டு வந்த வருண், இப்போதெல்லாம் தன்னிடம் உள்ள குறைகளை இனம் கண்டு கொண்டான். அதற்கான சரியான நடவடிக்கைகளை முடுக்கிவிட ஆரம்பித் தான். அம்மா... மனைவி எனத் தன் வாழ்க்கையின் முக்கிய அங்கங்களான இரு பெண்மணிகளின் இடையே ஒரு பாலத்தை அமைக்க இரவு பகலாக முனைந்து வந்தான். எந்தப் பெரிய மனிதனாலும் மனைவி-மாமியார் இடையே நல்லிணக்கத்தை ஏற்படுத்தவே முடியாது என்று சொல்வதில் அர்த்தமே இல்லை. அலுவலகத்தில் இரண்டு பணியாளர்களுக்கு இடையே எற்படும் சச்சரவுகளை எவ்வளவு அழகாகத் தீர்த்து வைக்க முடிகிறது. உண்மையில் அது பெரிய சாதனையே இல்லை. குடும்பத்தில் இரு பெண்களுக்கிடையே இருக்கும் பிரச்னையைத் தீர்ப்பது தான் மிகப் பெரிய சாதனை' என்று மனத்துக்குள் நினைத்துக் கொண்டான்.

வருண் தன் வீட்டுக்கு அருகே வேறொரு வீடு பார்த்துப் பெற்றோரை அதில் குடியமர்த்தினான். விஜயா மனப்பூர்வமாகச் சம்மதித்தாள். வருணின் பெற்றோரும் பிள்ளை - மருமகள் - பேரனோடு இருக்கப்போவதை நினைத்து மிகவும் சந்தோஷப் பட்டார்கள். விஜயாவின் தனிக்குடித்தன சுதந்தரத்துக்கு அவர்கள் குறுக்கீடு செய்யவில்லை. வருணின் பெற்றோர் பேரனோடும் பிள்ளையோடும் ஒரே வீட்டில் இருப்பதைப் போன்று சந்தோஷப்பட்டார்கள். குடும்பத்துக்குத் தூண் போல

விஜயா செயல்பட ஆரம்பித்தாள். அவர்கள் மீது அக்கறை காட்டினாள். வருணும் விஜயாவின் பெற்றோர்கள் மீது அன்பும் ஆதரவும் காட்ட ஆரம்பித்தான். குடும்பச் சிக்கல்கள் நல்ல விதமாகத் தீர்ந்ததும் அலுவலகத்தில் புத்துணர்வோடும் புதுப் பொலிவோடும் வருண் செயல்பட ஆரம்பித்தான். தொட்ட தெல்லாம் துலங்கின. அவனுள் முடங்கி இருந்த ஆற்றல், பன்மடங்கு வேகத்தோடு வெளிப்பட்டது. இதுவரை இல்லாத தெளிவோடு வெற்றிக் கனிகளைத் தட்டிப் பறித்தான்.

**படிப்பினைகள்:**

- தம்பதியர் ஒருவர் மற்றவருடைய பெற்றோரிடம் பரிவோடும் பண்போடும் பழகுகையில் அவர் களிடையேயான பரஸ்பர பாசமும் மரியாதையும் அதிகரிக்கும்.
- தனிக்குடும்பமா... கூட்டுக்குடும்பமா? என்பதை வெளிப்படையாகப் பேசி முடிவெடுங்கள். முடி வெடுத்த பிறகு கூட்டு முயற்சியாக அதை நடைமுறைப்படுத்த முயற்சி செய்யுங்கள். எந்த உறவிலும் கருத்து வேறுபாடு இல்லாமல் இருக் காது: ஆனால், அது குடும்பத்தில் பிளவு ஏற்படுத்தி விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். பரஸ்பரம் விட்டுக்கொடுத்தலும் மதித்து நடப்பதும்தான் இதற்கான வழிமுறைகள்.
- வாழ்க்கைத் துணைவரை உங்கள் பெற்றோருடன் இசைந்து போகும்படி வலுக்கட்டாயப்படுத் தினால் விரிசல் பெரிதாகத்தான் செய்யும். விவாகம் விவகாரமாகும். மல்யுத்தக் களத்தில் இருவரையும் நேராக மோதவிட்டு, இருவருக் குமே வெற்றி கிடைக்கவேண்டுமென்று நினைப் பதுபோல் ஆகிவிடும்.
- உங்களை மற்றவர்கள் புரிந்து கொள்வதைவிட முதலில் நீங்கள் மற்றவர்களைப் புரிந்து கொள்ள வேண்டும். உறவுகள் பலமாக சந்தோஷமாக இருக்க இதுவே மிகவும் அவசியம்.

- தொழில் வாழ்க்கையின் வெற்றிக்காகக் குடும்ப நலனைப் பணயம் வைக்கக்கூடாது. குடும்ப வாழ்க்கை, தொழில் வாழ்க்கை இரண்டிலும் பிற ருடைய மனத்தைப் புரிந்துகொண்டு பொறுப்பு களைப் பகிர்ந்து கொண்டு நடந்து கொள்ளுங்கள்.
- குடும்ப வாழ்க்கை - தொழில் வாழ்க்கை இரண்டுக் கும் நடுவில் ஒரு சமச்சீரான நிலையை உருவாக்கிக் கொள்ள வேண்டும். வெற்றிகரமான வாழ்க்கைக்கு அதுவே அடித்தளம்.

திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுவதாக இருக்கலாம். ஆனால், பரஸ்பர அன்பாலும் மரியாதையாலும் பூமியில்தான் அது வாழப்படுகிறது.

# 13

## போட்டியிடாதீர்... பூர்த்தி செய்யுங்கள்!

வினோத்தும் வினயாவும் கல்லூரியில் இருந்தே நண்பர்கள். கலை-கல்விப் போட்டிகள் எதுவானாலும் இருவருமே நேருக்கு நேராக மோதிக் கொள்வார்கள். ஒருவர் மற்றவரின் கலை, கல்வி ஞானத்தைப் பாராட்டிக் கொள்வர். நாளாக நாளாக ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டு, காதலிக்க ஆரம்பித்தனர். கல்லூரிப் படிப்பு முடிந்ததும் அவரவர் விருப்பப்படி மேற்படிப்பு படித்தனர். சில வருடங்களுக்குப் பின் திருமணம் நடந்தது.

முதல் குழந்தை பிறந்த போது வினயா நீண்ட கால விடுப்பு எடுத்துக் கொண்டாள். இரண்டாம் குழந்தை பிறந்தபோது, வினயாவுக்கு பணியைத் துறக்க வேண்டி வந்தது. சில வருடங்கள் கழித்து வினோத், சவால் மிக்க வேறொரு பணியில் சேர்ந்தான். நினைத்தபடி, பணி அமையவில்லை. முன்னுக்கு வர வாய்ப்பு கிடைக்கவில்லை. முன்னால் செய்த பணியிலேயே உயர் பதவி கிடைத்திருக்குமே. வேலையை விட்டது தவறோ என எண்ணத் தொடங்கினான். அப்போது தான் வினயா, மீண்டும் வேலைக்குப் போக விரும்புவதாகச் சொன்னாள்.

எடுத்த எடுப்பில் வினோத் தயங்கினான். ஆனால், வீட்டு பொறுப் பையும் அலுவலகப் பொறுப்பையும் சரியாக நிர்வகிப்பேன்... கவலை வேண்டாம் என்ற வாக்குறுதியை வினயா கொடுத்தாள். வினோத், வினயாவின் வேண்டுகோளை ஏற்றான். வினோத் வினயாவுக்கு வேண்டிய ஆதரவுகளையும் உதவிகளையும்

செய்வான். வீட்டு வேலைகளைப் பகிர்ந்து கொள்வான் என்று இரு வரிடையேயும் கையொப்பம் இல்லா ஓர் ஒப்பந்தம் உருவானது.

வினயாவுக்கு அடித்தது யோகம். நல்ல நிறுவனத்தில் பணியும் கிடைத்து, மளமளவென்று முன்னுக்கு வர ஆரம்பித்தாள். அவளின் பணி உயர்வின் காரணமாக, வினோத்துக்கு வீட்டு வேலைகளில் கூடுதல் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டி வந்தது. ஒரு நாள் அலுவலகத்திலிருந்து சற்று விரைவாகச் செல்ல அனுமதிப் பெற்று வினோத் புறப்பட்டுக் கொண்டிருந் தான். அப்போது, வினயா பணி நிமித்தமாக வெளியூர் சென்றிருப் பதால், குழந்தையைப் பார்த்துக் கொள்ளத்தான் செல்வதாக அலுவலக நண்பன் வரதனிடம் கூறினான்.

'இதை அனுமதித்தால், இன்னும் சில நாட்களில் 'சேலை அணியா இல்லத்தரசி' ஆகிவிடுவாய். பார்த்துக்கொள்' என்று வரதன் உசுப்பிவிட்டான்.

'அப்படி ஆவதில் தவறு ஒன்றும் இல்லையே. அதுவும் நம் பொறுப்பு தானே' - வினோத் சமாளித்தான்.

'சொல்வதைப் புரிஞ்சிக்கோ. இப்படி இடம் கொடுத்துக் கொண்டே போனால், மனைவியிடம் மதிப்பு இருக்காது. சர்வாதிகாரம் செய்ய ஆரம்பிப்பாள். சமுதாயம் உன்னை 'பொண்டாட்டி தாசன்' என்று கேலி செய்யும். இவ்வளவு ஏன். உன் குழந்தைகள் கூட உன்னை மதிக்காமல் போய்விடுவார்கள்' - வரதன் வேட்டு வைத்துப் பேசினான்.

'அம்மாவா அப்பாவா... யார் வெற்றி பெறுகிறார்கள் என்றெல் லாம் பார்த்துக் குழந்தைகள் மரியாதை செய்வதில்லை. சொல்லப் போனால், பெற்றோர் தங்களுக்குள் மரியாதை காட்டிக் கொள் வதைப் பார்த்துக் குழந்தைகள் பெருமைப்படவே செய்வார்கள். வினயாவின் வெற்றியைக் கண்டு, நான் பெருமிதப்படுகிறேன். அவள் மீது உள்ள மரியாதை எனக்குக் கூடுகிறது. இதனால் என் மனைவியோ என் குழந்தையோ ஏன் என்னை அவமரியாதை செய்யப் போகிறார்கள். அப்பாவோ அம்மாவோ யாராவது ஒருவர் எப்போதும் அருகில் இருந்து அன்பு காட்டினாலே போதும் எனக் குழந்தை சந்தோஷப்படும்.

சமுதாயம் என்னை எவ்வாறு வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளட்டும். எனக்குக் கவலை இல்லை. இல்லறத்தை இனிதாக

நடத்தி, ஒரே குடும்பமாகச் செயல்படுவது, ஒருவர் மற்றவருக்கு மரியாதை கொடுத்து நடந்து கொள்வது.. இவையெல்லாம் வீட்டிலும் பணிக்களத்திலும் சந்தோஷத்தைத் தருகின்றன. திருமணமானபோதே ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டோம். இருவரில் ஒருவர் தொழில் வாழ்க்கையில் முழு மூச்சுடன் ஈடுபட வேண்டும். அப்போதுதான் வசதியான வாழ்க்கை வாழ முடியும். யாருக்குத் தொழில் வாழ்க்கை வெற்றிகள் விரைவாகக் கிடைத்தாலும் மற்றவர் வீட்டுப் பணிகளை நன்றாகக் கவனித்துக் கொள்ள வேண்டும். அவருடைய தொழில் வாழ்க்கை வெற்றிகள் மெதுவாக இருந்தால் போதும்.

எங்கள் வாழ்க்கையில் அவளுக்கு விரைவாக முன்னுக்கு வர வாய்ப்புகள் கிடைக்கின்றன. அதை அவள் நன்கு பயன்படுத்திக் கொள்கிறாள். எனவே, வீட்டில் இதனால் உருவாகும் வெற்றிடத்தை நிறைவு செய்கிறேன். இதில் என்ன தவறு இருக்கிறது' - வினோத் தயக்கம் சிறிதும் இன்றி பதில் அளித்தான்.

'என்ன சொல்கிறாய்? உன் மனைவி என்ன வேணுமானாலும் வெற்றி பெறட்டும்... அதை உன்னோட வெற்றி என்று யார் சொல்வார்கள்? உன் வெற்றி என்று சொல்ல அதில் என்ன இருக்கு?' வரதன் வார்த்தையை வளர்த்தான்.

'வெற்றி என்பது ஒவ்வொருவர் பார்வைக்கும் ஒவ்வொரு விதமாக இருக்கும். குடும்ப நலனைக் கருதி தம்பதியர் இருவரும் ஒருவர் மற்றவருக்கு உறுதுணையாக நின்று, ஒருவர் மற்றவரின் குறை நிறைக்கு ஈடு கொடுக்க வேண்டும். நல்லதொரு குடும்பம் பல்கலைக்கழகம்.இதில் யாருக்கு வெற்றி என்று பார்ப்பதை விட, மகிழ்ச்சியான வெற்றிகரமான வாழ்க்கை உருவாகிறதா என்று பார்ப்பதுதான் முக்கியம்' - வினோத் தன் நிலைப்பாட்டில் தெளிவாக இருந்தான்.

'வினோத்! உன் மனைவிக்குப் பின்பாட்டு பாடறதுல உனக்குத் தாழ்வு மனப்பான்மையே இல்லையா... மன வருத்தம் இல்லையா... உன்னோட சமூக அந்தஸ்து காணாம போயிடும்னு தோணலயா' - வரதன் படபடத்தான்.

'இதோ பார்! யாரால் தன்னைப் பத்தி நல்லவிதமாக நெனைக்க முடியலையோ, மத்தவர்களின் வளர்ச்சியை ஏற்க முடியலையோ அவர்களுக்குத்தான் நல்ல மரியாதை கிடைக்காமல் போகும்.

இவ்வளவு ஏன்... அலுவலகத்தில் நம்முடன் வேலை செய்கிறவர்களுக்குப் பதவி உயர்வு கிடைக்கும்போது அவரைப் பாராட்டி ஏற்றுக் கொள்கிறோம் இல்லையா... நமக்கு முன்னேற்றம் கிடைக்கும்வரைப் பொறுமையாக வேலை செய்வது இல்லயா... அதை டீம் ஸ்பிரிட், கூட்டுமுயற்சி என்று சொல்கிறோம். ஆனால், சொந்த வாழ்க்கையில் அதேபோல் நடந்து கொண்டால் ஒப்புக் கொள்ளமாட்டீர்களா?' - வினோத விளாசினான்.

வினோத் மேலும் தொடர்ந்தான்: 'என் மனைவியின் முன்னேற்றத்தை நேர்மறையாக எடுத்துக் கொள்கிறேன். அவளும் குழந்தையைப் பராமரிக்கும் என் பணியைப் பாராட்டத் தவறுவதே இல்லை. இதற்காக, 'எதிர்காலமே இல்லாத அலுவலகத்தில் வேலை பார்த்துக் கொண்டிருக்கிறேன்' என்பது அர்த்தம் இல்லை. என் பணியில் எனக்கு முன்னேற்றம் சற்று தாமதமாகக் கிடைக்கலாம். இருவரும் எப்போது ஒருவர் மற்றவரின் முன்னேற்றத்தையும் மனப்பக்குவத்தையும் புரிந்து கொள்கிறார்களோ, முழுமையாக மதிக்கிறார்களோ அப்போது ஒருவரின் சமூக அந்தஸ்து குறைவதற்கு எங்கே வாய்ப்பு உள்ளது?

அம்மா, வேலைக்குப் போயிருக்கும்போது குழந்தைகளுடன் அப்பா இருப்பதால் குழந்தைக்குக் கிடைக்கும் பாதுகாப்பைவிட மனைவிக்குக் கிடைக்கும் மனத்தெம்பு மிகவும் அதிகமாக இருக்கும். இதனால் வேலையில் இன்னும் ஆர்வத்துடன் தீவிரமாக ஈடுபட்டு வெற்றி பெறுவாள். இப்போதும் வீட்டு வேலைகளில் அவளால் முடிந்த அனைத்தையும் செய்து கொடுக்கத்தான் செய்கிறாள். அவளுடைய வாழ்க்கைப் பயணத்தில் நான் உறு துணையாக இருக்கிறேன் என்ற மனநிறைவுதான் அவளை வெகு உற்சாகமாகச் செயல்பட வைக்கிறது' - வினோத் சொன்னான்.

'தாம்பத்திய வாழ்க்கை மகிழ்ச்சிகரமாக இருக்க ஒரு விஷயத்தை நன்றாக உணரவேண்டும். திருமணங்கள் வேண்டுமானால் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படலாம். ஆனால், அதற்கான அஸ்திவாரம் தம்பதியர் காட்டும் பரஸ்பர அன்பிலும் மதிப்பிலும் தான் இருக்கிறது. தம்பதியர் இருவரிடையும் அன்பும் மதிப்பும் வளர்கையில், மட்டற்ற மகிழ்ச்சியும் பெருகுகிறது' என்று சொல்லி முடித்தான் வினோத்.

வரதன் வினோத்துக்கு நன்றி தெரிவித்தான். வாத விவாதமாகத் தொடங்கிய பேச்சு சுவாரசியமாகி வாழ்க்கைக்கு வழிகாட்டும்

ஒரு விளக்கத்தைத் தந்ததாகக் கூறினான். வேலைக்குப் போகும் தம்பதியரில் ஒருவருக்கு ஒளிமயமான முன்னேற்றம் உடனே தெரியவில்லை என்றாலும் பரஸ்பரம் நிலைமையைப் புரிந்து கொண்டு தாம்பத்தியத்தை சந்தோஷமாக முன்னெடுத்துச் செல்வது மிகவும் முக்கியம்.

தாம்பத்தியம், ஜோடியாக ஆடப்படும் ஒரு விளையாட்டு. பெறப்படும் வெற்றி, தோல்வி இருவருக்குமே பொதுவானது. இதை விளக்கியபடி, வினோத் புன்முறுவல் தவழ அலுவலகத்திலிருந்து விடைபெற்றான்.

**படிப்பினைகள்:**

- தம்பதியர் ஒருவர் மற்றவரின் நிறைகுறைக்கு முழு மனத்துடன் ஈடு கொடுப்பதே, மகிழ்ச்சி மிக்க இல்லறத்தை உருவாக்கும்.
- தொழில் வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள தம்பதியருக் கிடையே போட்டி மனப்பான்மை இருக்கவே கூடாது. ஒருவர் மற்றவருக்குப் பக்க பலமாகச் செயல்பட வேண்டும்.
- வாழ்க்கைத் துணையை மதித்து நடத்தினால் அவர் அமைதியான வாழ்க்கை வாழ்வார். துணைவரை அவருடைய விருப்பு வெறுப்புகளுடன் ஏற்றுக் கொண்டால் நீங்கள் நிம்மதியாக வாழ்வீர்கள்..
- வேலை செய்யும் தம்பதியருள் கணவன், வீட்டு வேலைகளையும் தன்னுடைய பொறுப்பாகவே கருதிச் செய்தால், மனைவி வீட்டிலும் அலுவலகத் திலும் உள்ள பணிகளை உற்சாகத்துடனும் ஈடு பாட்டோடும் செயல்படுவாள்.

வாழ்க்கைத் துணைவருடன் போட்டி போட்டால் ஒருவர் மட்டுமே ஜெயிக்க முடியும். அவருக்கு ஒத்துழைப்பு கொடுத்தால் ஒட்டு மொத்தக் குடும்பமும் சந்தோஷமும் ஒத்திசைவுமாக வெற்றி பெறும்.

# 14

## ஏற்றுக் கொள்ளுதல் + மாற்றிக் கொள்ளுதல் = ஒத்திசைவு

விஷால் மிகவும் அறிவுள்ள திறமையுள்ள பணியாளன். மிகவும் வேகமாகத் தன் பணிவாழ்வில் முன்னேறி வந்தான். இளவயதிலேயே பற்பல வெற்றி மாலைகள் விழ ஆரம்பித்ததால், சிறிது காலத்திலேயே அலுப்புத் தட்ட ஆரம்பித்தது. அவனுடைய குழுவினரையும் சக பணியாளர்களையும் ஏன் அவனுடைய துறைத்தலைவரை விடவும் அவன் ஓர் அடி முன்னால் இருப்பதாக நினைத்தான். 15 ஆண்டு அனுபவம் வாய்ந்த அவன், பல நிறுவனங்களில் பணியாற்றியுள்ளான். பிறருடன் வேலை செய்த போதும் பிறருக்காக வேலை செய்த போதும் சக ஊழியர்களுடன் ஒத்துப் போக முடியாமல்தான் வேலையை விட்டு விலகியிருக்கிறான். கடைசியாகப் பணியாற்றி வந்த நிறுவனத்தில் தன் துறைத் தலைவரோடு கடுமையான கருத்து வேறுபாடு ஏற்பட்டதால் விலகியிருந்தான்.

பொறுப்பு, சம்பளம் என்ற இரு வகையிலும் ஆறு மாதகாலமாக எதிர்பார்த்தபடியான வேலை அவனுக்குக் கிடைக்கவில்லை. கடைசியாகப் பார்த்த வேலைக்குத் தகுந்த முறையில் புதிய வாய்ப்பு வரவில்லை என்று, வருகிற பணி வாய்ப்புகள் அனைத்தையும் புறக்கணித்தான்.

பணியாளர்களோடு அவன் கொண்டிருந்த வில்லங்கமான அணுகுமுறைகள் அவன் விரும்பும் வேலை கிடைக்க இடையூறாக இருந்தன. இது அவனுடைய தனிப்பட்ட இல்லற வாழ்க்கையில் தேக்கத்தையும் ஏற்படுத்தியது.

வருண், விஷாலை நன்கு அறிவான். அவனுடைய கல்லூரி நண்பன். அவனுக்கு உதவ வேண்டும் என்று தீர்மானித்தான். அவனைத் தனியாகச் சந்தித்தான். மலரும் நினைவுகளாகக் கல்லூரி அனுபவங்களைப் பகிர்ந்து கொண்டவுடன், இது போன்ற சவால்கள் மிக்க காலகட்டங்கள் எல்லோருடைய வாழ்க்கையிலும் ஏற்படுவது இயற்கை என்று பீடிகையோடு பேச ஆரம்பித்தான். இத்தகைய சவால்களைச் சமாளிக்கும் விதத்தைக் கொண்டுதான் மற்றவர் பார்வையில் கணிக்கப்படுகிறோம். நடந்ததும் நன்று; நடப்பதும் நன்று: நடக்க இருப்பதும் நன்றே என்ற கீதாசாரத்தை மேற்கோள் காட்டினான். வந்த பாதையைப் பார்க்காதே! விசனப்படாதே! உருவாகியுள்ள சூழ்நிலையை ஆராய்ந்து செய்யவேண்டியவற்றை உடனடியாகச் செயல்படுத்து' - வருணின் பேச்சில் உத்வேகம் இருந்தது.

விஷால், வருணை வைத்த விழி வாங்காமல் பார்த்தான். விஷால் விழிகளில் வியப்பின் ஊர்வலம். மௌனத்தை விலக்கி விஷால் பேசினான் :'வருண்! நாம் இருவருமே ஒன்றாகப் படித்தவர்கள். உன்னைவிடக் கூடுதலாக மேலாண்மைத்துறையில் முதுகலைப் பட்டமும் பெற்றேன். 15 ஆண்டுகளாக இருவரும் பணியாற்றி வருகிறோம். முன்னேற்றமும் பதவி உயர்வுகளும் உனக்கு மட்டும் எப்படித் தங்கு தடையின்றிக் கிடைக்கின்றன?'

விஷாலின் பிரச்னையைப் புரிந்துகொண்ட வருண் கனிவுடன் பதில் சொன்னான் : 'சவால்களைச் சந்திக்காமலே முன்னேறியதாகவோ, அமைதி மட்டுமே என்னிடம் குடி கொண்டிருந்தாகவோ என்னால் சொல்ல முடியாது. எதையும் உன்னிடம் மறைத்துப் பேச விரும்பவில்லை. எல்லா பிரச்னைகளுக்கும் நானும் ஆளானவன் தான். மேடு பள்ளங்கள் வீதியில் மட்டுமல்ல.:. எல்லார் வாழ்க்கையிலும் ஏராளம். பணிபுரியும் ஆண்டுகளில் 25% காலகட்டம் மட்டுமே நம் உச்ச பட்சத் திறனுடன் செயல்படுகிறோம். விதி விலக்காகச் சிலருக்கு வேண்டுமானால், அதற்கும் மேலான கால கட்டம் அமையலாம். மீதியுள்ள 75 சதவிதப் பணி வாழ்க்கையில் உணர்ச்சிக் கொந்தளிப்புகளுக்கு அணை போட்டு, அமைதியாகச் செயல்பட்டால் ஒழிய, அந்த 25% உச்சத்தை நம்மால் எட்ட முடியாது. இந்த உண்மையை நன்கு புரிந்துகொண்டு செயல்பட்டேன். இதுதான் என் அணுகுமுறை. இதை நீ ரகசியம் என்றாலும் சரி; நிதர்சனம் என்றாலும் சரி. இதுவே வெட்ட வெளிச்சமான உண்மை. அதுசரி... கடைசியாகப் பணி புரிந்த நிறுவனத்தில்

ராஜினாமா செய்து நீ வெளியே வரும் அளவுக்கு என்ன நிகழ்ந்தது? அதுவும் வேறு எந்த வேலை வாய்ப்பும் கையில் இல்லாதபோது நீ அப்படிச் செயல்படலாமா? குரங்கு கூட ஒரு மரத்தின் இன்னொரு கிளையைப் பிடித்துக் கொண்ட பிறகுதான், தான் பிடித்துக் கொண்டுள்ள கிளையை விடும். இது நமக்கு உணர்த்தும் பாடத்தை மனதில் கொண்டு செயல்பட்டிருக்க வேண்டாமா விஷால்' - வருணின் குரலில் அக்கறையும் அனுதாபமும் தெரிந்ததை விஷால் உணர்ந்தான்.

விஷால் பேச ஆரம்பித்தான். 'வருண்... என்னால் நன்கு வேலை செய்ய முடியும், என் திறமை முழுவதையும் பணியில் காண்பிப்பேன். எனக்குக் கீழே பணிபுரியும் பணியாளர்களிடமும் சகபணியாளர்களிடமும் என் துறைத் தலைவரிடமும் இதையே எதிர் பார்த்தேன். நான் எதிர்பார்க்கும் அளவுக்கு மற்றவர்கள் செயல்படவில்லை என்கிறபோது என்னால் அவர்களோடு வேலை செய்ய முடியவில்லை. எல்லோரும் ஒன்றுபட்டுத் தனித் திறமையுடன் செயல்பட்டால், நிறுவனம் குறித்துள்ள இலக்கை எட்டுவது எளிதல்லவா? என் பார்வையில் இது தவறு என்று எனக்குத் தோன்றவில்லை! அவர்கள் முயற்சி செய்யவில்லை. அவர்களோடு பணி செய்ய எனக்குத் தோன்றவில்லை. அதனால்தான் ராஜினாமா செய்தேன். நான் விரும்பும்படியான நபர்களைத் தேர்ந்தெடுத்துத் தனியாக வியாபாரம் செய்யத் தீர்மானித்துவிட்டேன். அதற்கான நல்ல வேளைதான் இது என்று எனக்குத் தோன்றுகிறது.'

வருண் பேசினான்: 'விஷால்! நீயும் எத்தனைமுறைதான் இப்படி வேலையை விட்டுக் கொண்டிருப்பாய். சரி, ஒருவேளை நீயாகத் தொடங்கும் வேலையிலும் இவ்விதமான பிரச்னை வராது என்று எப்படிச் சொல்கிறாய். ஏதோ நீ சாதாரணமாகச் சொல்லிவிட்டாய். நிறுவனத்தின் சொந்தக்காரன் ஆகிவிட்டால், நிறுவனத்தின் உள்ளே உள்ள மனிதர்களைவிட வெளியாள்களைச் சமாளிப்பது மிகக் கடினம். ஆகையால் பணி செய்வது தனக்காகவா, மற்றவருக்காகவா என்பது அல்ல பிரச்னை. சுற்றியுள்ள சூழ்நிலைக்கு உன்னை நீ எப்படி மாற்றிக் கொள்கிறாய் என்பதுதான் முக்கியம். உன்னுடன் பணிபுரிபவர்களுக்கு மரியாதை காட்டு. அவர்கள் பெருமிதத்தோடு பணி செய்வார்கள். மன நிறைவும் மன அமைதியும் அடைவார்கள். யாருக்காக நீ உழைக்கிறாயோ, அவர்களிடம் அன்பையும் ஆதரவையும் காட்டு. நீயும் அமைதியாகப் பணி செய்யமுடியும்' - வருண், விஷாலின் அகக்கண்ணின் திரையை விலக்கி அவனைச் சிந்திக்க வைத்தான்.

'வருண், என்ன சொல்கிறாய்? உடன் பணிபுரிபவர் உத்வேகம் இல்லாமல் வேலை செய்தால் எனக்குக் கோபம் வருகிறது. சராசரியாகக்கூடச் செயல்படத் தெரியாதவர்களை வைத்துக் கொண்டு வேலை செய்தால் நமது பெயர் கெடுவதோடு நாமும் அவர்களில் ஒருவர் ஆகிவிடுவோம். இதனால்தான் அவர்கள் மாற வேண்டும் என்று எதிர்பார்க்கிறேன். இதிலென்ன தவறு? அதற்காகச் சில சமயம் அதிகமாகக் கோபப்பட்டிருப்பேன். பிறர் மனதை நோகடித்திருப்பேன். அதுக்கு நான் என்ன செய்ய முடியும்' - விஷால் சொல்லி முடித்தான்.

வருண் தொடர்ந்தான் : ' இதோ பார் விஷால். உயர் பதவிக்கு வருபவர்களுக்கு இருக்க வேண்டிய முதல் குணமே பிறருடைய திறமையை மதிப்பதுதான். இன்னொரு விஷயம் தெரிந்து கொள்... ஒருவர் முன்னுக்கு வரவேண்டும் என்று தானாக நினைக்காதது வரை அவரை யாராலும் மாத்த முடியாது. ஒருவர் எப்படிப்பட்டவர்... என்னவாக அவரால் ஆக முடியும் என்பதைப் புரிந்து அதற்கேற்ப நடந்துகொள். தலைவருக்குள் இருக்கும் நிபுணத்துவத்தைவிட அவருக்குள் உள்ள மனிதத்தன்மை மதிக்கப்படவேண்டும். இதைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.'

வருண் மேலும் தொடர்ந்தான் ' நம்மைச் சுற்றி இருப்பவர்களை முன்னேற்ற நினைப்பது நல்ல சிந்தனைதான். ஆனால், நமது முன்னேற்றத்துக்காகத்தான் இவர் பாடுபடுகிறார் என்பதை அவர்கள் உணராதவரை அத்தனை முயற்சிகளும் வீணே. நினைக்கும் மாற்றம் ஒருபோதும் நிகழாது. எனவே, எளிய வழி என்ன? சிந்தித்துப் பார். நாம் நம்மை அவர்களுக்குத் தக்கபடி மாற்றிக் கொண்டுவிட்டால், அவர்களுக்கும் சந்தோஷம். நமக்கும் அமைதி கிடைக்கும். இதற்கு, அவர்களிடம் உன்னுடைய தனித்தன்மையை விட்டுக் கொடுத்துத் தாழ்ந்து போகவேண்டும்; அவர்கள் நினைத்தபடியெல்லாம் நடந்து கொள்ள வேண்டும் என்று நான் சொல்ல வரவில்லை. அவர்களோடு சேர்ந்து பணி யாற்றும் போது, நீ அவர்களின் வளர்ச்சியில் அக்கறை கொண்ட வன் என்பதை அவர்களுக்குப் புரிய வை. அது போதும்.'

விஷால் இறுதியாகச் சொன்னான் : ' சரி. சரி... நான் மாறுகிறேன். அதை எப்படிச் செயல்படுத்த? நான் இதுவரை என்னுடன் பணி புரிந்தவர்களைக் கேள்வி கேட்டே துளைத்தெடுத்திருக்கிறேன். அவர்களின் திறமையையும் அறிவையும் சந்தேகக் கண்ணோட் டத்திலேயே பார்த்திருக்கிறேன். நான் தொழில்முறை சார்ந்த

பணியாளன். நுணுக்கங்கள் அறிந்தவன். அதனால் மற்ற பணியாளர்களுக்குத் தக்கபடி மாற்றி அமைத்துக் கொள்வது எப்படி என்பதை எனக்குச் சொல்.'

விஷால் தன் அணுகுமுறையை மாற்றிக்கொள்ளத் தயாராக இருக்கிறான் என்பதை அறிந்த வருண் மகிழ்ந்தான்.

'மாற வேண்டும் என்ற நினைப்பு ஏற்பட்டதே ஒரு நல்ல ஆரம்பம். உன் திறமை என்ன என்பதை யாரும் பார்ப்பதில்லை. மற்றவரோடு இசைந்து போகக்கூடிய உன் தனித்தன்மையைத் தான் எல்லோரும் பார்க்கிறார்கள். அதுவே உன் அமைதியையும் தொழில் சார்ந்த முன்னேற்றத்தையும் நிர்ணயிக்கிறது. நீ இசைவாகப் பழகக்கூடியவன் என்பது மற்றவருக்குத் தெரிந்தவுடன், திறந்த மனத்துடன் உன்னிடம் பழகுவார்கள். அதுவே மற்றவர்களோடு நீ மேலும் சிறப்பாகப் பழக வழி காட்டும்.

விஷால்... நம்மைச் சுற்றி இருப்பவர்களை நமக்கேற்ப மாற்ற முயற்சி செய்யாமல் அவர்களுக்கேற்ப நம்மை மாற்றிக் கொள்வதே அமைதியை ஏற்படுத்தும். இதுவே சிறந்த வழி. மற்றவர்களோடு ஒட்டி உறவாடவும் நட்பை நிலை நாட்டவும் இதுவே உதவும். மாற்ற வேண்டும் என்று நீ நினைத்தவர் மாறாமல் இருக்கலாம். ஆனால், அவருடன் இன்று நீ மாறுபட்டு நடந்து கொண்டால் அதுவே அவருக்கு வியப்பாக இருக்கும். உன்னோடு இயைந்து நடந்துகொள்ள ஆரம்பித்துவிடுவார். ஏற்றுக் கொள்ளுதல், மாற்றிக் கொள்ளுதல், ஒத்திசைவுடன் இருத்தல் இம்மூன்றும் ஒன்றை அடுத்து ஒன்று, தொய்வில்லாமல் நடைபெற வேண்டும். ஒவ்வொருவரின் தனிப்பட்ட வாழ்க்கையிலும் பணிவாழ்க்கையிலும் இது நிகழ்ந்து கொண்டே இருக்கும். சக ஊழியர், வாழ்க்கைத் துணைவர், குழந்தை என்று யாராக வேண்டுமானாலும் இருக்கலாம். எல்லோருக்கும் இவ்விதி பொருந்தும்' - என்று சொன்ன வருண் மேலும் தொடர்ந்தான்.

'பணிபுரிபவர், செயல்முறை, தொழில் நுட்பம் முதலியவற்றால் தான் வெற்றிகரமான நிறுவனங்கள் உருவாகியுள்ளன. பணியாளர்களின் திறமையை அதிகரித்துச் செயல்முறையையும் தொழில்நுட்பத்தையும் மேம்படுத்தும் நிபுணர்களையே எல்லா நிறுவனத்தினரும் விரும்புவார்கள். ஒரு நிபுணருக்கு அறிவுக் கூர்மை மட்டும் இருந்தால் போதாது. பணியாளர்களை

உணர்வுபூர்வமாக ஊக்குவித்து வேலை வாங்கும் திறமையும் இருக்க வேண்டும்' - என்று வருண் தன் கருத்துகளைச் சொல்லி விடை பெற்றான்.

வருண் சொன்னவற்றை விஷால் ஏற்றுக்கொண்டான்; தனக்குக் கிடைத்த அடுத்த பணிவாய்ப்பை ஏற்றான்; வருண் சொன்ன வற்றை ஆக்கபூர்வமாகச் செயல்படுத்த முற்பட்டான்; முதல் படியாக, பணிபுரிபவர் யாராக இருந்தாலும் மதித்தான். மற்றவர்கள் மாற வேண்டும் என்று நினைக்காமல், தன்னிடம் என்ன மாற்றம் தேவை என்பதைக் கணித்துச் சுயமாக மாற ஆரம்பித்தான். இதுவரை எந்த அலுவலகத்திலும் காணாத அமைதியை விஷால் அனுபவிக்க ஆரம்பித்தான். எந்தத் துறையானாலும், அமைதி அடித்தளமாக இருந்தால், மகத்தான வளர்ச்சி கிடைத்தே தீரும்.

**படிப்பினைகள்:**

- உடன் பணிபுரிபவர்களை ஆற்றல் மிக்கவர்களாக மாற்றுவது தான் தலைவரான உங்களின் தலையாய பொறுப்பு. அதற்கு அவர்களோடு ஒத்துப்போவதற்கு ஆர்வம் கொண்டிருத்தல் அவசியம்.
- உங்களோடு பணிபுரிபவர்களை மதிப்பு மரியாதையோடு நடத்த வேண்டும்.
- பணியாளர்களின் திறமையை, இயல்பை அப்படியே ஏற்றுக் கொள்வதும், அதற்குத் தக்கபடியாக உங்களை மாற்றிக் கொள்வதும், மற்றவர்களோடு இசைந்து பழகுதலும் ஒத்திசைவான வலுவான நட்புறவை உருவாக்கும்.

மற்றவர்களை ஏற்றுக் கொள்ளுதல், உங்களை மாற்றிக் கொள்ளுதல் இவையே பிறருடன் ஒத்திசைவதற்கான வழிமுறைகள்.

# 15

## திறமையும் வெளிப்பாடும்

ராஜன் தன் கீழ் பணிபுரிபவர்கள் பற்றிய தன் மதிப்பீட்டைத் தெரியப்படுத்தினான். மதிப்பீடுகள் சிலருக்கு சந்தோஷத்தைத் தந்தன. சிலருக்கு வேதனையைத் தந்தன.

புது நிதியாண்டு தொடங்கும் போது, ஒவ்வொரு துறையின் வருட இலக்குகள் நிர்ணயிக்கப்படும். முன்பெல்லாம் நன்கு பணி புரிந்தாலும் சுமாராகப் புரிந்தாலும் ஊக்குவிப்புத் தொகை அளிக்கப்பட்டு வந்தது. ஆனால், அதுவோ இப்போது நிர்ணயிக்கப்பட்ட இலக்குகளை அடைந்ததற்குப் பிறகுதான் தரப்படுகிறது.

குறைந்த மதிப்பெண் பெற்றவர் என்றால் திறமை குறைவானவர் என்று அர்த்தமில்லை. அவர் தன் முழுத் திறமையைச் சரியான முறையில் அளித்திருக்கவில்லை என்று பொருள். நன்கு செயல் படாதவரின் ஆற்றலை வெளிக்கொணர்வதற்கான வழி முறைகளைக் கண்டறிந்து, அவர்களைத் திறம்படச் செயலாற்ற வைக்க இந்த மதிப்பீடு கை கொடுக்கிறது. இதைப்போல, ஓர் ஆண்டு நன்கு பணிபுரிந்து நல்ல பெயர் எடுத்துவிட்டால் அடுத்தடுத்த ஆண்டுகளிலும் நிர்வாகம் பாராட்டிக் கொண்டே இருக்கும் என்பது உண்மை அல்ல. ஒவ்வொரு ஆண்டும் அவரவர் உள்ஆற்றலை வெளிப்படுத்தியே ஆக வேண்டும். இதுவே இன்றைய காலத்தின் கட்டாயம்!

ராஜிக்கு மிகவும் குறைவான மதிப்பெண்களே தரப்பட்டிருந்தன. தான் கடுமையாக உழைத்தபிறகும் தனக்குச் சராசரி

மதிப்பெண்ணே கிடைத்திருப்பது குறித்து அவள் மிகவும் கவலைப்பட்டாள். ராஜி நன்றாகப் பணியாற்றியது உண்மைதான். ஆனால், நிர்வாகம் எதிர்பார்த்த பலன் கிடைத்திருக்கவில்லை என்று ராஜன் தெளிவாகக் கூறினான். ராஜனின் எந்தப் பதிலையும் ராஜி ஏற்றுக் கொள்வதாக இல்லை. தன்னைப் பற்றிய மதிப்பீட்டை மறுபரிசீலனை செய்யுமாறு மேல் முறையீடு செய்தாள்.

இப்போதெல்லாம் செயல் மதிப்பீட்டு முறை வெளிப்படையாக நடைபெறுகிறது. எனவே, அந்த நிறுவனத்தின் மனித வளத் துறைக்கு ராஜி மறுபரிசீலனைக்கான விண்ணப்பத்தோடு சென்றாள். ராஜன் மறு பரிசீலனைக்குச் சம்மதித்து, ராஜியின் குறை நிறைகளைச் சுட்டிக்காட்ட முற்பட்டான்.

நேரம் காலம் பார்க்காமல் பணி செய்த பிறகும் சராசரியான மதிப்பெண் தரப்பட்டுள்ளது தனக்கு மிகவும் வருத்தத்தையும் வேதனையையும் அளிப்பதாக எடுத்த எடுப்பில் ராஜனிடம் கூறினாள் ராஜி. தன்னுடைய நம்பிக்கையை, அந்த மதிப்பீடு ஒரேயடியாக உருக்குலைத்துவிட்டது என்றாள். ராஜன் அவளை ஊக்குவிக்கும்படி பேசினான். 'இதோ பார் ராஜி! உனக்கு ஏற்பட்டுள்ள வருத்தம் நியாயமானது. நன்றாகப் பணிபுரிந்தும் சராசரியாக மதிப்பிடப்பட்டுள்ளது உன்னைப் பொறுத்தவரையில் ஏற்கமுடியாமல் இருக்கலாம். ஒன்றை மனதில் கொள்ள வேண்டும். மதிப்பெண் குறைவாகக் கிடைத்ததால் திறமை குறைந்தவள் என்று அர்த்தமில்லை. நிர்வாகம் நிர்ணயித்திருந்த இலக்குக்கு ஏற்றாற் போல், உன் ஆற்றலை வெளிக்காட்டவில்லை என்பதை நீ உணர வேண்டும்.'

'சென்ற வருடத்தில் பல சிக்கல்கள் இருந்தன. எனக்குத் தரப்பட்ட குழுவின் திறமை மிகவும் சுமார்தான். அவர்கள் செய்யாமல் விட்ட பல வேலைகளை இரவு கண் முழித்தெல்லாம் முடித்துக் கொடுத்திருக்கிறேன்' - ராஜி தன் மனக் குமுறலை வருத்தத்துடன் சொன்னாள்.

'ராஜி! தலைமைப் பொறுப்பை ஏற்றவுடனேயே ஒன்றை நினைவில் கொள்ளவேண்டும். உன் குழு அங்கத்தினரைவிட நிர்வாகம் உன்னிடம் அதிக நம்பிக்கை வைத்துள்ளது. ஐந்து விரல்களும் ஒன்றாக இருப்பதில்லை. குழு அங்கத்தினர் சற்று ஏறக் குறையத் தான் இருப்பார்கள். அவர்களை நன்கு வழி காட்டி திட்டமிட்ட இலக்கை அடைய வைப்பதுதான் உன்

பொறுப்பு. குழுவினர் செய்ய வேண்டிய வேலையை நீ செய்யாமல் அவர்களாகவே செய்து முடிப்பதற்கு நீ முடுக்கிவிட வேண்டும். அதற்குத் தேவையான உள் ஆற்றலை அவர்களிடம் இருந்து நீ வெளிக் கொணர வேண்டும். அவர்களை வளர்த்து விட வேண்டும்' என்று ராஜன் சொன்னான்.

உடனே ராஜி பதிலளித்தாள் 'சரி. என் குழுவினர்களின் சராசரியான செயல்பாட்டினால்தான் எனக்குச் சராசரி மதிப்பெண் தரப்பட்டிருக்கிறது என்றால் என் குழுவினர்களை விடக் கீழாகப் பணிபுரிந்துள்ள மற்ற குழுக்களுக்கு என்ன மதிப்பெண்தான் தரப்போகிறீர்களோ?

ராஜன் பதிலளித்தான் : 'ராஜி! முதலில் இந்தக் குணத்தை நீ கை விடவேண்டும். ஏதோ நீதான் நன்றாக வேலை செய்வது போலவும், மற்றவர்கள் யாரும் உன் அளவுக்குச் செய்யாதது போலவும் நீ பேசுகிறாய். இது மிகவும் தவறு. பிற குழுக்களின் செயல் வெளிப்பாடு எப்படி இருந்தால் நமக்கென்ன? நம் குழுக்களின் முழு ஆற்றலை வெளியில் கொண்டு வர வேண்டியது நம் குறிக்கோளாக இருக்க வேண்டும். செயல் திறமை... அது ஒன்றே தாரக மந்திரம். இன்னொன்று சொல்லட்டுமா... உன்னுடைய 'சராசரி'யான செயல்பாடானது என் மேலதிகாரிகள் எனக்குப் போடப் போகும் மதிப்பெண்ணையும் பாதிக்கவே போகிறது. நம் இருவருடைய நல்லதுக்காகவும் சொல்கிறேன்... அடுத்த வருடமாவது நாம் நம் குழுக்களின் முழுத் திறமையை வெளிப்படுத்த வேண்டும். நிறுவனத்தின் இலக்கை அடைய நம்மால் ஆனதைச் செய்ய வேண்டும்.'

ராஜி அப்போது தான் ஒரு விஷயத்தைப் புரிந்து கொண்டாள். தன் குழுவினரின் பலவீனத்தால் தன்னுடைய மதிப்பெண் குறைந்தது. அதேபோல், அவர்களிடம் சரிவர வேலை வாங்காத தன்னுடைய பலவீனத்தால், தன் துறைத்தலைவரான ராஜனின் மதிப்பெண்ணும், குறைந்து போனது என்ற உண்மை அப்போது தான் ராஜியின் புத்திக்கு எட்டியது. ராஜி வருத்தப்பட்டாள்.

'ராஜன் சார்! தவறு எங்கு நிகழ்ந்தது என்பதை எடுத்துச் சொல்லுங்கள். நான் பிறரை விடச் சிறப்பாகப் பணிபுரியவில்லையா.. சொல்லுங்கள்!' ராஜி நிதானமாக ராஜனிடம் கேட்டாள்.

ராஜன் பதிலளித்தார் : 'பிறருடன் ஒப்புமைப்படுத்திப் பேசுவது சரியே கிடையாது. ரஜினிகாந்திடம் ஒருமுறை உங்கள் படத்

துக்குப் போட்டியாக யாருடைய படத்தை நினைத்துக் கொள்வீர்கள் என்று கேள்வி கேட்டார்கள். அவர் சொன்னார், 'நன்றாக ஓடிய என் முந்தைய படங்களையே என் புதுப் படத்துக்குப் போட்டியாக நினைத்துக் கொள்வேன். வேறு யார் படத்தையும் நினைக்க மாட்டேன்.' இது நமக்கும் பொருந்தும். ஒருவேளை மற்றவர்களின் செயற்பாடு நன்றாகவே இல்லை என்றால், நீ என்ன செய்வாய். அதை விட ஒருபடி மேலாக இருந்தால் போதும் என்று உன்னைச் சுருக்கிக் கொள்வாயா? உன் துறையில் நிபுணத்துவத்தை எட்ட வேண்டாமா? முழுத்திறமை வெளிப்பட என்ன செய்ய வேண்டுமோ அதில் கவனத்தைச் செலுத்து.'

ராஜி முதல்முதலில், குரல் உயர்த்திப் பேசியதற்கு வருந்தினாள். இனி ராஜன் சொன்னபடி நடந்து கொள்வதாகக் கூறினாள். 'இன்னும் நன்றாகச் செயல்பட என்ன என்ன செய்ய வேண்டும்? ஆலோசனை கூறுங்கள்' - என்று கேட்டாள்.

'ராஜி, சில கேள்விகளை உனக்கு நீயே கேட்டுப்பார்.

1 உன்னுடைய குழு உறுப்பினர் ஈடுபாட்டுடன் பணியாற்ற, புதுமையான அணுகுமுறையை ஏதேனும் நீ கொண்டு வந்துள்ளாயா?

2 குறைபாடுகளைப் பட்டியலிட்டுப் பேசினாய். சரி போகட்டும். ஆனால், அவற்றைச் சரி செய்வதற்கு என்ன செய்தாய்?

3 உன் தலைவரின் கட்டளைகளை விசுவாசமாக நிறைவேற்றியிருக்கிறாய்... நல்லது. உன் குழு உறுப்பினர்கள் உனக்கு விசுவாசமாக நடக்கும் வகையில் தலைமை ஏற்று வழி காட்டியிருக்கிறாயா?

உயர் பதவிகளை ஏற்கும்போது நீ தனிப்பட்ட முறையில் திறமைசாலியாக இருந்தால் மட்டும் போதாது. நிர்வாகம் எதிர்பார்க்கும் விளைவுகளை உருவாக்கிக் காட்டும் திறமை கொண்டவராகவும் இருக்க வேண்டும்.

ராஜன் தொடர்ந்தான். 'உனக்குள்ள சரியான மனோபாவத்தோடு, புதிதாகக் கற்றுக் கொண்டு, உன் திறமையை வளர்த்துக் கொள்வது மிகமுக்கியம். அப்போது தான் உன்னுடைய ஆற்றலை மெருகேற்றிக் கொள்ள முடியும்.'

நிறுவனத்தினர் ஒரு நபரைத் தேர்ந்தெடுக்கும் போது, அவர்களின் தனிப்பட்ட ஆற்றலை மட்டும் பார்ப்பதில்லை. செயல்களை

நடைமுறைப்படுத்தும் ஆற்றலையும் சேர்த்தே பார்க்கிறார்கள். ஒருவருடைய துறை சார்ந்த திறமையை மேம்படுத்திக்கொண்டால் மட்டும் போதாது... பல்வேறு பொறுப்புகளை நிர்வகிக்கும் திறமையும் வளர்த்துக் கொள்ளவேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள். ராஜி... நீ கொஞ்சம் போல் திறமையையும் நேர்மறை எண்ணத்தையும் வளர்த்துக் கொண்டால் போதும், ஏராளமான அற்புதங்களை நிகழ்த்த முடியும்' - ராஜன் பேசி முடித்தான். ராஜிக்குத் தன் வருங்காலத்தின் மீது நம்பிக்கை வந்தது.

மறுபரிசீலனைக்குப் பிறகு இதயத்தை நெருடிக்கொண்டிருந்த விஷயத்தில் இருந்து இருவரும் விடுதலையானார்கள். இருவரின் இதயமும் லேசானது. நாணயமாகவும் ஆரோக்கியமாகவும் இருவரும் வாத விவாதம் செய்தது இருவரின் கொந்தளிக்கும் உணர்வுகளைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்தது. இருவரின் நட்புறவு பலப்பட்டது.

இதனால் ராஜி தனது ஆற்றலையும் செயற்பாட்டையும் பெருக்கிக் கொண்டாள். அடுத்த ஆறு மாதத்தில் மேற்கொள்ளப்பட்ட திறமை மதிப்பீட்டில் முதலிடம் பெற்றாள்.

**படிப்பினைகள்:**

- உங்களிடம் எவ்வளவு ஆற்றல் இருக்கிறது என்பதைவிட, சரியான மனோபாவம் இல்லையென்றால், செயல் திறமையை உயர்த்த முடியாது. சரியான மனோபாவம் இருந்தால், குறைவான ஆற்றலைக் கூட உயர்ந்த செயற்திறமையாக ஆக்கிவிட முடியும்.
- சரியான மனோபாவத்தோடு ஆற்றல் வெளிப்படுகிறபோது, உங்கள் செயல் திறமை சிறக்கிறது. பொருத்தமான கற்கும் ஆர்வத்தோடு, செயல் திறமை சிறப்புறும் போது உங்களின் ஆற்றல் உயர்கிறது.
- ஆற்றலும் செயல் திறனும் எல்லா காலங்களிலும் விரிவடைந்து கொண்டிருக்க வேண்டும் என்பதே பணியாளரின் இடையறாத வேட்கையாக இருக்க வேண்டும்.

கல்வித் தாகம் ஒரு நிபுணரை வடிவமைக்கிறது. மனோபாவம், நிபுணத்துவத்துக்குப் பின்னால் இருக்கும் மனிதரை வடிவமைக்கிறது.

# 16

## கூட்டு முயற்சி... கூட்டு உருவாக்கம்!

விஷால் தன் துறைத்தலைவருடன் விவாதித்து விட்டுத் தன் இருக்கைக்குத் திரும்பினான். அவனுக்குப் போதிய சுதந்தரம் தரப்படவில்லை. இப்படிச்செய் என்று எந்த வழிகாட்டுதலும் இருந்திருக்கவில்லை. பலவிதமான ஆலோசனைகளை விஷால் சொல்லியிருக்கிறான். ஆனால், அவனுடைய மேலதிகாரி அதை ஒருபோதும் பொருட்படுத்தியதில்லை. இதுகூடப் பரவா யில்லை. விஷாலின் முழு ஆற்றலைப் பயன்படுத்திக் கொள்ளக் கூட மேலதிகாரிக்கு விருப்பமே இல்லை. இதுதான் விஷாலை ரொம்பவும் சங்கடப்படுத்தியது.

மதிய உணவு நேரத்தில் தன்னுடன் பணிபுரியும் விஜயிடம் மனம் விட்டுப் பேசினான் விஷால். 'கத்தை கத்தையாகச் சம்பளம் பெறு வதைக் காட்டிலும், சவாலான வேலைகளைச் செய்வதையே பெரிதாக மதிக்கிறேன்' என்று சொன்னான். விஷால் சொன்னதை விஜயும் ஒப்புக்கொண்டான். 'விஷால்! அப்படியானால் நீயாகவே சில கூடுதல் பொறுப்புகளை எடுத்துக்கொள்ள வேண்டியது தானே... நிறுவனத்தில் யாரும் இதுவரை செய்திராத சில பணி களைச் செய்ய வேண்டியதுதானே' - என்று விஜய் கேட்டான். விஷால் உடனே பதிலளித்தான் : 'நானாக எப்படி எடுத்துச் செய்ய முடியும். என் துறைத்தலைவர் எடுத்துச் சொல்லட்டும். என்ன பணி, என்ன பங்களிப்பு தேவை என்பதை எல்லாம் தெளிவாக வரையறுத்தால்தான் என்னால் ஒரு வேலையை நன்கு செய்ய முடியும்.'

பல மாதங்கள் ஓடின. விஷாலின் பணியில் எந்தவித முன்னேற்ற மும் இல்லை. நாளாக நாளாக அதிருப்தி அதிகமானது. ராஜினாமா செய்து விட்டுக் கிளம்பிவிடலாம் என்ற முடிவுக்கு வந்தான். பணியில் சேர்ந்த புதிதில், வழிகாட்டியாகத் திகழ்ந்த ராமநாதனின் ஞாபகம் வந்தது. ஒருமுறை அவரைச் சந்தித்து விட்டு முடிவு எடுக்கலாம் என்று தீர்மானித்தான்.

ராமநாதனைச் சந்தித்து மலரும் நினைவுகளைப் பகிர்ந்து கொண்டான். நடப்பு நிலையை விவரித்தான். மனம் படும் பாட்டைச் சொன்னான். பொறுமையாகக் கேட்ட ராமநாதன் நிதானமாகப் பதில் சொன்னார் : 'நமது கட்டுப்பாட்டில் இல்லாத விஷயங்களுக்குக் கலங்கக் கூடாது. அதில் எந்தப் பயனும் இல்லை. இந்தவிதமான சூழ்நிலைகளில், மாற்று வழிகள் ஏதேனும் உண்டா என்று சிந்திக்க வேண்டும்.'

'பல யோசனைகளை என் மேலதிகாரியிடம் சொன்னேன். அவர் எதையுமே ஏற்பதாக இல்லை. நான் என்ன செய்ய? எங்கு போக?' - விஷால் புலம்பினான்.

ராமநாதன் தன் இருக்கையில் இருந்து எழுந்து, விஷாலின் கழுத்தில் மாலையாகத் தன் கைகளைப் போட்டபடி உற்சாக மாகப் பேசினார் : ' விஷால்... ஒரு குறிப்பிட்ட நிலைக்கு மேலே, யார் நம்மை உற்சாகப்படுத்துகிறார் என்பது அல்ல; எது நம்மை உற்சாகப்படுத்துகிறது என்பதுதான் நம் கனவுகளை நனவாக்க உதவும். இதை நீ புரிந்து கொள்ள வேண்டும். உன் கனவுகளை நனவாக்கும் வெறி, தீவிரமான உற்சாகம் உன் உள்ளே தீ போல் கனன்று எழுந்தால், நீயாகவே அதற்கான சந்தர்ப்பங்களை உருவாக்கிக் கொள்ள வேண்டும்.'

நெருக்கடியான இந்தக் காலகட்டத்தில், நிறுவனத்துக்கு லாபகர மாக அமையக்கூடிய சில கூடுதல் பொறுப்புகளை ஏற்க விரும்பு கிறேன் என்றாயே. அதை முயற்சி செய்யலாமே' - ராமநாதன் ஆலோசனையாகக் கூறினார். 'செய்யலாம் சார். ஆனால், அதற்கு என் துறைத்தலைவரின் இசைவு வேண்டும். மேலும் மற்ற துறை களின் பணியாளர்களின் ஒத்துழைப்பும் வேண்டுமே...' என்றான் விஷால்.

விஷாலின் தயக்கத்தை ராமநாதன் புரிந்துகொண்டார். 'வேண்டு மானால், தேவையான மற்ற துறையில் இருக்கும் முதுநிலை மேலாளர்களைக் கொண்டு ஒரு புதிய முறைசாரா குழுவை

அமைத்துக் கொள்! சுதந்தரமாகச் செயல்படுவதற்குப் பதிலாகப் பரஸ்பர உதவியைப் பெற்றுக் கூட்டு முயற்சியாகச் செய்து பார். உடனே பதில் சொல்ல வேண்டியதில்லை. நிதானமாக யோசித்துப் பார். இரண்டு நாள்களுக்குப் பிறகு மறுபடியும் இது தொடர்பாகப் பேசுவோம்'.

விஷால் அன்றிரவு முழுதும் யோசித்தான். ராமநாதன் சொன்ன ஆலோசனை அவனுக்குப் பிடித்திருந்தது. மறுநாள் காலை விறுவிறுப்பாக அலுவலகத்துக்கு வந்தான். விஜயோடு கூட்டாகச் சேர்ந்து சில புதிய பொறுப்புகளை நிறைவேற்ற விரும்புவதாகச் சொன்னான். விஜய்க்கும் இது மிகச் சரியாகப்பட்டது. அது நிறு வனத்துக்கு நன்மை தரும். விஷாலின் ஆற்றலை வெளிப்படுத்த நல்ல வாய்ப்பும் கிடைக்கும் என்று விஜய் சந்தோஷப்பட்டான்.

விஜய், விஷாலின் நல்ல நண்பன். 'விஷால்! அன்றைக்கே சொன்னேனே! நிறுவனத்தின் பெரிய பொறுப்புகளை நீ ஏற்கும் நாள் வெகு தூரத்தில் இல்லை என்றேனே! இத்தகைய கூடுதல் பொறுப்பை ஏற்பதனால், எனக்குப் போட்டியாக உன்னைக் கருதவே மாட்டேன். பரஸ்பரம் உதவி செய்துகொள்வோம். நிறுவனத்தின் வெற்றியைப் பன்மடங்கு பெருக்குவோம்' - என்று விஜய் சொன்னான்.

விஷால் தன் மனக்கவலைகளில் இருந்து வெளியே வந்தான். வெகுநாட்களுக்குப் பிறகு பெரும் நிம்மதி. கூட்டாக, புதிய திட்டங்கள் பற்பல பரிமாணங்களில் பட்டை தீட்டப்பட்டன. விஜய்க்கும் வியாபாரத் துறையில் பல நெருக்கடிகள் உருவான காலகட்டம் அது. ஒன்றுக்குத் தீர்வு காணும்முன் அடுத்தச் சிக்கல் உருவாகிக் கொண்டிருந்தது. தக்க நேரத்தில் விஷால் தோள் கொடுத்ததாக நினைத்தான். நிறுவனத்தின் வியாபார இலக்கை எட்டுவதற்கு இருவரின் தனித்தனியான பங்களிப்பும் கூட்டு முயற்சிகளும் பெரிதும் உதவி புரிந்தன. இருவரும் தங்கள் உச்ச பட்ச வலிமையுடன் செயல்பட்டனர். எப்போதாவது கருத்து வேறு பாடுகள் துளிர்க்கும். ஆனால், நிறுவனத்தின் பொது இலக்கு இரு வரையும் ஒற்றுமையாகச் செயல்படவைத்தது. இருவரும் இணைந்து ஓர் அருமையான குழுவாகச் செயல்பட்டனர். மேலேயிருந்து ஒருவர் வழிகாட்ட வேண்டும் என்ற தேவை இல்லாமலே போனது.

பொங்கிப் புறப்பட்ட புத்துணர்வுக்கும் பொலிவுக்கும், ராம நாதனுக்கு விஷால் நன்றி சொன்னான். ராமநாதன் விஷாலின்

சந்தோஷத்தைப் பார்த்துப் பெருமிதம் அடைந்தார். 'விஷால்! உன் முகத்தில் சந்தோஷ ரேகைகள் பளிச்சிடுகின்றவே! நல்ல திட்டங்களை யோசிக்கும் திறன் ஒருபுறம் இருந்தாலும், சுதந்தர மாகச் செயல்படுவது இன்னும் அதற்குச் சாதகமாக இருந்தாலும், ஒன்றை நன்றாக நினைவில் கொள்ள வேண்டும். உடன் பணி புரியும் பணியாளர்களிடமிருந்து பல படிப்பினைகளைத் தயக்க மின்றிப் பெற்றுக் கொள்ள வேண்டும். கூட்டு முயற்சியே பெரிய வெற்றியைத் தரும். ஒருபோதும் குறுகிய எண்ணங்களுக்கு இடம் தரக் கூடாது. காழ்ப்புணர்ச்சிகளுக்கு சிறிதும் ஆளாகாமல், பிறருடைய வலுவான அம்சங்களை இன்னும் மெருகேற்ற உன்னால் என்ன முடியுமோ அதை நீயாகவே செய்ய வேண்டும். பணியாளர்கள் சுதந்தரமாகச் செயற்படுவது நிறுவனத்தின் அறிவு சார்ந்த வலிமையைக் காட்டும். அதே நேரம் அவர்கள் ஒருவருக் கொருவர் திடமாகக் கூட்டுறவாகச் செயற்படுவது அந்நிறுவனத் தின் உணர்ச்சிபூர்வமான வலிமையை அதிகரிக்கும். இந்த வலிமை அதிகரிக்க அதிகரிக்க நிறுவனம் பெரிய வெற்றிகளை எளிதில் குவித்துவிடும்.

**படிப்பினைகள்:**

- பணியாளர்கள் இணைந்து பணிபுரிவதோடு, மற்றவரிடமிருந்து பற்பலப் படிப்பினைகளைப் பெற்றுக் கொள்ள வேண்டும்.
- பணியாளர்கள் தனியார் நிறுவனங்களின் ஏணிப்படி களில் ஏற நினைத்தால், அவர்களின் தனித்திறன் களை விட, மற்ற பணியாளர்களோடு ஒத்திசைந்து செயற்படுவதே மிகவும் அவசியம்.
- நிறுவனங்களும் பணியாளர்களுக்குச் சுதந்தரம் மட்டும் அளிக்காமல், ஒருவர் மற்றவருடன் சேர்ந்து நேர்த்தியாகச் செயல்படுவதற்கான சந்தர்ப்பங் களை உருவாக்கித் தரவேண்டும். அப்போது தான் நிறுவனம் நாளுக்கு நாள் ஏறுமுகமாகத் திகழும்!

அடுத்தத் தலைமுறை நிறுவனங்கள் வெற்றி பெற வேண்டுமானால்
பணியாளர்கள் கூட்டுறவாகச் செயல்பட்டால் மட்டும் போதாது!
கூட்டாகப் புதிய விஷயங்களைப் படைப்பூக்கத்துடன்
செயல்படுத்தவும் வேண்டும்.

# 17

## நளினமான அதிரடி!

விஜய் பொறுமையே இல்லாதவன். அதிரடியாக நடந்து கொள்பவன். இருபது வருடங்களுக்கு முன் ஒரு விளம்பரம் வந்தது : 'நல்ல முடிவுகள் கிடைத்தே ஆக வேண்டும் என்ற பரபரப்பு உள்ளவர்கள் மட்டும் இப்பணிக்கு விண்ணப் பிக்கவும்.' விஜய் உடனே அந்த வேலைக்கு விண்ணப்பித்துப் பணியில் அமர்ந்தான். இலக்குகளை அடைவதற்குத் துடிதுடிப் புடன் இருப்பதே முக்கியம் என்பதைப் பணியில் சேர்ந்த முதல் நாளிலிருந்தே செயல்படுத்திக்கொண்டு வருபவன் விஜய்.

ஒருமுறை வாராந்தர நற்செய்திக் கூட்டத்தில் பொறுமையின் பெருமை பற்றிப் பேசப்பட்டது. 'பொறுமை அருமையான குணம். உற்றார் உறவினரிடம் அது அன்பாக மலரும்; அன்னிய ருடன் மதிப்பாக உதயமாகும்; தெய்வத்திடம் காட்டும்போது அது பக்தியாகும். தன்னிடமே சிறிது சிறிதாக நீரூற்றி உரமிட்டு வளர்த்துக் கொண்டே வந்தால் தன்னம்பிக்கையாக உருவாகும்' என்று சொல்லப்பட்டது. அதைக் கேட்ட மாத்திரத்தில் மனத்தில் பல்வேறு கேள்விகள் தோன்றின.

தன் வழிகாட்டியான ராமநாதனிடம் இது பற்றிக் கேட்டான். 'பொறுமையாக வாழ்வதில் இருக்கும் பலன் பற்றி எனக்குப் புரியத்தான் செய்கிறது. ஆனால், ஒரு விஷயத்தை அது தானாக நடக்கும் என்று பொறுமையாகப் பார்த்துக்கொண்டு இருப்

பதைவிட அதைத் துடிப்புடன் நிகழ்த்திக் காட்டுவதுதானே நல்லது. பொறுமை என் வெற்றி வேகத்தை முடக்கிவிடாதா' என்று தன் சந்தேகத்தைக் கேட்டான்.

ராமநாதன் சொன்னார் : இதோ பார் விஜய்... நீ என்ன சொல்ல வருகிறாய் என்பது புரிகிறது. எல்லாவற்றுக்கும் பரபரப்புடன் பதற்றத்துடன் செயல்படாமல், சிந்தனை, செயல்பாடு இவற்றில் மட்டும் பரபரப்பைக் காட்டு. பலனை எதிர்பார்ப் பதில் நிதானமாக இரு. அதுவே நல்லது' என்றவர் மேலும் தொடர்ந்தார்.

'முடிவுகளை அடைவதில் பொறுமை இழந்தால் அது உன்னை அதிரடியாகச் செயல்படுபவராக ஆக்கிவிடும். நடைமுறை சாத்தியமில்லாத இலக்குகளை அடையவேண்டும் என்று துடிப்பாய். பிறர் மீது பெரும் நெருக்கடிகளைச் சுமத்துவாய். அது நல்லதல்ல' என்று ஆலோசனை சொன்னார். ஆனால், விஜய்க்கு எந்தச் சரியான முடிவையும் எடுக்க முடியவில்லை. முடிவுகளில் அதிக அக்கறை செலுத்தவில்லையென்றால் வெற்றி பெறுவது எப்படி என்று குழம்பினான்.

அடுத்த வார நற்செய்திக் கூட்டத்துக்கும் போனான். அதில் புதிய விஷயம் சொல்லப்பட்டது. மனிதக் குணங்களை நான்கு வகைப்படுத்தலாம். நற்பொறுமை, மூடப் பொறுமை, நற் பரபரப்பு, முரட்டுப் பரபரப்பு. பொதுவாக, பொறுமையான வர்கள் முனைப்புகள் ஏதும் காட்டுவது இல்லை. பரபரப்பான மக்கள் அதிரடியாகச் செயல்படுவார்கள். பரபரப்பு மட்டுமே வளர்ச்சிக்கு வித்திடுவதால், நற் பொறுமையாளர்களை விட முரட்டுப் பரபரப்புக்காரர்கள் மேல். ஒன்றுமே செய்யாதவர் களைவிடத் தவறு என்றாலும் எதையாவது செய்பவர்கள் பாராட்டுக்குரியவர்கள். தொடர்ந்து முன்னேற நினைப்பவர் கள் பரபரப்பாக இருத்தல் அவசியம் என்று அந்தக் கூட்டத்தில் சொல்லப்பட்டது.

அதைக் கேட்டு விஜய்க்கு சந்தோஷம். அதிரடியாகச் செயல்படு வதில் தவறில்லை என்று மனத்துக்குள் முடிவு செய்துகொண்டான். அடுத்து நடந்த அலுவலக வாராந்திர கூட்டத்தில் சிறிய கருத்து வேறுபாடு வந்தது. விஜய் பயங்கரமாகக் கோபப்பட்டதுடன் அந்த அறையை விட்டு வெளியேறினான். அவனுடைய கோபத்தில்

நியாயம் இருந்தது. என்றாலும் அதை மற்றவர்களுக்குப் புரிய வைக்கும் அளவுக்கு விஜய்க்குப் பொறுமை இல்லை.

கோபத்தினால் தன்னுடைய இயல்பான நல்ல அம்சங்களையும் இழந்து வாராந்திரக் கூட்டத்தில் இருந்து வெளியேறிய சம்பவத்தை ராமநாதனிடம் விஜய் விளக்கிக் கூறினான். விஜயின் தோள்களைத் தட்டியவாறு ராமநாதன் சொன்னார் : 'விஜய்! உன் நல்ல எண்ணங்களை நான் அறிவேன். கோபப்பட்டுப் பிறரைப் புண்படுத்தும் நோக்கம் உனக்குக் கிடையாது. ஆனால், கூட்டத் தில் நீ நடந்து கொண்டவிதம்தான் எல்லோரின் மனத்திலும் இருக்கும். கோபத்துக்கான காரணம் அவர்களுக்குப் புரிந் திருக்காது.'

அவ்வாரம் முழுதும் ராமநாதனின் அறிவுரைகளை அசை போட்டான் விஜய். தன் கோபத்துக்கான காரணத்தை அலசி ஆராய்ந்தான். பரபரப்பும் கோபமும்தான் முன்னேற்றத்துக்கான ஒரே வழியா? வேறு வழிகளும் இருக்கின்றனவா? யோசித்தான். ஒரு புத்தகத்தைப் படித்த போது அதில் ஒரு மேற்கோள் இடம் பெற்றிருந்தது : 'நம்மைச் சுற்றியுள்ள சூழ்நிலைகள் பாதிக்கப்படாமல், நம்மைத் தனித்துவமாக இதமாக வெளிப் படுத்த வேண்டும்.' அதைப் படித்ததும் விஜயின் கேள்விக்கான பதில் கிடைத்ததுபோல் உணர்ந்தான். இப்போது அவனுடைய மனம் முழுவதையும் இதமான பணிவு ஆக்ரமிக்கத் தொடங்கியது.

விஜய் உற்சாகத்துடன் வீடு திரும்பினான். தன் கேள்விக்கான பதில் கிடைத்த சந்தோஷத்தில் ராமநாதனிடம் நடந்த நிகழ்ச்சியை விளக்கினான். 'சார்! ஒரு விவாதம் ஆரம்பிப்ப தற்கு முன் என்னால் பணிவோடு இருக்க முடியும். விவாதத் துக்குப் பிறகும் பணிவோடு இருக்க முடியும். ஆனால், விவாதம் நடைபெறுகையில் என்னால் கோபப்படாமல் இருக்க முடியவில்லை. வாழ்க்கையில் முன்னுக்கு வருவதற்கு அதிரடியான செயல்பாடுகள் அவசியம்தான். அதே நேரத்தில் பணிவுடன் அடுத்தவர் மனத்தைப் புரிந்துகொண்டும் நடக்க விரும்புகிறேன். இதைச் செய்வது எப்படி என்று சொல்லுங் கள்' - என்று கேட்டான்.

ராமநாதன் கூறினார் : 'நீ அதிரடியாகச் செயல்பட்டால், சுற்றி யுள்ளவர் உன்னிடம் பேசக்கூடப் பயப்படுவர். தயங்குவர்.

பரபரப்புடன் செயல்படுகையில் உன்னுடைய பலமும் பறந்து போகும்; உன்னோடு தொடர்பு கொள்பவரின் ஆற்றலும் மங்கிப் போகும். மற்றவர்களும் தத்தமது வளர்ச்சிக்குக் கடுமையாக உழைக்க வேண்டும் என்பது உன் எண்ணமாக இருக்கலாம். ஆனால், அதை உன்னுடைய பரபரப்பின் மூலம்தான் காட்ட வேண்டும் என்றில்லை. மற்றவர்களோடு பழகும்போது உன் உணர்ச்சிக் கொந்தளிப்புகளைச் சரிவர நீ கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொள்ள வேண்டும். எந்தவொரு சந்தர்ப்பச் சூழ்நிலையாக இருந்தாலும் அதை இதமாகக் கையாள்வது போல் கற்பனை செய்து கொள். அப்படிச் செய்தால் எந்த மோசமான, கோபமான எதிர்வினை வந்தாலும் எளிதில் உணர்ச்சிவசப்படாமல் உன்னால் கையாள முடியும்.'

ராமநாதன் மேலும் தொடர்ந்தார்: 'உன் எண்ணங்களைச் செயற்படுத்துவதில் நீ அதிரடியாக இருப்பது நல்லது. அதே நேரம் மற்றவர்களை வழி நடத்தும்போது இதமாக நடந்து கொள்வதே நல்லது. அதிரடியாகவும் அதே நேரம் இதமாகவும் நடந்து கொள்ளவேண்டும். அதுவே நிலையான வளர்ச்சிக்கு உதவும்.'

விஜய் சிறிது நேரம் பேசாமல் இருந்தான். திடீரென்று சந்தோஷத்தில் கத்தினான். வாழ்க்கையில் முன்னேற எனக்கென்ற ஒரு சூத்திரம் கண்டுபிடித்து விட்டேன். இதமாகவும் நடந்து கொள்ள வேண்டும். ஆவேசத்துடனும் இருக்க வேண்டும். அதாவது 'இதமாவேசம்'. இப்படி ஒரு வார்த்தை எந்த அகராதியிலும் இருக்காதுதான். ஆனால், இந்த வார்த்தை எனக்கு மிகவும் முக்கியமானது. ஒரு மந்திரம் போன்றது. என் உடம்பில், உணர்வில் இதை நான் இரண்டறக் கலக்கச் செய்வேன். இன்று புதியதாகப் பிறந்தேன். எனக்கு ஓர் அரிய மந்திரம் கிடைத்திருக்கிறது. வெறுமனே அதைத் தெரிந்து வைத்திருந்தால் மட்டும் போதாது. அதை நடைமுறைப் படுத்தவும் செய்வேன்' - என்று உற்சாகத்தில் சொன்னான்.

விஜயின் மாற்றம் கண்டு ராமநாதனுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. மேலெழுந்த வாரியாக இல்லாமல் உளமார உணர்ந்து கொள்ளும் விஷயங்கள் நிச்சயம் நல்ல பலனைத் தரும் என்பது ராமநாதனுக்கு நன்கு தெரியும்.

**படிப்பினைகள்:**

- பரபரப்பும் துடிதுடிப்பும் உங்கள் விஷயத்தில் நல்லதுதான். இதையே மற்றவரிடமும் காட்ட முற்பட்டால், உங்களை இழுத்துக் கீழே தள்ளிவிடும்.
- பரபரப்பும் துடிதுடிப்பும் உங்கள் அறிவாற்றலை விரிவாக்கக்கூடும், ஆனால், இதமான செயல்களே மற்றவர்களின் மனத்தை விரிவாக்கும்.
- பரபரப்பும் துடிதுடிப்பும் வளர்ச்சியின் வேகத்தைத் தீர்மானிக்கும். ஆனால், கனிவும் பணிவுமே அமைதியையும் சந்தோஷத்தையும் நிலை நாட்டும்.

திறமை ஒருவரை உச்சிக்குக் கொண்டு செல்லும். மனப் பக்குவமே அவரை அந்த உயரத்தில் நிலைத்திருக்கச் செய்யும்.

# 18

## மனதைப் பலப்படுத்து

வருண் அலுவல் நிமித்தமாக தில்லிக்குப் போயிருந்தான். மதிய உணவுக்குப் பிறகு, சிறிது ஓய்வெடுத்துக் கொண்டான். கடந்த காலத்தில் தான் செய்த செயல்களில் எதையெல்லாம் மாற்றிக் கொள்ள வேண்டும்; வருங்கால வளர்ச்சிக்கு எதையெல்லாம் செய்ய வேண்டும் என்று யோசித்தான். 'ஏன் அலுவலகத்தில் அடிக்கடி உணர்ச்சிவசப்பட்டுக் கோபப்படுகிறேன்' என்று சிந்தித்தான். எல்லாம் முழுமையாக இருக்க வேண்டும் என்று விரும்புவதால்தான் மன அமைதி குறைந்து, செயல் திறமை பாதிக்கப்படுகிறதா' என்று எண்ணினான். 'உணர்ச்சிபூர்வமாக வளர்ந்தும் கூட, ஒரு கட்டுப்பாட்டுக்குள் இருக்க முடியாமல் போனதன் காரணங்களை அலசினான். அன்று, அவன் மனத்தில் ஏராளம் கேள்விகள். அதற்கான விடைகளோ அவனிடம் இல்லை. என்ன செய்யலாம்? யாரை நாடினால் தெளிவு பிறக்கும் என்று யோசித்தான். விஜயின் ஞாபகம் வந்தது.

அன்று மாலை விஜயின் வீட்டு வாசலில் வருண் நின்றிருந்தான். விஜய்க்கு மிக்க மகிழ்ச்சி. அன்புடன் வரவேற்றான். அலுவல் - குடும்ப விஷயங்கள் பரிமாறிக் கொள்ளப்பட்டன. 'விஜய் சார்! என் குழுவைப் பற்றி நான் பல முறை பிரமித்து இருக்கிறேன். நல்ல ஊக்கமும் ஆக்கமும் நிறைந்த என் குழுவைப் பாராட்டாத உயர் அதிகாரிகளே இல்லை. ஆனால், ஏனோ தெரியவில்லை, குழு உறுப்பினரிடம் முன்பு இருந்த ஆற்றல் குறைந்துபோய் விட்டது. அவர்களுக்கு நான் அளிக்கும் சுதந்தரத்துக்கு அளவே

இல்லை. ஆனால், நான் என்ன எதிர்பார்க்கிறேன் என்பதை அவர்கள் யாரும் புரிந்து கொள்வதே இல்லை. செய்த தவற்றைச் செய்து கொண்டே இருக்கிறார்கள். பல முறை எச்சரித்திருக் கிறேன். படபடத்திருக்கிறேன். வெறுப்பின் எல்லைக்கே சென்று விடுகிறேன். என்ன செய்வதென்றே தெரியவில்லை' என்று வருண் தன் உள்ளக் குமுறலைக் கொட்டினான்.

விஜய் வருணின் தோளில் கைகளை ஆதரவாக வைத்துப் பேசினான். 'வருண்... நீ எதிர்நோக்கும் இக்கட்டான நிலை உனக்குப் புதியதில்லையே!. உன் ஆர்வம், துடிப்பு எல்லாம் நான் அறிவேன். என்னோடு பணிபுரியும்போதுகூட இத்தகைய கட்டத்தை நீ கடந்து வந்திருக்கிறாய். உன்னோடு பணி புரியும் குழுவுக்குக் கட்டளைகள் இடுவாய். அதற்குப் பின்னும் உன்னால் சும்மா இருக்க முடியாது. கட்டளைகளை அவர்கள் நிறைவேற்றிக் கொண்டு இருக்கும் போது மூக்கை நுழைப்பாய். அவர்களுக்குப் பணி சுதந்தரம் அளித்ததாக நீ சொல்கிறாய். ஆனால், உண்மையாகப் பார்த்தால் நீ அவர்களுக்கு பணி சுதந்தரம் அளிக்கவில்லை. அவர்கள் நீ சொல்வதை மீறிக் கேள்வி கேட்கவே மாட்டார்கள். உன் கோணத்தில் பணியை முடிப்பதே அவர்களின் இலக்காக இருந்தது. எனவே, உனக்கு எந்தப் பிரச்னையும் வராமல் இருந்தது. ஆனால், இப்போது நிலைமை அப்படி இல்லை.'

'விஜய் சார், நான் மிகவும் மாறி இருக்கிறேன். அவர்களுக்கு முழு பணி சுதந்தரம் அளித்துள்ளேன். இடையிடையே நான் அவர் களைத் தொந்தரவு செய்வதில்லை. பொறுப்புகளை ஒப்படைக்கும் போதே என்னென்ன செய்ய வேண்டும் என்றும் ஏதேனும் இடையூறு ஏற்பட்டால், என்ன செய்ய வேண்டும் என்பதையும் சொல்லிவிடுகிறேன். இருந்தும், எல்லா பிரச்னைகளுக்கும் என்னிடமே வருகிறார்கள். எல்லா உத்தரவும் அளிக்கப்பட்டும், ஒப்படைத்த பணியை முடிக்க, அவர்கள் என்னை ஏன் எதிர்பார்க்க வேண்டும். ஏன் கொடுத்த பொறுப்பைத் தாமதப்படுத்துகிறார்கள். இதுதான் என் பிரச்னை' - வருண் சொல்லி முடித்தான்.

'வருண்... உனக்கு ஒன்று தெரியுமா? ஒரு வேலையை ஒப்படைக்கும்போது அதை எப்படிச் செய்ய வேண்டும் என்ற முடிவையும் அவர்களையே எடுக்கவிட வேண்டும். இப்படிச் செய்... இப்படிச் செய்யாதே என்றெல்லாம் சொல்லக் கூடாது.சொந்த மூளையை உபயோகித்து விளைவுகளைச்

சந்திக்கும் பக்குவம் அவர்களுக்கு இல்லாமல் போய்விடும். குழந்தைக்குச் சிறிது காலம்தான் நடப்பதற்குக் கை கொடுத்து உதவ வேண்டும். அதன் பிறகு குழந்தைகளைத் தாமாகவே நடக்க விட்டுவிட வேண்டும். அதுதான் சரி இல்லையா?'

'விஜய் சார்! அப்படி நான் தொடர்ந்து கண்காணிக்கவில்லை என்றால் குறித்த காலத்தில் எந்தப் பணியும் முடியாது. நான் என்ன எதிர்பார்க்கிறேன்... அதுவும் எத்தனை நாள்களுக்குள் முடிக்க வேண்டும் என்பதையெல்லாம் தெள்ளத் தெளிவாகச் சொல்லி, முழு சுதந்தரமும் அளித்துவிடுகிறேன். ஆனால், நினைப்பது எதுவும் நடப்பது இல்லை. முன்பெல்லாம் இதே குழு உறுப்பினர்கள் மிக நன்றாகப் பணியாற்றினர். இப்போது என்ன ஆயிற்று என்று எனக்கே புரியவில்லை. எங்கு தவறு நடக்கிறது என்பதை என்னால் அறிந்து கொள்ளக் கூட முடிய வில்லை. சொல்லுங்கள் விஜய் சார்! நான் என்ன செய்ய?'

சிறிது மௌனத்துக்குப் பிறகு விஜய் தொடர்ந்தான் : 'வருண்... பணி சுதந்தரம் என்பது ஆளுக்கு ஆள் மாறுபடும். ஒரே ஆளிடம் கூடச் சூழலுக்கு ஏற்ப மாறுபடும். ஒரு செயலைச் செய்யச் சுதந்தரம் கிடைத்தால் மட்டும் போதாது. இப்போதெல்லாம் எந்தச் செயலைச் செய்ய என்று சிந்திக்கும் சுதந்தரமும் அவர்களுக்குத் தரவேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள்.'

வருண் இடைமறித்தான். 'சில நேரங்களில் அவர்கள் தற்காத்துக் கொள்ளும் நடவடிக்கையை மேற்கொள்கின்றனர். அவர்கள் தத்தமது அச்ச வலையில் இருந்து வெளிவர மறுக்கின்றனர். அவர் களிடம் புதிய அணுகுமுறைகள் இருப்பதில்லை. வேறுவிதமாகச் செயல்படும்படி அவர்களை என்னால் தூண்ட முடியவில்லை.'

'வருண், என்ன சொல்கிறாய்? பணி சுதந்தரத்தின் முதல் படியே புதுமைகளை அனுமதிப்பதுதான். செய்யும் தவறுகளில் இருந்து தான் படிப்பினைகளைப் பெற முடியும். அதுமட்டுமல்லாமல், அவர்களோடு அமர்ந்து அவர்களாகத் திட்டமிடும் நடவடிக்கை களுக்கு உடனிருந்து வழிகாட்ட வேண்டும். புதுமையான யோசனைகள் உருவாகும்போது உற்சாகப்படுத்த வேண்டும். மற்றவர்களின் மனத்தைப் புரிந்துகொள்வதற்கு அறிவைப் பயன்படுத்துவதற்குப் பதிலாக இதயபூர்வமாக அவர்களிடம் பேசு. அது அவர்களின் மனத்தைத் திறக்கும். இதயம் திறந்துவிட்டால் மனத்தைத் துளைப்பது எளிது. வாய் திறந்து

பாராட்டக் கூடத் தேவையில்லை. மெல்லிய புன்முறுவல் ஒன்று போதும். உற்சாகத்தோடு செயலில் இறங்கி விடுவர்' - என்று சொன்னான் விஜய்.

'விஜய் சார்! நீங்கள் சொல்லும் வண்ணம் நிச்சயம் செய்கிறேன். என்னோடு நேரடியாகத் தொடர்பு கொள்ளும் குழு உறுப்பினர் களை மட்டும் உற்சாகப்படுத்தினால் போதுமா? அல்லது அனைத்துப் பணியாளர்களையும் பாராட்ட வேண்டுமா?' என்று கேட்டான் வருண்.

'வருண்... இது ஒருவகையில் தொடர் ஓட்டப் பந்தயத்தைப் போன்றது. அனைவருமே உத்வேகத்துடன் செயல்பட்டால் தான் வெற்றி நிச்சயம். உன்னோடு தொடர்பு உடையவரை மட்டும் நீ உற்சாகப்படுத்துகிறாய் என்று வைத்துக் கொள். ஆனால், அவருக்குக் கீழே இருக்கும் உறுப்பினருடன் அந்த உற்சாகத்தை அவர் பகிர்ந்து கொள்ளவில்லை என்றால், மொத்தக் குழுவின் செயல்பாட்டையும் அது முடக்கிவிடும். இடைவிடாது எல்லா உறுப்பினர்களையும் பாராட்டிக் கொண்டிருக்க வேண்டும். அப்போதுதான் அவர்களின் தன்னம் பிக்கை சிறக்கும்; பற்பல நல்ல விளைவுகளை ஏற்படுத்தும். உன்னதங்களைக் காணவைக்கும்.

வருண்... உனக்கு ஒரு கணக்கீட்டைச் சொல்கிறேன். உன் பணி நேரத்தை 30:40:30: எனப் பிரித்துக் கொள். அதாவது, எந்த வேலையாக இருந்தாலும் அதில் உன் தனித்திறமையை வெளிப் படுத்த 30% நேரத்தைப் பயன்படுத்த வேண்டும். உன் கீழ் பணி புரிபவர்களின் செயல்பாடுகளை மறுபரிசீலனை செய்ய 40% நேரத்தைப் பயன்படுத்த வேண்டும். எஞ்சிய 30% நேரத்தை உன் மேலதிகாரியின் பணிச் சுமையைக் குறைக்கப் பயன்படுத்த வேண்டும். செய்யும் வேலைக்கு அதிக மதிப்பைக் கொண்டு வருவதால் உனக்குக் கீழே பணிபுரிபவர்கள் உன்னை மரியாதை யுடன் நடத்துவார்கள். 30% நேரத்தை மேலதிகாரிக்காகச் செலவிடுவதால் அவரும் உன் மீது மிகுந்த மதிப்பு கொண்டிருப் பார். இரு தரப்பிலிருந்து கிடைக்கும் மரியாதையும் உன்னைப் பெருமிதப்பட வைக்கும். உற்சாகத்தை அதிகரிக்கும். நீ உற்சாகப்படுத்தப்பட்டால் அந்த உற்சாகத்தை அடுத்தவருக்கும் பகிர்ந்து அளிக்கலாம். அலுவலகத்தில் இருக்கும் ஒவ்வொரு வரும் இப்படிச் செயற்பட்டால், நிறுவனத்துக்கு எவ்வளவு பலம் கூடும் என்பதை எண்ணிப் பார்.

வருண்... திறமையற்ற மேலதிகாரி, தொண்டனாகிவிடுகிறார்: திறமையுள்ள மேலதிகாரி, மேலாளர் ஆகிறார்: உற்சாகப் படுத்தும் மேலதிகாரி, தலைவனாகிறார். ஆனால், தனக்குக் கீழே பணிபுரிபவர்களுக்குப் பொறுப்பையும் ஊக்கத்தையும் கொடுக்கும் மேலதிகாரிதான் பல தலைவர்களை உருவாக்கு கிறார். பணியாளர்களின் வலிமையை அதிகரிக்க வேண்டும் என்ற நல்லெண்ணம் உனக்கு உள்ளது என்பதை அறிவேன். அந்த நல்லெண்ணத்தைச் சரியாக நடைமுறைப்படுத்து. வருங் காலத் தலைவர்களை உருவாக்க வேண்டுமென்றால் நீ விரும்பு வதுபோல் அவர்களை வளைக்க முயற்சி செய்யாதே. அவர்க ளாக என்னவாக வளர முடியுமோ அதற்கு ஊக்கம் கொடு.'

விஜயின் வார்த்தைகள் வருணை ஈர்த்தன. வருண், விஜயின் வீட்டை விட்டு விடைபெற்றாலும், அவன் சொன்ன வார்த்தைகள் மட்டும் காதில் ரீங்காரமிட்டுக் கொண்டிருந்தன. 30:40:30 நேரப் பங்கீட்டு முறையை உடனடியாக நடைமுறைக்குக் கொண்டு வந்தான். அவனுடைய குழுவினருக்கு முழு அதிகாரம் அளித்தான். வியாபார வியூகங்களை அமைக்கும் பெரும் பணியில் குழு உறுப்பினர்களை ஈடுபட வைத்தான். இதனால், தான் செய்யும் பணியில் அவனுக்கு ஆசுவாசம் கிட்டியது. குழு உறுப்பினர்களுடன் சுதந்தரமாகப் பழகும் வாய்ப்புக் கிடைத்தது..

வருண் சிறிய தொடக்கத்தைத்தான் மேற்கொண்டான். ஆனால், அது மிகவும் முக்கியமானது. தலைமைப் பொறுப்பை ஏற்ப தென்றால் மற்றவர்களைப் பலப்படுத்துவதுதான் என்பதைப் புரிந்துகொண்டான்.

**படிப்பினை:**

> பணியாளர் ஒருவர் தொழில் வாழ்க்கையில் முன்னேறவும் தலைமைப் பதவியை அடையவும் ஆர்வத்துடன் செயல்படுவார். தலைவர்களுக்கான வெவ்வேறுவிதமான பண்புகளைப் பற்றி அவர் அறிந்திருக்க வேண்டும். தலைமைக்கும் குழு உறுப்பினர்களுக்கும் இடையே உள்ள இயங்கு விசையை நன்கு அறிந்திருக்க வேண்டும். அப்போதுதான் தொழில் வாழ்க்கையில் வெற்றி களைக் குவிப்பதோடு சந்தோஷமாகவும் வாழ்க் கையை அனுபவிக்க முடியும்.




திறமையில்லாத மேலதிகாரி:

இவ்வகை மேலதிகாரி தானும் முன்னேறுவதில்லை; பிறரையும் முன்னேறவிடுவதில்லை. பணியாளரின் முன்னேற்றத்துக்கு இவர்கள் ஒரு தடைக்கல். முட்டுக்கட்டை. இவர்கள் திறமை யற்றவர்கள். அதோடு பணிபுரிபவர்களின் உணர்வுகளைப் புரிந்து கொள்ளவும் மாட்டார்கள்.இத்தகைய நபர்களை எளிதில் அடையாளம் கண்டு கொள்ளலாம். இவர்களைச் சக பணியாளர் களும் நிர்வாகத்தின் மேலதிகாரிகளும் மதிப்பதில்லை; யாரும் இவர்கள் மீது நம்பிக்கை வைப்பதில்லை.

| உள்ளார்ந்த பண்புகள் | வெளிப்படையான அடையாளங்கள் |
|---|---|
| எந்தவித ஒழுங்கும் இருக்காது. எப்போதும் படபடப்பு. மனஅழுத்தம். | குழு உறுப்பினர்களை வழி நடத்தத் தெரியாது. எப்போதுமே குழப்பத்துடன் இருத்தல். |

| | |
|---|---|
| முன் தீர்மானங்களுடன் இருப்பார். எப்படி நடந்து கொள்வார் என்று கணிக்கவே முடியாது. | குழு உறுப்பினர்களோடு, சக பணியாளர்களோடு, இணைந்து பணி ஆற்ற இயலாமை |
| செயல் திறனின்மை | மீள்பார்வைக் கூட்டங்களில் பிரச்னைகளை மிகைப் படுத்திப் பேசுதல். மேலும், எந்தக் கூடுதல் பொறுப்பு களும் அளிக்காதிருத்தல் |
| தன்னுடைய பதவி பறி போய்விடுமோ என்ற பயத்திலேயே இருத்தல் | வேலையை முறையாகப் பிரித்துக் கொடுப்பதில்லை. யாரையும் நம்புவதில்லை. இரண்டாம் கட்டப் பணி யாளர்களை உற்சாகப்படுத்து வது கிடையாது |

பணியாளரும் மேலதிகாரியும் திறன் மிக்கவர்களாக விளங்கக் கவனத்தில் கொள்ள வேண்டியவை:

| மேலதிகாரியின் கடமைகள் | பணியாளரின் கடமைகள் |
|---|---|
| பணி தொடர்பான எல்லைகளைத் தெரிந்து கொள்வதோடு அதற்கேற்பச் செயல்படுங்கள். முன்னர் இல்லாத பலம் பெருகும். | மேலதிகாரிகளுக்கு உங்கள் ஆற்றலை வெளிப்படுத்தக் கிடைக்கும் வாய்ப்பாக ஒவ்வொரு சூழ்நிலையை யும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். |
| உங்களால் முன்னேற முடியவில்லை என்றால் அடுத்துள்ளவரையாவது முன்னேற விட வேண்டும். குழு உறுப்பினர்கள் சந்தோஷத்தோடு உங்களை ஏற்று மதிப்பார்கள். | உங்கள் முன்னேற்றம் தடைப்படும்போது, என்ன எதிர்பார்க்கிறீர்கள் என்பதைத் தெளிவாக மேல் நிர்வாகத்திடம் விளக்குங்கள். |

| | |
|---|---|
| சக பணியாளர்களிடம் இருந்து உதவிகள் பெற்றுக் கொள்ளத் தயங்காதீர்கள். அது உங்கள் மரியாதையை உயர்த்தும் | முன்னேறுவதற்கான ஆர்வம் இல்லாதவராக மேலதிகாரி இருந்தால் உத்வேகம் கிடைக்க எல்லா விதங்களி லும் அவருக்கு உதவுங்கள். |
| பணியாளர்களை நிர்வகிக்க முடியவில்லையென்றால் தனியாகச் செய்யக் கூடிய செயல்களை ஏற்க வேண்டும் | ஏற்கெனவே ஒரு குழுவை நிர்வகித்துக் கொண்டிருந் தால், உங்கள் திறமை - பண்புகள் வெளிப்படுத்தும் வண்ணம் உங்கள் எல்லை களைப் புரிந்து கொண்டு செயல்படுங்கள். |

**திறமையுள்ள மேலதிகாரி:**

இவர்கள் தம்மை நன்கு நிர்வகித்துக் கொள்வார்கள். கீழ் பணி புரிபவர்- சக ஊழியர்- தம்முடைய மேலதிகாரி என்று தன்னைச் சூழ்ந்தவர்களிடம் எப்படி நன்றாகப் பழக வேண்டும் என்பதை யும் அறிவார்கள். இவர்கள் திறன் மிக்கவர்களாக விளங்கினா லும், இவர்களின் பணி வரம்பைத் தாண்டிச் செல்லமாட்டார் கள். மற்றவரை மேலாளராக வளர்த்துவிட இவர்களுக்குத் தெரியாது.

| **உள்ளார்ந்த பண்புகள்** | **வெளிப்படையான அடையாளங்கள்** |
|---|---|
| சுய பிரதாபம். எப்போதும் தன்னை முன்னிலைப் படுத்திப் பேசுவார்கள் | குழு உறுப்பினர்களைக் காட்டிலும் தன் திறமை - வெற்றிகளையே பிரகடனப் படுத்துவர் |
| பணிகளத்தில் சிறப்பாகப் பணியாற்றுவர். பணியில் கை தேர்ந்தவர் | பெரிய பிரச்னைகள் ஏதும் இல்லாமல் வேலைகளை முடித்துவிடுவார். எனினும் ஒரே மேலதிகாரி, குழுவுடன் மட்டுமே பணி புரிய விரும்புவார் |

| | |
|---|---|
| அறிவை, தகவல்களைச் சேகரித்துக் கொள்வார். அதைப் பயன்படுத்தி அதிகாரத்தையோ முக்கியத் துவத்தையோ பெருக்கிக் கொள்ள விரும்பமாட்டார். | எதைப் பிறருக்குப் பகிர்ந்து கொடுக்க வேண்டுமோ அதைத் தரமாட்டார். தனக்கு விருப்பப்பட்ட முறையிலே யே வேலைகளைப் பகிர்ந்து கொடுப்பார். முக்கியமான விஷயங்களைத் தானே செய்வார். |
| வேலைகளைத் தனியாகவே செய்வார். யாருடனும் கூடிப் பணி செய்யமாட்டார். | கூட்டு முயற்சி எதிலும் பங்கெடுக்க மாட்டார். |
| புதுமை, மாற்றங்கள் போன்றவற்றை எளிதில் ஏற்றுக் கொள்ளமாட்டார். | திறமையான பணியாளர்கள் வெகு காலம் இவரோடு பணி புரிய மாட்டார்கள் |

பணியாளரும் மேலதிகாரியும் திறன் மிக்கவர்களாக விளங்கக் கவனத்தில் கொள்ள வேண்டியவை:

| மேலதிகாரியின் கடமைகள் | பணியாளரின் கடமைகள் |
|---|---|
| பல திறமையான மேலாளர்களை உருவாக்க நேரத்தைச் செலவிட வேண்டும். இதனால் தலைமைப் பொறுப்புத் தேடி வரும். | எல்லாருக்கும் மேலே இருக்கும் உயர் அதிகாரிக்கு உங்கள் திறமைகள் புரியும் வகையில் செயல்படுங்கள். அதே நேரம் உங்களுக்கு நேர் மேலே இருக்கும் அதிகாரியின் மனம் புண்படா மல் பார்த்துக் கொள்ளுங்கள். |
| விதவிதமான மேலாளர் களை நிர்வகிக்க வெவ்வேறு மேலதிகாரிகளுடன் பணி யாற்றிப் பக்குவம் அடைய வேண்டும். | பார்வையில் தெளிவு கிடைக்க உங்களின் துறையைத் தவிர நிறுவனத் தின் பிற நடவடிக்கைகளி லும் பங்கு பெறுங்கள். |

| | |
|---|---|
| உங்களுக்காகச் செயல் படும்படியான அதிதிறமை வாய்ந்த பணியாளர்களை உருவாக்குங்கள். அப்போது தான் நீங்கள் தலைவராக ஆக முடியும். | உங்கள் குழு உறுப்பினரிடம் இருந்து பல நல்ல விஷயங் களைத் தெரிந்து கொள்ள அவர்களோடு நல்ல உறவை வளர்த்துக் கொள்ளுங்கள். அதன் மூலம் அவர்கள் மத்தி யில் நல்ல மரியாதையைப் பெறலாம். |
| பிற துறைகளிலும் நல்ல அனுபவம் கிடைக்கச் சக பணியாளர்களின் முக்கிய மான திட்டங்களில் பங்கு பெறவேண்டும். | உங்களின் நல்ல யோசனையை மேலதிகாரி ஏற்க மறுக்கிறார் என்றால், அந்த யோசனையின் மதிப்பைப் புரிந்துகொள் ளும் நபர் யார் என்று பார்த்து அவரிடம் சொல்லுங்கள். |

**உற்சாகப்படுத்தும் மேலதிகாரி:**

அனைவரும் இப்படியான ஒரு மேலதிகாரியின் கீழ் பணி செய்ய விரும்புவார்கள். ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேல் பணியாளர்கள் பணம், பதவி, அதிகாரம் இவற்றை விட உற்சாகம், மரியாதை முதலியவற்றைத்தான் விரும்புவார்கள். இத்தகைய மேலதிகாரி கள் பணி தொடர்பான விஷயங்களோடு நிற்காமல் பணியாளர் களின் குடும்ப விஷயங்கள், உடல் நலம் பற்றி எல்லாம் சகஜமாகப் பேசுவார். ஒரு புதிய பணியாளரால் இப்படியான மேலதிகாரிகளை அடையாளம் காண்பது மிகவும் எளிது. இவருக்குக் கீழே இருக்கும் நிர்வாகிகள் நீண்ட காலம் பணிபுரிபவர்களாகவும் மேலும் மேலும் உயர்வுகள் பெறுபவர்களாகவும் இருப்பார்கள்.

| உள்ளார்ந்த குணங்கள் | வெளிப்படையான அடையாளங்கள் |
|---|---|
| 'நான்' என்று சொல்வது அல்ல, 'நாம்' என்று சொல்வதே தலைமைக் குணம் என்று நம்புவார். | குழுவின் சிறப்பான செயற்பாட்டை முன் னிலைப் படுத்திக் காட்டுவ தால், திறமை வாய்ந்த மேலாளர்களைக் கவர்வார். |

| | |
|---|---|
| தனக்குத் தெரிந்தவற்றை மற்றவருக்குக் கற்பிப்பார். தனக்குத் தெரியாதவற்றை மற்றவரிடமிருந்து எந்தத் தயக்கமும் இல்லாமல் கற்க ஆர்வமுடன் இருப்பார். | தன் குழுவினரால் மட்டுமல்லாமல், பிற அதிகாரிகளாலும் சக பணியாளர்களாலும் பாராட்டப்படுவார். |
| பிறரது உணர்வுகளைப் புரிந்துகொண்டு மதிப்புக் கொடுத்து நடப்பார். | தன்னுடன் பணிபுரிபவருடன் நண்பர் போல் பழகுவார். ஒட்டு மொத்தக் குழுவினரிடமிருந்து சிறந்த திறமைகளை வெளிக் கொணர்வார். |
| ஊக்கமுடையவர்; பொறுமைசாலி; உடன் பணிபுரிபவர்கள் மீது செல்வாக்குச் செலுத்தும் வலிமை கொண்டவர். | நேர்மறை அதிர்வுகளை வெளிப்படுத்துவார். அனைத்துத் துறைப் பணியாளர்களையும் வேலைகளைக் குறித்த நேரத்தில் செய்து முடிக்க வைப்பதில் வல்லவர். |
| திறமை மிக்கவர்; ஒருமுகப் பட்டுச் செயல்படுபவர். முடிவுகளில் அதிகக் கவனம் செலுத்தக் கூடியவர். | பொது இலக்கு நோக்கிப் பணிக்குழுவை இட்டுச் செல்வார். அப்படியாக மேலதிகாரியுடனே குழுவும் உயர்ந்த நிலைக்குச் செல்லும். |

பணியாளரும் மேலதிகாரியும் திறன் மிக்கவர்களாக விளங்கக் கவனத்தில் கொள்ள வேண்டியவை:

| மேலதிகாரியின் கடமைகள் | பணியாளரின் கடமைகள் |
|---|---|
| மேலாளர்களின் உண்மையான ஆற்றலைக் காட்டித் தருவதோடு, அதை மேலும் வளர்த்துக் கொள்ள உதவ வேண்டும். | திறந்த மனத்துடன் எல்லா விஷயங்களையும் கற்றுக் கொள்ளத் தயாராக இருக்க வேண்டும் |

| | |
|---|---|
| மற்றவர்கள் மீது செல் வாக்கு செலுத்துவதற் கான வழிமுறைகளை மேலாளர்களுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும். இதன் மூலம் அவர்கள் தலைவர் களாக வாய்ப்பிருக்கிறது | பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பதோடு நிற்காமல், அதைச் சிறப்பாக அமல் படுத்தும் கலையைக் கற்றுக் கொள்ளுங்கள். |
| தன் கீழ் பணி புரியும் சில மேலாளர்கள் பிறருடன் சேர்ந்து செயல்பட்டு வளர்ச்சி நிலையை அடைய விரும்பினால் அவர்களின் நலன் கருதி அனுமதிக்க வேண்டும். | உங்களின் பக்குவமும் தகவமைத்துக் கொள்ளும் திறனும் அதிகரிக்க வெவ் வேறான மேலதிகாரி களுடன் பணிபுரியத் தயாராக இருக்கவேண்டும். |
| தொழில் வாழ்க்கை பாதிக்கப்படும் அளவுக்குக் குழுவினரின் தனிப்பட்ட வாழ்க்கையில் ஈடுபடக் கூடாது. | யாருடனும் அளவு கடந்த நெருக்கம் கூடாது. விஷயங் களை உண்மையாகக் கற்றுக் கொள்ள முடியாமல் போய்விடும். |

அதிகாரமளிக்கும் மேலதிகாரி:

இத்தகைய மேலதிகாரிகள் எல்லோராலும் வரவேற்கப்படுவர். அவர்களைக் காணும்போதே உடன் பணிபுரிபவர் ஊக்கமும் ஆக்கமும் பெறுவர். எங்கு பணி செய்தாலும் இவருடன் பணி புரிபவர்களுக்கு இத்தகையோர் ஓர் முன்னுதாரணமாகத் திகழ்வர். உங்களின் திறமைக்கும் மேலாக நீங்கள் சிறப்பாகச் செயல்பட வைப்பார்கள். ஆகையால், இவ்வகை மேலதிகாரிகளுக்கு எங்கு சென்றாலும் சிறப்பு. தொழில் வாழ்க்கையிலும் சொந்த வாழ்க்கை யிலும் பலருக்கு நல்ல முன்மாதிரியாகத் திகழ்வார்கள்

ஒருவேளை பெரிய நிறுவனங்களில் பணிபுரிய வாய்ப்பு உங்க ளுக்குக் கிடைக்காமல் போயிருக்கலாம். ஆனால், இத்தகைய மேலதிகாரி உங்களுக்குக் கிடைத்திருந்தால் பிற்காலத்தில் நீங்களே சொந்தமாகப் பெரிய நிறுவனத்தை உருவாக்கும் அளவுக்கு உயர்வீர்கள்.

| உள்ளார்ந்த குணங்கள் | வெளிப்படையான அடையாளங்கள் |
| --- | --- |
| சிந்தனைத் தெளிவு, நல்ல மதிப்பீடுகள், வலுவூட்டும் தகவல் பரிவர்த்தனைகள். | வலுவடைய/மேலும் வலு அதிகரிக்க அனைவரும் இப்படியானவர்களுடன் பணிபுரிய விரும்புவார்கள் |
| வேகமாகவும், மிக நன்றாகவும் செயலாற்று வதில் நம்பிக்கை கொண் டவர். பிற துறைப் பொறுப்புகளையும் நிர்வகிக்கும் திறன் மிக்கவர். | மேல் மட்ட நிர்வாகம் இவர்களை மிகவும் நம்பும். புதிய திட்டங்களைச் செயல் படுத்தும் கூடுதல் பொறுப்பு களை இவர்களுக்குத் தரும். |
| ஒவ்வொரு பணியாளரும் தம் முழு ஆற்றலை வெளிப்படுத்தும் வண்ணம் பணியாற்ற வேண்டும் என்று எதிர்பார்ப்பார். | கீழ் பணிபுரிபவர்கள் மேன்மேலும் வளர வேண்டும். அவர்களை மட்டுமே நம்பி இருக்கக் கூடாது என்ற கோணத்தில் பணிகளைப் பகிர்ந்து கொடுப்பார்கள். |
| அறிவார்ந்த நடவடிக்கை களோடு பணிவும் காட்டுவார். சராசரித் தனத்துக்கு வெகு மேலான வாழ்க்கை வாழ்ந்து காட்டுவார். | தொழில் ரீதியாகவும், தனிப்பட்ட முறையிலும் இத்தகைய மேலதிகாரிகள் எல்லாராலும் மிகவும் மதிக்கப்படுவர். |
| வெளிப்படையாகப் பேசுபவர். அரை குறை வேலைகளை மட்டுமல்ல 100%க்குச் சற்று குறைவான பங்களிப்புகளைக் கூடத் துளியும் பொறுத்துக் கொள்ளமாட்டார். | வாழ்வின் அனைத்துத் தளங் களிலும் செயல் நேர்த்தியை வெளிப்படுத்துவார்கள். |

பணியாளரும் மேலதிகாரியும் திறன் மிக்கவர்களாக விளங்கக் கவனத்தில் கொள்ள வேண்டியவை:

| மேலதிகாரியின் கடமைகள் | பணியாளரின் கடமைகள் |
|---|---|
| பிறரை வலிமைப்படுத்தும் பல மேலதிகாரிகளை உருவாக்கும் பெரும் பொறுப்பை உணருங்கள் | பக்குவப்பட்ட சரியான கைகளில் வளர்வதைப் போல் சிறந்தது எதுவும் இல்லை. ஊக்கமளிக்கும் மேலதிகாரியால் வளர்த்தெடுக்கப்படுவதைப் பெரும் பாக்கியமாகக் கருதுங்கள் |
| எண்ணங்கள் எப்போதும் நல்லவிதமாக இருக்கும் போது, செயற்பாடுகளும் அவ்விதமே அமைய வேண்டும். பலவந்தமாக அமையக் கூடாது. | அவர்கள் கடிந்து பேசினாலும் உங்கள் நல்லதற்கே எனப் புரிந்து கொள்ளுங்கள். |
| தொடர்ந்து நல்ல மேலாளர்களைக் கண்டெடுத்து எதிர்காலத் தலைவர்களாக உருவாக்குங்கள் | அவர்களின் செயற்பாடுகளை வைத்து ஒரு முடிவுக்கு வராதீர்கள். ஏனென்றால், எங்கு இப்படி நடக்கிறதோ அங்கு படிப்பினை சாத்தியமில்லை |
| வெற்றி மீதான தாகம் குறைவாக இருக்கலாம். ஆனால், நல்ல மனோ பாவம் கொண்டவர்களாகச் சிலர் இருப்பார்கள். அவர்களை அடையாளம் கண்டு வளர்த்தெடுங்கள். | சரியான மனப்பான்மை இருந்தால் போதும். திறமையை (திறமை மற்றும் அறிவு) விரிவடையச் செய்ய முடியும் என்பதை நம்புங்கள். |

உற்சாகப்படுத்தும் மேலதிகாரி ஒரு பணியாளரின் திறமைகளை ஊக்குவிப்பார். அதிகாரமளிக்கும் மேலதிகாரி அது

மட்டுமல்லாமல், பணியாளரின் குறைகளை நிறைவு செய்து ஆற்றலை விரிவடையச் செய்வார்.

வலுப்படுத்துதல் என்றால் உங்கள் அதிகாரத்தை அடுத்தவருக்குக் காட்டுதல் என்று அர்த்தமில்லை. அவர்களுடைய பலத்தை அவர்களுக்கு உணர்த்துவதாகும்.

# 19

## நல்லதையே நாடுங்கள்

விஜய் கடந்த 25 வருடங்களில் தன்னுடன் பணி செய்த அனைவரையும் விருந்துக்கு அழைத்திருந்தான். வருண், ராஜன், வினோத், ரகு போன்றோர் வந்திருந்தார்கள். விஜயின் நினைவுகள் பின்னோக்கி நகர்ந்தன. பல்வேறு நினைவுகள் மாறி மாறி மனத்தில் வந்தன. அதில் ஒரு குறிப்பிட்ட சம்பவம் மனத்தில் ஆழமான தாக்கத்தை ஏற்படுத்தியிருந்தது

விஜயும் அவனது குழு உறுப்பினர்களும் நன்றாகப் பணி செய்த காலகட்டம் அது. உடன் பணிபுரிந்த மேலாளர்களை முன்னுக்குக் கொண்டு வர வேண்டும் என்ற உத்வேகத்தில் விஜய் அவர்களின் வரம்புக்கும் மீறிப் பணியாற்றச் சொல்லிவந்தான். மிகப் பெரிய அளவில் அவர்கள் மீது பாரத்தை ஏற்றினான். விஜயும் சரி அவனுடன் பணி புரிந்த மற்றவர்களும் சரி சாறு பிழியப்பட்டு வெளியே வந்து விழும் கரும்பின் சக்கை போல் ஒவ்வொரு நாளும் வீட்டுக்குத் திரும்புவார்கள். தவறுகளைக் கண்டுபிடித்து சரி செய்யவேண்டும் என்ற முனைப்பில் விஜய் தீவிரமாக இருந்ததால் 'குறை காணும் மேலதிகாரி' என்ற பட்டப் பெயர் கிடைத்திருந்தது

எல்லோருமாகச் சேர்ந்து பணி புரிந்ததால் நல்ல பலன்தான் கிடைத்தது. என்றாலும் ஒருவருக்கும் நிறைவான ஆனந்தம் ஏற் பட்டதே இல்லை. தொடர்ந்து குற்றம் கண்டுபிடிக்கப்பட்டு வந்ததால், அனைவரும் சராசரி பணியாளராகத் தங்களைக்

கருதினார்கள். இதனால் அவர்களுடைய முழு வலிமையையும் பயன்படுத்தப்பட வாய்ப்பில்லாமல் போனது. எல்லாவற்றிலும் முழுமையையே வலியுறுத்தியதால், விஜயின் கீழ் பணிபுரிந்த மேலாளர்கள், மிகுந்த நெருக்கடியில் துவண்டனர். வேகமும் திறமையான செயற்பாடும் அளவுக்கு அதிகமாக வலியுறுத்தப் பட்டதால் பெரும் மன அழுத்தத்துக்கு ஆளானார்கள். அது, மொத்தக் குழுவின் செயல்பாட்டையும் பாதித்தது. பணியாளர் களிடையேயான நட்புறவு சிதைந்து போய்க் கொண்டிருந்து. அடிக்கடி நிகழ்ந்த மீள்பார்வைக் கூட்டங்கள் அடிப்படையான சிக்கல்களை அலசிப் பார்க்காமல், பிரச்னைகளைப் பரிவர்த்தனை செய்து கொள்ளும் கூட்டங்களாகவே இருந்தன. நிலைமையை மாற்ற வேண்டும் என்று முடிவு செய்தான்.

ஒவ்வொருவரின் சாதகமான அம்சத்தின் மீது கவனத்தைக் குவித்துத் திறமையை அதிகப்படுத்துவதற்குப் பதிலாக, அவர் களின் பலவீனங்களை மட்டுமே பார்த்து வந்ததுதான் இந்தப் பிரச்னைகளுக்குக் காரணம் என்று புரிந்து கொண்டான். தன்னைச் சுற்றிப் பணி புரியும் ஒவ்வொருவரின் ஆற்றலைப் பெருக்கி அவர்களைத் திறமைசாலிகளாக உருவாக்க வேண்டும் என்றுதான் விரும்பினான். என்றாலும், எந்த விஷயங்களில் தவறுகள் இருக்கின்றன... அதை எப்படிச் சரி செய்யலாம் என்று மட்டுமே பார்த்து வந்தது தவறு என்று புரிந்தது. எந்த ஒருவருடைய நல்ல அம்சத்தையும் தான் இதுவரை பாராட்டியதே இல்லை என்பதை உணர்ந்துகொண்டான். தொடர்ந்து சிந்தித்ததில் சில தெளிவுகள் பிறந்தன.

- என் எண்ணங்கள் நல்லவை. ஆனால், மிகவும் கறாரான தொனியிலேயே வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றன.
- உடன் பணிபுரிந்தோரை உயர்த்த நினைத்துத்தான் செய்யப் பட்டன. என்றாலும், குற்றங்காணும் தொனி அதற்கு உதவவே இல்லை.
- சொல்லப்பட்ட விஷயங்களில் சாரமிருந்தும் அவற்றை வெளிப்படுத்திய விதம் கேட்போரின் சுய கௌரவத்தைக் காயப்படுத்திவிட்டிருக்கிறது
- கடந்த காலத்தில் என்னவெல்லாம் தவறாக நடந்தன என்பதை மட்டுமே அலசும் ஒன்றாக மீள்பார்வைக் கூட்டங்கள் ஆகிவிட்டிருந்தன.

- தவறுகளுக்கு தண்டனைகள் தந்திருக்கிறேன். ஆனால், நல்ல செயல்களுக்குப் பாராட்டோ சன்மானமோ எதுவும் தரவில்லை.
- நடைமுறைக்குச் சாத்தியமில்லாத இலக்குகளை முன் வைத்திருக்கிறேன். அது பலருக்குப் பெரும் மன அழுத் தத்தை ஏற்படுத்தியுள்ளது.

விஜய், அடுத்த மாத மீள் பார்வைக் கூட்டத்தை வித்தியாசமான முறையில் நடத்தத் தீர்மானித்தான். எடுத்த எடுப்பிலேயே ஒரு விஷயத்தைச் சொன்னான். இந்த மாதம் நாம் நம் துறையின் செயற்பாடுகளை விமர்சிப்பதற்கு முன் ஒவ்வொருவரும் பக்கத் தில் அமர்ந்திருப்பவரின் சாதனைகளையும் நல்ல விஷயங்களை யும் பரிமாறிக் கொள்வோம் என்று சொன்னான். ஆனால், யாரும் எதையும் சொல்ல முன்வரவில்லை.

ஏனென்றால், இத்தனை நாள்களாகக் குற்றங்குறைகளை மட்டுமே பட்டியலிட்டு வந்திருந்ததால் யாருக்கும் பாராட்டிப் பேச வாய் வரவில்லை. வழக்கம் போல் என்றால், குற்றங் குறைகள் மடை திறந்த வெள்ளமாக வெளிப்பட்டிருக்கும். விஜய் புழுங்கினான். நக்கீரர்களாக குற்றங்குறை காணும் பழக்கத்துக்கு அனைவருமே அடிமையாகிப் போனார்களே என்று வருந்தினான்.

சில நிமிடங்களுக்குப் பிறகு விஜய் ஆரம்பித்தான். தன்னால் கடுமையாக விமரிசிக்கப்பட்ட பிறகும் நன்கு பணி செய்த ஒரு மேலாளரைச் சுட்டிக்காட்டி அவர் எந்த விதத்தில் தன்னை மேல்மட்ட நிர்வாகத்தின் உடும்புப் பிடியிலிருந்து காப்பாற்றி னார் என்பதை நன்றி கலந்த கனிவோடு தெரிவித்தான். பொதுவாக, மேசை மீது கையால் குத்துதல், ஆவேசமான வாதப் பிரதிவாதங்கள் நிகழும் உறுப்பினர் கூட்டத்தில் முதல் முறை யாகக் கரகோஷம் கேட்கத் தொடங்கியது. அடுத்தடுத்து உறுப்பினர், மேற்பார்வையாளர், கண்காணிப்பாளர், துறைத் தலைவர், என அனைவரும் தமக்கு நிச்சயிக்கப்பட்ட இலக்கை அடைய மற்றவர் உதவியதை விவரிக்கத் தொடங்கினர். கூட்டம், நிர்ணயித்த நேரத்தையும் தாண்டிச் சென்றது.

பிரிவு உபசார விழாவின் போது மட்டும்தான் ஒருவரைப் பாராட்டிப் பேச வேண்டுமா! இத்தகைய நிகழ்ச்சி ஏன் அடிக்கடி நடக்கக்கூடாது என்று விஜய் சிந்திக்கத் தொடங்கினான்.

மறுநாளே முடிவெடுத்தான். இனி மேலான மீள்பார்வைக் கூட்டங்கள் உணர்ச்சிக் கொந்தளிப்பாகவோ குற்றங்குறை காணும் மன்றமாகவோ அமையாமல் நடக்கச் சில விதிமுறை களைத் தன் குழுவினரிடம் சொன்னான்:

- தினமும் எந்தப் பிரச்னைகளும் விவாதிக்கப்படாமல் பணி யாளர்களிடையே நட்புறவை வளர்க்கும் நோக்கில் 'பத்து நிமிடக் கூட்டங்கள்' நடக்க வேண்டும்.
- பரஸ்பர நல்ல அம்சங்களைப் பாராட்டும் கூட்டங்கள் மாதம் தோறும் நடத்தப்பட வேண்டும்.
- ஒவ்வொருவரிடமும் இருக்கும் குறைபாடுகளை மேம் படுத்துவது பற்றிப் பேசுவதற்கு முன்பாக, நல்ல அம்சங் களைப் பாராட்டிப் பேச வேண்டும்.
- எதிர்கால வளர்ச்சிக்கு உதவும் நோக்கிலேயே கடந்த கால நிகழ்வுகள் அலசப்பட வேண்டும்.
- சில மீள்பார்வை கூட்டங்கள் உறுப்பினர் மற்றும் மேலாளர் களின் மேஜைக்கு அருகிலேயே நடத்தப்படவேண்டும்.
- கூட்டம் முடிந்ததும் உறுப்பினர்கள் அனைவரும் ஒன்றாகக் கூடிக் கைகளைக் கோத்தபடிச் சிறிது நேரம் நிற்க வேண்டும்.

ஒவ்வொருவரும் அடுத்தவர்களிடம் இருக்கும் நல்ல விஷயங் களை மட்டுமே பார்க்க ஆரம்பித்ததால் அனைவருடைய சுய கௌரவமும் அதிகரித்தது. இதில் ஒரு நல்ல அம்சம் என்னவென் றால், ஒருவருடைய சுய கௌரவம் அதிகரித்தால் அவரைச் சுற்றியுள்ளவர்களின் நிலையும் உயர்ந்துவிடுகிறது. பிரச்னைகள் சாராத 'பத்து நிமிடப் பேச்சுவார்த்தை' மேலாளர்களுக்கு விஜயுடன் நல்ல நெருக்கத்தைக் கொண்டு வந்தது. அதுபோல் மேலாளர்களுக்கும் அவர்களுடைய குழு உறுப்பினர்களுக்கு இடையிலும் நல்ல நட்புறவு உருவானது. ஊர் கூடித் தேர் இழுப் போம் என்றபடி, ஒருவரின் பிரச்னைக்கு மற்றவர் ஆலோசனை அளித்தார்கள். அதை நடைமுறைப்படுத்துவதற்கும் உதவி னார்கள். புதுப்புது யோசனைகள் பூக்கத் தொடங்கின. ஒருவர் மற்றவரின் செயலில் நம்பிக்கை வைக்கத் தொடங்கினார்கள். ஒவ்வொருவரும் தம்மால் முடிந்த அள்வுக்கு ஆற்றலை

வெளிக்காட்டினார்கள். அதனால், தானும் பலன் பெற்றார்கள். உடன் பணிபுரிவோருக்கும் பலனளிக்கும் வண்ணம் நடந்து கொண்டார்கள். நிறுவன ஆண்டுவிழாவில், விஜயின் துறைக்கு 'நிறுவனத்தின் சிறப்பான துறை' என்ற சுழற்கேடயமும் பாராட்டுச் சான்றிதழும் கிடைத்தது.

விஜய் கடந்த காலத்தில் நடந்ததை நினைத்துப் பார்த்தபோது கண்களில் ஆனந்தக் கண்ணீர் வழிந்தது. அதைப் பார்த்து ஆச்சரியப் பட்ட மனைவி வாசுகி, 'என்ன விஷயம்' என்று கேட்டாள். விஜய், தான் மனத்துக்குள் வாழ்ந்த நிகழ்ச்சியைச் சொன்னான். 'இவர் களுடன் பணிபுரிந்ததை மிகவும் பெருமையாகக் கருதுகிறேன். தங்கள் தொழில் வாழ்க்கையில் பல படிகள் முன்னேறி இருக் கிறார்கள். அடுத்த தலைமுறைப் பணியாளர்கள் முன்னேற இவர்கள் வழி செய்தும் கொடுக்கிறார்கள். நான் இவர்களிடம் எப்போதும் குறைகளையே கண்டு வந்திருக்கிறேன். இருந்தும் இவர்கள் என்னிடம் இருக்கும் நல்ல விஷயங்களை மட்டுமே பார்த்து மதித்து வந்திருக்கிறார்கள். தொழில் வாழ்க்கையில் மட்டுமல்லாமல் சொந்த வாழ்க்கையிலும் என் ஆலோசனைகள் கேட்டு வருகிறார்கள். அது என் பொறுப்பை மேலும் அதிகரிக் கிறது' என்று நெகிழ்ந்தார் விஜய்.

விஜயின் மனைவி வாசுகி பாராட்டியபடி கூறினாள் : 'நல்லது நினைப்பவர்களுக்கு நல்லதே நடக்கும். உங்கள் மனம் நல்லதே நினைக்கும். எனவே, உங்களுக்கு நல்லதே நடந்திருக்கிறது. பணி நிமித்தமாக நீங்கள் கூறியது எதுவானாலும் அதன் பின்னால் இருந்த உங்கள் நல்ல மனதை அவர்கள் அடையாளம் கண்டு கொண்டார்கள். அதனால்தான் அவர்கள் உங்களைப் பெரிதும் மதிக்கிறார்கள்.' விஜய்க்கு மனைவியின் வார்த்தைகள் சுகமான சங்கீதமாக இருந்தது.

'அந்தச் சம்பவம் நடந்து முடிந்த பிறகு, யாருடன் எனக்கு ஒத்துப் போகச் சிரமமாக இருந்தாலும், உடனே கண்களை இறுக மூடி ஒன்றிரண்டு வினாடிகள் அவர்களின் நல்ல பண்புகளை நினை வுக்குக் கொண்டுவருவேன். இப்படி நல்ல நல்ல விஷயங்களை ஒவ்வொருவரிடம் பார்த்துப் பார்த்து எல்லாமே எனக்கு நல்ல விதமாகவேபடுகிறது. என்னையும் உயர்த்தி வருகிறது. இனிவரும் நாட்களிலும் நல்லவற்றையே எல்லோரிடமும் காண்பேன்' - என்று விஜய் சந்தோஷத்தில் சொன்னான்

**படிப்பினைகள்:**

- மற்றவர்களின் முழு ஆற்றலை வெளிக்கொண்டு வர எளிய சிறந்த வழி, அவர்களிடம் இருக்கும் நல்ல விஷயங்களை மட்டும் பார்ப்பதுதான்.
- தன்னை நல்லவனாகக் காண்பவனே மற்றவர் களிடம் உள்ள நல்ல குணங்களைக் காண முடியும்
- எல்லாரிடமும் நல்ல குணங்கள் இருக்கத்தான் செய் கின்றன. முக்கியமாகக் குற்றங்களைக் கண்டு, அவற்றைக் களைந்து வளர்ச்சியைக் கொண்டுவர அதிக ஆர்வம் காட்டுவதால், ஒருவரிடம் உள்ள நல்ல குணங்கள் நம் கண்ணில் படாமல் போகின்றன.
- ஒருவரிடம் பல குறைகள் தென்பட்டாலும் அவர் களின் சுயமரியாதையை நாம் மதித்து நடந்து கொண்டால் அவர்கள் நம்மை மரியாதையுடன் நடத்துவார்கள்.
- தகவல் பரிமாற்றங்கள் அதிரடியாக இல்லாமல் உறுதியாக பக்குவமாக இருக்கவேண்டும். இதுவே பண்பட்ட தலைவர் ஆவதற்கான முதல் படி.
- மற்றவரைத் திருத்தி மேம்படுத்துவதுதான் நம் நோக்கம் என்றாலும் நம் பேச்சில் மரியாதையும் பணிவும் இருந்தால்தான் நாம் சொல்வதை நிதான மாகக் கேட்பார்கள். நம்மை மதித்து நாம் சொல் வதை வாழ்க்கையில் கடைப்பிடிப்பார்கள்.

நல்ல தலைவராக வேண்டுமென்றால்
நல்லதையே கண்டு சொல்ல வேண்டும்.

# 20

## நில்லாமல் தொடரும் பயணம்

தொழில் வாழ்க்கையில் 25 வருடங்கள் நிறைவு செய்ததைக் கொண்டாடும் வகையில், விஜய், விழாவுக்கு ஏற்பாடு செய்திருந் தான். தனது வெற்றிக்கு நேரடியாகவும் மறைமுகமாகவும் உதவிய நபர்கள் அனைவருக்கும் நன்றி தெரிவிக்க அந்தச் சந்தர்ப் பத்தைப் பயன்படுத்திக் கொண்டான். அவருடன் பணி புரிந்த அனைவருடைய குழந்தைகள், பெற்றோர் என எல்லோரும் பங்கு பெறும் குடும்ப விழாவாக அது நடந்தது. பணியாளர்கள் அனைவரும் ஒன்றாக வட்டமாக அமர்ந்து அவரவர்களின் அனுபவங்களைப் பகிர்ந்து கொண்டிருந்தார்கள்.

விஜய் எல்லாரையும் பார்த்துப் பேச ஆரம்பித்தான் : 'இந்நாள் ஒரு பொன்னாள். என் மகிழ்ச்சியை அனைவருடனும் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். கடந்த 25 வருடங்களில் என்னுடன் பணிபுரிந்த அனைவரையும் குடும்பத்தாரோடு ஒன்றாகப் பார்க்கும்போது ஏற்படும் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. நாம் அனைவரும் வெவ்வேறான பூகோள - கலாசார - பொருளாதார - சமூகப் பின்னணியிலிருந்து வாழ்க்கையை ஆரம்பித்திருந் தோம். ஆனால், இன்று தனித்துவம் வாய்ந்த குடும்பமாக விளங்குகிறோம். மின்னியல் சாதனங்களால் மட்டுமல்லாமல் உணர்ச்சிபூர்வமாகவும் நாம் ஒன்றாக இணைக்கப்பட்டிருக் கிறோம். இந்த நாளை நாம் என்றும் மறக்காமல் இருப்பதற்கு 'அனுபவ அரங்கம்' என்று மாதாமாதம் ஒரு கூட்டத்தைக் கூட்டுவோம். அதில் தினமும் சந்திப்பவை, சாதிப்பவை, கற்றுக்

கொள்ளும் புதிய விஷயங்கள் என்று எல்லாவற்றையும் பகிர்ந்து கொள்வோம். பௌத்தர்கள் 'புத்தம் சரணம் கச்சாமி; தர்மம் சரணம் கச்சாமி; சங்கம் சரணம் கச்சாமி' என்று சொல்வார்கள். நம் வழிகாட்டியுடன் தொடர்பில் இருப்போம். நல்ல மதிப்பீடு களைப் பின்பற்றுவோம். ஒத்த அலைவரிசை கொண்ட, சரியான மனிதர்களுடன் சேர்ந்திருப்போம் என்று அதற்கு இந்த இடத்தில் நாம் அர்த்தம் எடுத்துக் கொள்ளலாம்.'

ராமநாதன் பேசினார் 'விஜய்! உன் பணியின் நேர்த்தியை அதி கரிக்கப் பணியைத் தவிர்த்த சிலவற்றைச் செய்வதாகச் சொல் வாய் அல்லவா. அப்படிச் செய்ததைச் சொல்.'

ராமநாதன் இப்படிப் பேச்சை ஆரம்பித்தது விஜய்க்குப் பிடித்திருந் தது. 'நான் தலைவராவது குறித்து இளைஞர்களுக்கு கற்றுக் கொடுக்க ஆரம்பிப்பேன். கடைசியில் அவர்களிடமிருந்து பல விஷயங்களைக் கற்றுக்கொள்வேன். 'உனக்குள் இருக்கும் மாணவன் தயாராகும்போதுதான் உனக்கான ஆசிரியர் உன் முன் தோன்றுவார்' என்ற ஜென் மேற்கோள் நினைவுக்கு வருகிறது. ஆசிரியரிடம் உள்ள மாணவன் விழித்திடும் போது தான் ஆசிரியரின் போதனா மொழிகள் வெளிப்படும் என்பதில் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை உண்டு. சொல்லப் போனால் ஒருவகையில் என் மாணவர்கள் எல்லாம் என் ஆசான்கள்.'

வருண் சொன்னான் 'இதுதான் வாழ்க்கையின் சுவாரஸ்யமே. வாழ்வின் கடைசிநாள் வரையில் நாம் கற்றுக்கொண்டே இருப்போம்.'

ராஜன் இதை வலுப்படுத்தினான் ' இதுதான் தொடர்ச்சியான வளர்ச்சிக்கு ஒவ்வொருவரும் மேற்கொள்ள வேண்டிய சபதம்.'

விஜய் பேச ஆரம்பித்தான் : 'வெற்றி பெறுவதற்கும் மகிழ்ச்சி அடைவதற்கும் வாழ்க்கையின் நிதர்சனங்களோடு நாம் ஒருமித்துச் செல்வது மிகவும் அவசியம். தலைமைப் பொறுப்பை ஏற்று விட்டால், நம் கீழ் பணிபுரிபவரின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்து வதை நம் இலக்காகக் கொள்ள வேண்டும். தனக்குக் கீழே பணி புரியும் பணியாளர்களோடு ஆர்வத்தோடு ஒத்துப் போவது தலைமைப் பொறுப்பை ஏற்பவரின் முக்கியமான குணங்களில் ஒன்று. மற்றவர்களின் செயற்பாட்டை மதித்து, அதற்கேற்ப தம்மை மாற்றிக் கொள்வதுதான் தலைமைக்கு அழகு. ஏனென்றால், நம் திறமை மட்டுமல்லாமல், நம்முடன் பழகுபவர்

களுடன் ஒருங்கிணைந்து பணியாற்றுவதும் நம் வளர்ச்சியைத் தீர்மானிக்கும்.'

ராஜன் சொன்னான் : 'மற்றவர்களை மதித்து, அதற்கேற்ப என்னைச் சற்று மாற்றிக்கொள்வது பிறருடன் எளிமையாக ஒருங் கிணைந்து செயல்பட எனக்கு மிகவும் கை கொடுக்கிறது.'

விஜய் கூறினான் 'முற்றிலும் அவர்களின் நலனுக்காகவே என்றா லும் நம்மைச் சுற்றியுள்ளவர்களை மாற்ற முயற்சி செய்வது எந்தப் பலனையும் தராது. உங்களின் எண்ணங்கள் நல்லதாகக் கூட இருக்கலாம். ஆனால், அவர்களாகத் தயாராகாத வரையில் நீங்கள் யாரையும் மாற்ற முடியாது. எனவே, முடிந்த வரையில் நம்மை நாம் மாற்றிக் கொள்வது நல்லது.. இதனால் அகத்திலும் அலுவலகத்திலும் அமைதி திகழும். ஆன்மிகமாகப் பார்த்தா லும், ஆண்டவன் அளிப்பது எதுவானாலும், அதை அப்படியே ஏற்றுக் கொண்டு அவருக்குத் தக்கபடி மாறுவதுதானே உண்மை யான பக்தி.'

ராமநாதன் சொன்னார் : 'விஷயங்களை அப்படியே ஏற்பது நம் அகக் கண்களைத் திறந்துவிடும். நம்மை மாற்றிக் கொள்வது பிறர் தொடர்பாக நம் மனத்தைத் திறந்துவிடுகிறது. அவர்களோடு ஒத்திசைந்து செயல்படுதல் நம் இதயத்தைத் திறந்து வைத்து நம்மிடம் ஒரு பக்குவத்தை ஏற்படுத்தும்.'

ராஜன் சொன்னான் 'தொழில் வாழ்க்கையில் மட்டும்தான் ஏற்புடைமை, மாற்றம், ஒத்திசைவான தன்மை போன்றவை பயன்படும் என்பதல்ல. அது தவிர்த்த பல விஷயங்களுக்கும் கை கொடுக்கும்.'

'ஒருவரைப் பற்றி நமக்கு என்ன தெரியுமோ அதை வைத்து அவரை எடைபோடும்போது, அவரைப் பற்றி உங்களுக்குத் தெரியாத பல விஷயங்களைக் கற்கும் பொன்னான வாய்ப்பை நழுவவிடுகிறீர்கள். உடன் பணிபுரிபவரிடம் திறந்த மனத்துடன் பழகினால் உங்கள் வளர்ச்சிக்குக் கை கொடுக்கப் பலரும் முன் வருவார்கள்' என்று சரத் சொன்னான்.

ராஜன் சொன்னான் 'நம்மை விட அனுபவம் மிகுந்தவர்கள், சக பணியாளர்கள் ஆகியோரிடம் நாம் கற்க வேண்டிய விஷயங்கள் ஏராளம். ஆனால், அவர்களைப் பற்றி 'இவ்வளவுதான் இவர்' '

இவரிடம் இன்னும் கற்க என்ன இருக்கிறது' என்று நினைக்கிறோம். கற்பதற்கு அவர்களிடம் ஒன்றும் இல்லை என்ற முடிவுக்கு வந்து விடுகிறோம். இதனால் பல விஷயங்களை இழந்துவிடுகிறோம். நம் பதவி- அனுபவத்தைப் பாராமல், எத்தனை முறை மற்றவர்களிடமிருந்து கற்க நாம் முற்பட்டிருக்கிறோம் என்று யோசித்துப் பாருங்கள். நாம் தவறாக ஒரு முடிவெடுத்துவிட்டால், யாரிடமிருந்தும் கற்பதற்கு எதுவும் இருக்காது. ஒன்றும் கற்கவில்லையென்றால் வளர்ச்சி கிடையாது.'

முத்தாய்ப்பாக ராமநாதன் பேசினார்: 'உங்கள் அனைவருடனும் ஏதோ ஒரு கால கட்டத்தில் பணி புரிந்திருக்கிறேன் என்று நினைக்கையில் மிகவும் பெருமைப்படுகிறேன். 'முன்னேற்றம் என்பது வாழ்க்கையில் தொடர்ந்து நிகழும் பயணம்' என்ற எண்ணமே உங்கள் அனைவரையும் இணைக்கிறது என்று நினைக்கிறேன். 'பணியில் இருந்து ஓய்வு பெறுங்கள்; ஆனால், ஒருபோதும் வாழ்க்கையில் இருந்து ஓய்வு பெற முற்படாதீர்' என்ற வாக்கியத்தைக் கேட்டிருப்பீர்கள். இது உங்கள் நினைவில் இருந்தால் வாழ்க்கையின் கடைசி நாள் வரை ஓய்வே இல்லாமல் ஒவ்வொருவரும் உழைப்பீர்கள்.

முன்னேற்றம் என் மூச்சு... இதை இதயத்தில் பதித்துவிட்டால், எல்லோருக்கும் எடுத்த காரியம் யாவிலும் வெற்றியே கிடைக்கும். இன்று இந்தளவுக்கு உயர்ந்து இருப்பதற்கும், நாளை எதிர்பார்க்கும் அளவுக்கு உயர்வதற்கும் இந்த வலுவான எண்ணம் தான் காரணம்.'

ராமநாதன் மீண்டும் தொடர்ந்தார் : 'நாம் அனைவரும் தொடர்ந்து கற்போம்; தொடர்ந்து வளர்ச்சி காண்போம்; பக்குவப்படுவோம்; நமக்கும் நிறுவனத்துக்கும் நாட்டுக்கும் பலவற்றைக் காணிக்கையாக்குவோம். இந்த அரிய விழாவில் கலந்து கொள்ள வாய்ப்பளித்த அத்தனை நல்ல உள்ளங்களுக்கும் என் நன்றி!' - கண்கள் ஆனந்தத்தில் நிறைய ராமநாதன் பேசி முடித்தார்.

காலம் உறைந்தது; நண்பர்கள் அனைவரும் கைகளைக் கோர்த்துக் கொண்டு சிலைபோல் நின்றனர். அவர்களின் கண்கள் கசிந்திருந்தன. ஆனந்தத்தில் ஆண்டவனுக்கு நன்றி சொன்னார்கள். அருமையான நண்பர்கள்.. அருமையான வாய்ப்புகள்.. அருமையான வாழ்க்கை.. அனைத்துக்கும் நன்றியைக் காணிக்கையாக்கினர்;

நண்பர்களின் குடும்பத்தார் விடை பெற ஆரம்பித்தனர்; ஆனால், நண்பர்களால் எளிதில் பிரிய முடியவில்லை. மெல்ல மெல்ல நகர்ந்தாலும் அவரவர் உள்ளங்களை மற்றவர்களுக்குத் தந்து விட்டு, மற்றவரின் உள்ளங்களை ஏந்தி... நல்ல நினைவுகளில் நீந்தி, பிரிய மனமில்லாமல் விடைபெற்றுச் சென்றார்கள்.

**...வளர்ச்சியின் நெடும் பயணம் தொடர்கிறது.**

---